# ஆவணம்



இதழ் - 21 - 2010

**தமிழகத் தொல்லியல் கழகம்**

தஞ்சாவூர்

# ஆவணம்

இதழ் 21

# AVANAM

VOL - 21

சு. இராசவேலு
பதிப்பாசிரியர்

தமிழகத் தொல்லியல் கழகம்
தஞ்சாவூர்

ஆவணம் : 21 (2010)
Avanam, Journal of the Tamil Nadu Archaeological Society, Thanjavur


---



The publication of this Journal has been financially supported by the indian council of Historical Research The responsibility for the facts stated or opinions expressed is entirely of the author andnot of the ICHR **- Editor**

*கணினி அச்சு* : ரமணா கிராபிக்ஸ், *அண்ணாநகர், 98404 33940*
*அச்சிட்டோர்* : ஜப்பானிகா, *இராயப்பேட்டை, 94442 99224*
*அட்டைப் படம்* : தஞ்சைப் பெரியகோவில் ஆயிரமாவது ஆண்டிற்காக

# பொருளடக்கம்

பக்கம்

கல்வெட்டு

## தொல்லியல்

## அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்



## கருத்து பரிமாற்றம்

# 1. மருங்கூர் - மட்கல ஓடுகளில் தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்புகள்

ஜெ.ஆர். சிவராமகிருஷ்ணன்,
பி. கலைச்செல்வன்,
எஸ். கண்ணன்,
சிதம்பரம்.

**இடம் :** *கடலூர் மாவட்டம், பண்ருட்டி வட்டத்தில் மருங்கூர் வடலூரிலிருந்து 17 கிலோ மீட்டர் தொலைவில் கொள்ளுகாரன் குட்டையிலிருந்து விருத்தாசலம் செல்லும் சாலையில் அமைந்துள்ளது இங்கு இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் தமிழ் பிராமி பொறித்த பானை ஓடுகள் கள ஆய்வின் மூலம் கண்டறியப்பட்டன*

**காலம் :** *2ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *கடந்த 6 10 2009 அன்று மருங்கூரில் இராமலிங்கம் படையாட்சிக்கு சொந்தமான காட்டு முந்திரித் தோப்பின் மேட்டுப் பகுதியில் சாலை அமைப்பதற்காக கனரக எந்திரம் மூலம் மண் எடுக்கப்பட்ட ஒரு மீட்டர் ஆழ பள்ளத்தில் முதுமக்கள் தாழிகளின் சிதைந்த பகுதிகள், கருப்பு - சிவப்பு மட்கல ஓடுகள், விளக்கு, எலும்பு ஆகியன காணப்பட்டன சிதைந்த தாழி ஒன்றின் வெளி அடிப்பகுதியில் தாழியைச் சுற்றி சடங்கிற்காக வைக்கப்பட்ட நான்கு கருப்பு சிவப்பு மட்கலன்களும், 45 செ.மீ. நீள இரும்பு வாள் ஒன்றும் இருந்தன இங்கிருந்து எடுக்கப்பட்ட மட்கலன் ஒன்றில் எழுத்துப் பொறிப்புகள் காணப்பட்டன மேலும் இதே பகுதியில் மண் எடுக்கப்பட்ட மற்றொரு பள்ளத்தில் கிடைத்த கருப்பு சிவப்பு ஓடுகளில் எழுத்துப் பொறிப்பு, குறியீடுகள் இருந்தன இப்பகுதியில் தாழிகளை மூடுவதற்காக பயன்படுத்தப்பட்ட 180 செ.மீ. விட்டம் உடைய மிகப் பெரிய வட்ட வடிவ கருங்கல் பலகை ஒன்றும், வேறு சில பலகைக் கற்களும் காணப்பட்டன*



எழுத்துப் பொறிப்பு

ஓடு 1அதியகன்

ஓடு 2 முதலிரண்டு எழுத்துகள் 'அம்' என்றும்

அடுத்த மூன்று எழுத்துகள் குறியீடுகளாகவும் கொள்ளலாம்.



# 2. சுனை வேடியப்பன் நடுகல்

**கோ. சசிகலா,**
**மதுரை**

**இடம் :** *திருவண்ணாமலை மாவட்டம், சவ்வாது மலை அடிவாரத்தில் சுனை வேடியப்பன் கோவில். இந்த இடத்தைச் சென்றடைய செங்கம் - திருப்பத்தூர் பெருவழியில் செட்டிவலசு - மகனூர்பட்டியில் இறங்கி 5 கி.மீ. செல்ல வேண்டும்.*

**அரசன் :** *நுளம்பன் [!]*

**காலம் :** *9-10ம் நுற்றாண்டு*

**செய்தி :** *ஒரு வீரனுக்கு எடுத்த நடுகல். செய்தி தெளிவாக இல்லை. வட்டெழுத்து - தமிழ் கலந்துள்ளன.*

1. ஸ்தி ஶ்ரீ நொளம்பளிங்கி..
2. வேநாடாளப் பள்ளிய் கயமுடைய
3. மோடையந் மகந் துட்டிம்பர்க்கு
4. தம்பிஞ்சிய்யந் செய்வித்தாந்
5. திச்சாந வெந்நீ
6. சிரிய்கோட
7. ன் கல்

# 3. செங்கம் பகுதியில் புதிய நடுகற்கள்

சி. இளங்கோ,
த. செந்தில்குமார்,
வேலூர்

**3:1**

**இடம் :** திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் ஏரியில் உள்ள நடுகற்கள். இந்த ஏரி காயம்பட்டு கிராமத்தை ஒட்டியுள்ளது.

**காலம் :** முதலாம் இராசராச சோழன், ஆண்டு 14 [999]

**செய்தி :** நடுகல்லின் பின்புறம் இடம் பெற்ற இம்மெய்க்கீர்த்தியில் இடம் பெற்ற காந்தளூர்ப் போர் பற்றிய விவரம் இதுவரை வேறு எந்த மெய்க்கீர்த்தியிலும் இடம் பெறவில்லை. இந்நடுகல்லில் தான் முதன்முதலாக கிடைக்கிறது. இராசராசன் காந்தளூர்ப்போரில் தன்னை எதிர்த்த மலையாளர்களை வெற்றி கொண்டு அவர்களின் தலையை அறுத்தான் என்ற செய்தியை இதன் வழி அறிய முடிகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ தண்டேவிச்
2. சாலைய் கலமறுத்து அங்குள்ள
3. மலைஆளர் தலை அறுத்து தக்க பா
4. டிய் தழைக்காடும் தண்டார் நுள
5. ம்ப பாடியொடும் மிக்க கங்கவ
6. ள நாடும் வேங்கைய் நாடு
7. ம் அது கொண்ட நித்தல
8. மு கோகன்[னா] கியனிருவ்வ
9. ன் அருமொழி தேவர்க் கொ
10. த்த பலத்தார் மும்முடிச்
11. சோழர்க்கு யிராஜ யிராஜ
12. கேசரி வர்மர்க்கு யாண்டு 14



## 3:2

**இடம் :** மேற்படி ஏரியில் உள்ள மற்றொரு நடுகல்

**காலம் :** பல்லவர் 9ஆம் நூற்றாண்டு மற்றும் சோழர் 11ஆம் நூற்றாண்டு

**செய்தி :** நடுகல்லின் முன்புறம் பல்லவர் பற்றிய செய்தியைக் கொண்ட மெய்க்கீர்த்தி உள்ளது. பின்புறம் சோழர் மெய்க்கீர்த்தி இடம் பெற்றுள்ளது. இந்நடுகல் உடைந்தும் சிதைந்தும் உள்ளதால் இதனை முழுமையாகப் படிப்பது கடினமாக உள்ளது. ஏரி மதகுப் பகுதியில் இந்நடுகல் மூன்று துண்டுகளாக உடைந்து சேற்றில் புதைந்து கிடந்தது.

### நடுகல்லின் முன்புறம்

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிசைய...
2. விக்கிரம பர்மக்கு
3. யாண்டு இருபத்து நால...
4. து பல்குன்றக் கோட்டத்து
5. ....ண்டு முந்நூறுங் கங்
6. .....த்த [லுடையார்] ஆளத்
7. [தொ]க்க பாடி [ப்பைய்] யலூ
8. நாத் தம்
9. ...........கடை
10. கிளும் பூர்க்கொட்ட
11. [த்]து [ஆ]லம் துர
12. த்த எரிக்கொ
13. ள்ள எறி[ந்]துப்
14. ம் பட்டான்.



பின்புறம்

1. ஸ்வஸ்திஸ்ரீ கொப்பரகெஸ [ரிபன்]
2. மற்கி யாண்டு எழாவது [ம]
3. ணிக்குறி மஹதேவற்கு
4. ............................
5. ............................
6. ன்றக்கொட்டத்து
7. ட்டுக்கொன்
8. க்கம்வி.....
9. தவற்கு ஒரு விளக்கிற்கு....
10. லவுழக்.....



# 4. திருமூலத்தானம் கோயில் கல்வெட்டுகள்

கோ. விஜயவேணுகோபால்,
நா. பாபு [எ] ராமசாமி,
சோ. ரவீந்திரன்,
புதுச்சேரி

4:1

**இடம் :** *திருமூலத்தானம், காட்டுமன்னார்கோயில் வட்டம், கடலூர் மாவட்டம். திருமூலநாதர் கோயில் கருவறை, தெற்கு அதிட்டானம், ஜகதி*

**காலம் :** *இரண்டாம் ஆதித்தன். ஆட்சியாண்டு 3. [959]*

**செய்தி :** *இக்கோயிலில் வேறு சில துண்டுக் கல்வெட்டுகளும் உள்ளன கீழ்க்கொடுக்கப்பட்டுள்ளவற்றில் ஆறு பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. எண் 1.2 7 ஆகியன இரண்டாம் ஆதித்த கரிகாலன் ஆட்சியாண்டு பெற்றுள்ளன. எண் 1, 7 பிராமணருக்கு உணவளிக்கச் செய்த கொடை பற்றியவை. எண் 2 ஓர் உகச்சன் [உவச்சன்] செய்த நிலக்கொடை பற்றியது இதில் வரும் "வெள்ளாளன் குடும்பு" என்ற தொடர் குடும்பு பற்றி மேலும் ஆய்வதற்குப் பயன்படும். எண் 8 மற்றும் 10 சபையாரிடம் ஒரு பெண், மனைகள் விலைக்கு வாங்கி அங்கு எண்ணைச் செக்கு வைத்து அதன் வருவாயைக் கொண்டு விளக்கெரிக்க ஏற்பாடு செய்தமையைக் கூறுகிறது. எண் 6-இல் கோயில் கருவூலத்தைச் சோதனையிட்டு குறைபாடு கண்டுபிடிக்கப்பட்டு, அதனை அக்கோயில் சிவபிராமணர் ஈடு செய்ய ஒப்புக் கொண்டதைத் தெரிவிக்கிறது எண் 12, 13 விஜயநகர அரசன் அச்சுததேவராயர் காலத்தைச் சேர்ந்தவை. அப்போது கோயில் திருப்பணி செய்யப்பட்டு சுற்று மதிள் எழுப்பப்பட்டதை அவை தெரிவிக்கின்றன*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பாண்டியனைத் தலைகொண்ட கோ பரகேஸரி வர்ம்மர்க்கு யாண்டு 3-ஆவது வடகரை ப்$_4$ரஹ்மதே$_3$யம் ஸ்ரீ வீரநாராயணச்ச$_4$துர்வேதி$_4$ மங்க$_3$லத்து ஸ்ரீமூலஸ்தாநத்தாள்வார் கோயிலி.

2. லேய் பல்லவப் பேரரையனான வீரசி$_3$கா$_3$மணிப் பல்லவரையன் ச$_2$ந்த்$_3$ராதி$_4$த்தவத் ப்$_3$ராஹ்மண போ$_4$ஜநத்துக்குண்ண போ$_4$க$_3$மாகப் பொன் குடுத்துக் கொண்டு வைய்த்த நிலமாவன

3. இவ்வூர் வடபிடாகை வீரநாராயணவதிக்கு மேற்க்கு ச$_2$ந்த்$_3$ரசே$_3$க$_3$ர வாய்க்காலுக்கு வடக்கே 3–ஆங் கண்ணாற்று முதற் சதிரத்து மாநகுலாவதி$_4$ச்சேரி அஸ்திஸரஜொநு தே$_3$வரதச்ச$_2$

4. துர்வேதி$_4$ ப$_4$ட்டனுள்ளிட்ட அஷ்ட ...று மாவில் அஸ்திஸரஜொநு மஹேச்$_3$வரக்ரமவித்தன் விற்ற ஒரு மாவரை நிலத்துக்குக் குடுத்த பொன் ஐம்பதின் கழஞ்சு

5. திருநாராயண வதிக்கு மேற்க்கு ...ய்க்காலுக்கு வடக்கு 2 ஆங் கண்ணாற்று 3ஆம் சதிரத்து கடிகஸந்த்$_3$ரச$_3$ச் சேரி க்ராஞ்சி மணிநம்பி ப$_4$ட்டன் விற்ற தென் கீழை மூ

6. ன்று மா நிலத்துக்குக் கட ...பத்தைங் கழஞ்சு விஷ்ணு வதிக்குக் கிழக்கு இருமடிச் சோழ வாய்க்காலுக்கு வடக்கு 4 ஆங் கண்ணாற்று 2 ஆஞ் சதிரத்து ராஜ

7. கேஸரிச் ...ருவல்லி தாழி...

8. வீரநாராயண ...க்காலுக்க வடக்கு ....

9. விற்ற நிலம் இதற்குக் குடுத்த பொன்...

10. ...ாக்குப்பட்ட இரண்டு மாகாணியில் ....

11. முதற் சதிரத்தும் 2ஆம் சதி...

12. ....ணபத....

## 4:2

**இடம் :** *மேற்படிக் கோயில் கருவறை, வடக்கு அதிட்டானம், ஜகதியில்.*

**காலம் :** *இரண்டாம் ஆதித்தன், ஆட்சியாண்டு 8 [964]*

**குறிப்பு :** *இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறையினரால் 1946-47ஆம் ஆண்டில் எண் 118 முதல் 144 வரை படியெடுக்கப் பட்டுள்ளன. ஆனால் பாடம் இதுவரை வெளியிடப் படவில்லை. இவற்றுள் பல துண்டுக் கல்வெட்டுகள் வரி 4-5 முதல் மூன்று வரிகளோடு தொடர்புடையன வாகலாம்.*

1. ஸ்வஸ்வதி ஸ்ரீ கோ பரகேசரி பந்மற்க்கு யாண்டு 8 ஆவது வடகரை ப்$_3$ரஹ்மதேய$_3$ம் ஸ்ரீ வீரநாராயண சதுர்வேதி மங்கலத்து ஸ்ரீ மூலஸ்தானத்து பரமஸ்வாமிக்கு திருவாராத$_3$னைக்கும் நெல்லுக்குமாக இக்கோயிலில் உகச்சன் முன்னூற்றுவன் ஆன தனி ஆள் இ[ர]ண்டு உகச்சன் கயிலாயன் தனியாள் மூன்று

2. கூத்த பெருமாளுக்கு உச்சம்போது இரு நாழி திருவமிதுக்கு அன்னப$_3$லி ... யுரி சூ நாடுரிக்கு ஆதித்தவர்க்குமாக குடுத்த நிலமாவது

3. தேவதானம் ... முகைக்குடி ஸ்ரீ மூலஸ்தானநல்லூரில் நிவந்ததுக்கும்

4. லில் வெத$_3$ரன் மனை வெள்ளாளனான துதம்பாடி உடையான் குடும்பில் எழுமாவரை யாழ ஸ்ரீகோயிலில் சிவப்$_3$ராஹ்மணர்க்கு நிப$_3$ந்தமாக குடுத்த நிலம் ஒன்றேய் எழுமாவரை யும் சந்த$_3$ராதி$_3$த்யவற் இ ஸ்ரீ கோயிலில் ஸ்ரீப$_3$லி நிச்சல்படி எட்டடிக் கொண்டு கொட்டுவதற்க்கு பொன்

5. க்கும் நெல்லுக்குமாக இ ஸ்ரீ கோயிலில் உகச்சன் முன்னூற்றுவன் ஆன தன் ஆள் இரண்டு உகச்சன் கயிலாய உகச்சன் கீழனரிகத்துடி ஆள் மூன்றுக்கு நிப$_3$ந்தமாக குடுத்த நிலமாவது வெள்ளாள நானூற்றுவன் குடும்பில் மூவேலியும் வெள்ளாள எயினன் தம்பி உடையான் குடும்பில் அறுமாவும் ஸ்ரீகோயில்

## 4:3

**இடம் :** *மேற்படிக் கோயில் கருவறை, மேற்குச் சுவர்*

**காலம் :** *விக்கிரமச் சோழன், 9, [1127]*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ பூமாது புரணப் புவி மாது வ...ரா நாமாது விளங்க [ச]யமா...

2. து விரும்பத் தன் திருப்பதமலர் மன்நவர் சூட ம.... நியவுரிமையால் மணிமுடி சூடிச் செ[சங்] கோல் சென்ற தி

3. சை தொறு வளப்ப வெங்கலி நீங்கி மெய் யற[ந்]தழைப்பக் கலிங்கமிரிய க...லம் நடாத்தி வலங்கொ

4. ளாழி வரையாழி நடாத்தி இரித ...ாளவும் ஒரு குடை நிழற்ற வீரஸிம்ஹா... நத்து முக்கோக்கிழாநடி

5. களொடும் வீற்றிருந்தருளிய கோப்பரகேசரி பந்மரான த்ரிபு$_4$வநச்ச$_2$க்ரவத்திகள் ஸ்ரீ விக்ரம சோழ தே$_3$வற்கு யாண்டு 1 ஆவது

6. வடகரை விருதராஜப$_4$யங்கர வளநாட்டுத் தநியூ ப்ரஹ்மதேய$_3$ம் ஸ்ரீ வீரநாராயணச$_2$துர்வேதிமங்கலத்து உடையார்

7. ....தே$_3$வற்கு ஸ்ரீ விக்கிரம திருமேநி கல்யாண திருமேநியாக தேவந்திருமூலட்ட

8. முடையாநாந ராஜராஜத்ரிக...தண்ட வெ...ம்தேவற்கு ஸந்தி திருமந்திரப் போநகம் தி[ருவ]முது அரிசி நாநா

9. ழியும் கறி அமுதுக்கும் நெயமுதுக்கும் தை அமுதுக்கும் பருப்[ப]முதுக்கும் உள்ளிட்டானவையிற்றுக்கு நாள் 1க்கு நெ

10. ல்லுப் பதக்கு நாநாழியாக வென்றும் நெல்லுக்கு இத்தேவர்தா[ன]ம் முகைக்கடியில் பொற்காளி வா[ய்க்கா]லுக்கு மேற்குக்கு கா

11. ரி விளாகமென்று பேர் கூவி முன்பு ஒரு பூ விளைந்து ...குஅறுபத்துமு ...துணி நெல்லு அட்டி வருகிற நிலம் அரை இந்நிலம்

12. அரையும் காரும் பசாநமும் விளையத் திருத்திந அட்டிக்காரப ...விளையப் பண்ணிக் காரோபாதியால் முதலாந நெல்லு

13. எழுபத்து ஐங்கலமும் இந்நெல்லு நூற்று ...து எண் கல னெ இதில் காரில் திருத்தால் அளக்கும் நெல்லு எழுபத்து

14. ஐங்கலமும் நிச்ச நிமந்தம் சந்த்ராதித்தவற் [செல்ல]லக் கடவதா[க] நிலம் திருத்தக் கூலிக்குத் தேவர் பண்டாரத்து ஒடு

15. க்கிந காசு நாலும் இக்கோயிலில் ஸ்ரீகாரியம் ...வெண்குடை ...திருவகத்தீச2வரமுடையாநூம் ஸ்ரீ மாஹேச்வர கங்கா

16. ணி செ[ய்]கிற ஸ்ரீவீரப$_4$த்$_3$ர தேவரும் கும்பிட்டு இ... இறையாற் ... அப்பூதி அடிகளும் சிவப்$_3$ராஹ்மணந் தேவர்

17. கந்மி ருஸ்ரீப$_4$வாஹந ப$_4$ட்டநும் கோயில் பந்தாளுமை..நும் இவ்வனைவோம் இவர் பக்கல் இக்காசு நா

18. லும் கைக்கொண்டு கல்வெட்டுவித்து ...தி$_3$த்தவற் செ...க்கடவோமாநோம்

## 4:4

இடம் : *மேற்படிக் கோயில் கருவறை, வடக்கு அதிட்டானம், ஜகதி.*

காலம் : *முதலாம் இராசாதிராசன், 24 [1042]*

1. *ஸ்வஸ்தி ஸ்ரீ கோ வீரபாண்டியந் தலையும் சேரலன் சாலையும் இலங்கையும் தண்டாற் கொண்ட கோ ராஜகே*

2. *சரி பந்மராந உடையார் ஸ்ரீ ராஜாதி₄ராஜதே₃வற்கு 24 ஆவது வடகரை பிரம தே₃ய[ம்] ஸ்ரீ வீரநாராயண சதுர்வேதிமங்கலத்து உடையார் ஸ்ரீ மூலஸ்தாந*

3. *உடையா[ர்]கு இவ்வூர் நாவிசர் தேவந் ஆமாத்தூர் உடையாற்கு சந்த்ராதி[த்] தவற் திருநுந்தா விளக்கு எரிக்க ...கு முச்சாணீளத்து இ நிசதம் உழக்கு*

4. *எண்ணெயும் திருநுந்தா வி[ளக்கு] எரிக் கடவிதாக இக்கோயிலில் சிவப்பிரமாண பா₄ரத்துவாசி பரமேசுவர ..பாடிகளும் பரமேசுவரந் நீர்..*

5. *ரயண பட்டநும் இகுடி ஸோம தே₃வநாடள்வாநும் இக்குடி தேவந் ..ஸ தேவந் சீருடை கழலும்...*

**4:5**

**இடம் :** *மேற்படிக் கோயில் கருவறை, வடக்குச் சுவர், பிரம்மாவுக்கு இடது புறம்*

**காலம் :** *முதலாம் குலோத்துங்கன், 40 [1110]*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ குலோ
2. த்துங்க சோழ தே
3. வர்க்கு யாண்டு 40
4. ஆவது வடகரை வி
5. .....பயங்கர வளநா
6. நாட்டுத் தநியூர் ஸ்ரீ வீரநா
7. ராயணச் சதுர்வே
8. திமங்கலத்து ஸ்ரீ பரா
9. ந்தகச் சேரி கிழாநடி வி
10. ண்ணகராத்வார் மடை வி[ளா]
11. கத்து இருக்கும் இடையந் தோழ
12. ம்பந் திருமாணிக்கத்தேன் இவ்வூரில் உடை

13. யார் ஸ்ரீ மூலஸ்தாநமுடையதே
14. வரடியாரில் திருத் தங்கை கொண்டாள்
15. பக்கல் உபையஞ் செலுத்தக் கடவொ
16. [ம்] இவ்வாட்டை ஆட்சி ...ஸத்து
17. இவன் பக்கல் நான் கொண்ட
18. காசு ஏழுக்கும் ஆட்சி [யா]டாய்இ
19. த்தேவற்கு கொண்டு எந் வசம்
20. வல் எண்ணா
21. ணாடாய் நிற்கக் கட
22. வதாகவும் இக்
23. கோயில் திருப்பள்
24. ளியறைப் பிராட்டி
25. யார் பாடே ஒரு திரு
26. நுந்தா விளக்கு எரி
27. க்க நான் ஒ...ந
28. ய் உழக்காக விந்நெ
29. ய் தொண்ணூற்று நா
30. ழியும் இக்கோயிலி
31. லே கொடுவந்து நா
32. ளும் அ
33. ளக்க கட
34. வோமாக இசைந்து இக்க
35. ல்லிலே கல்வெட்டிக்
36. குடுத்தேந் தோழம்ப
37. ந் திருமாணிக்கத்[தேந்]
38. இவர் சொ
39. ல்ல வெழுத்து வெ
40. ட்டிநேந்
41. முகைக்குடி
42. இருக்கு கொ

43. ல்லந் ம ...ணந்.

## 4:6

**இடம் :** *மேற்படிக் கோயில் கருவறை, வடக்குச் சுவர், பிரம்மா சிலைக்கு வலது பக்கம்*

**காலம் :** *முதலாம் குலோத்துங்கன் 40 [1110]*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்
2. டு 40 வடகரை விருதராயபயங்கர வளநாட்டு தநியூ
3. ர் ஸ்ரீ வீரநாராயணச் சருப்பேதிமங்கலத்து உடையார் ஸ்ரீ மூல
4. த்தானமுடையார் கோயிலில் சிவப்$_3$ராஹ்மண[ர்] பா$_4$ரத் வாஜி ஸ்ரீ
5. கைலாஸமுடையான் வாநவரீசன்நும் பரமேசுரன் திருச்சிற்றம்ப
6. லநுடையாநும் மயூரவாஹநன் சிறியாநும் உள்ளிட்ட இ
7. க்கோயிலில் காணி உடைய சிவப்$_3$ராஹ்மணரோம் இக்கோயிலில் இத்தே$_3$
8. வர் ஸ்ரீபண்டாரத்து யாண்டு 34 ஆ[வ] சோதிச்ச பண்டாரப் பொத்
9. தகப்படி யாண்டு 40 ஆவது பண்டாரப் பொத்தக[ம்] சொதிக்குறைவுபட்டு சிவ
10. ப்$_4$ராஹ்மணர்க்கு கடமை .....வெண்கலம் உள்ளிட்டு எ
11. ங்கள் கைய் வழியாக குறைந்த குறைவுகள் இ[டு]கைக்கு வி
12. ரசிகாமுகச்சேரி மிழத் திருச்சிற்றம்பலமுடை மந் பட...
13. ப்4ராஹ்மணன் ஆளவந்தான் பக்க
14. ல் நாங்கள் கொண்ட காசு
15. அஞ்சு இ[ந்]த காசு அஞ்சுக்கு
16. இக்கோயிலில் திருப்பள்ளி அறை
17. நாச்சியார்க்கு ஒரு திருநந்தாவிளக்கு உ
18. பையமாக செலுத்துமிடத்து நா
19. ள் ஒன்றுக்கு நெய் உழக்கு ஆக ஒ
20. ரு திருநொந்தாவிளக்கு ஸந்திராதித்த
21. வற் செலுத்தக் கடவோமாகவு
22. முதல் நிற்கி பலிடையாலே நாங்

23. களும் எங்கள் மக்கள் மக்களு
24. ம் எங்கள் பக்கல் விலையும் ஒற்றியு
25. ம் அடைய அடைய கொ
26. ண்டார் இ[ப்]படியே செலுத்தக்க
27. டவோமாகவும் இச்சேரி ப்$_3$ராம
28. ணரே நித்த கலியாண பட்டர் பக்க
29. ற் படிக்குறைவுக்கு கொண்ட காசு முத
30. லும் கொண்டு ஸந்திராதித்தவற் ஒரு ஸந்தி

## 4:7

**இடம் :** *மேற்படிக் கோயில் கருவறை, தெற்குச் சுவர்*

**காலம் :** *இரண்டாம் ஆதித்தன், 4 [960]*

**குறிப்பு :** *வரிகள் இறுதிப் பகுதி குறைபாடுடையன.*

1. ண்டியனைத் தலை கொ...
2. ப்பரகேஸரி வன்மக்கு யா...
3. லாவது வடகரை ப்$_3$ரஹ்மதே$_3$யம்
4. வீரநாராயணச் சருப்பேதி மங்க
5. லத்து ஸ்ரீ மூலஸ்தானத்து பர..
6. ஈர் கோயிலிலே பல்லவரை
7. ன் ஆகிய வீரசி$_2$கா$_3$ம...
8. ல்லவரையன் சந்த்$_3$ராதி$_3$த்...
9. ஹ்மண போ$_4$ஜநத்துக்கு விரக....
10. குக் கொண்ட நிலமாவன இவன்...
11. கைக்கொண்ட நிலங்களாவன இ...
12. ஈரிகிரானாசி மணிநம்பி பட்டனி...
13. ண வதிக்கு மேற்கு சந்திரசேகர...
14. வடக்கு இலத்தூரின் தென்ப...க்...
15. டை மூன்று மாவுக்கு குடுத்த பொன்...
16. து ஐங்கழஞ்சு வீரநாராயண...

17. க்கு சந்திரசேகர வாக்காலுக்கு வடக் ...

## 4:8

**இடம் :** *மேற்படிக் கோயில் அர்த்த மண்டபம், தெற்குச் சுவர்*

**காலம் :** *இராஜகேஸரி [சுமார் 850]*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோவிராஜகேஸரி பம்மக்கு யாண்டு...
2. து வடகரை ப்$_4$ரஹ்மதே$_3$யம் ஸ்ரீ வீரநாராயண...
3. ....த்துப் பெருங்குறிப் பெருமக்களோம்
4. த்த மனை விலையாவணம் இவ்வூர் ஸ்ரீமூலஸ்...
5. னத்து பரமேச்$_2$வரர்க்கு சந்த்$_3$ராதி$_3$த்தவல் நா
6. லு செக்கு இட்டுக்கொண்டு நாலு நொந்தாவி
7. கு எரிப்பதற்கு நாங்கள் விற்றுக் குடுத்த...
8. ..........................................................
9. ................மிசங்கிளி நாட்டு வெண்ணாயில் வெண்ணாயி
10. ல் உடையான் காரி கண்டாரதித்தன் அகமுடையான் இக்கரை
11. பெருவாயில் கூற்றத்து சிறுகுளத்தூர் உடையான் செம்பியன்
12. சோழியவரையன் மகள் இராமன் காளி சந்த்$_3$ராதி$_3$த்தவல் ஸ்ரீ மூலஸ்தா$_3$
13. நத்திலோய் ஆள்வாற்கு நாலு நொந்தாவிளக்கெரிப் பதற்கு இவள் வைத்த
14. காசு 8 இவ்வெட்டுக் காசும் தேவகர்ம்மி பக்கல் கொண்டு இவ்வெட்டுக் காசுக்கும் ந[ா]
15. ங்கள் விற்றுக் குடுத்த மனைக்கு கீழ்பாற்கெல்லை திரிபு$_5$வனஸுந்தரக் கணத்தார்
16. சேரி கிழக்கு நின்றும் மேற்கு ...வுகு மேற்கும் தென்பாற் கெல்லை குச்சங்...
17. யின் வடக்கில் நாராசத்துக்கும் வடக்கும் மேல்பாற் கெல்லை ஈரங்கொள்ளிகளுக்கு இட்ட ம
18. னைகளுக்கு கிழக்கும் வடபாற்கெல்லை ஸ்ரீ கையிலாஸ வீரர்களுக்குக்கிட்ட மனைகளுக்கு தெற்கும்
19. ....இவ்விசைந்த பெருநான்கெல்லையிலும் அகப்பட்ட மனைகள் முன்பு வெட்டிய[ா]

20. ற்கிட்டுத் தவிர்ந்த மனைகள் பத்தும் மேநோக்கிய மரமும் கீழ்நோக்கிய கிணறு
21. ம் உடை... உண்ணி... ஒழிவின்றி மிகுதி குறைமைஉ[ள்]
22. ளடங்க இம்மனை பத்தும் விற்றுக் குடுத்தோம் ஸ்ரீ மூலஸ்தாநத்து...
23. ற்கு நாலு செக்கு இட்டுக் கொண்டு நாலு நொந்தா விளக்கு எரிப்பதற்கு சந்த்₃ராதி₃த்த
24. வல் இறையிலியாக விற்றுக் குடுத்தோம் இப்பெருங் குறிப்பெருமக்களோம் இ
25. ம்மனை பத்தும் இ தே₃வர்க[ன்]மி பக்கல் விற்று குடுத்து கொள்ள உடைய எம்மில்
26. இசைந்த விலைப் பொருள் பெருமாள் பள்ளி அறை மெய்காப்பந் வெண்ணாயில் உ
27. டையான் காரி கண்டராதித்தன் அகமுடையாள் இராமன் காளி இ தே₃வற்கு சந்த்ராதி
28. த்தவல் நாலு நொந்தாவிளக்கெரிக்க இதே₃வற்கு இ தேவர்கன்மி...
29. ரி மருதூர்ப் பாலாசிரியன் கீரன் கண்ணி வசம் இவள் குடுத்த காசு 8 இவ்வெட்டுக்[கா]
30. சும் இவள் பக்கல் ஆவணகளரியே கைச்செல்ல அற இப்பரிசு இவ்வெட்டு காசும் அறக்
31. கொண்டு இம்மனைகள் பத்துக்கும் இதுவேய் விலையாவணமும் இதுவேய் பொருள்மா[வ]று
32. திப் பொருள்ச் சிலவோலையும் இதுவேய்யாவதாகவும் இதுவல்லது வேறு பொ.
33. ருள் மாவறுதிப் பொருள்ச் சிலவோலை காட்டக் கடவரல்லாதாராக இப்பரிசொட்டி இருகா
34. லாவதும் முக்காலாவதும் விலையற விற்று பொருளறக்கொண்டு விற்று விலையாவ
35. ணம் செய்து குடுத்தோம் ஸ்ரீ மூலஸ்தாநத்து பரமேச்வரர்க்கு இப்
36. பெருங்குறிப்
37. பெருமக்க

38. ளோம் இப்பரிசு இப்பெ[ரு]
39. ங்குறிப் பெருமக்கள் கணக்க[ன்]
40. லக்ஷ்மண யெழு ...குடுத்து இக்க[ா]
41. சு எட்டும் வாய்த்தலைக்கு விசமாக
42. வாங்கி கொண்டோம் கீழை இருஷப
43. நாயறு முதல் [ஸம் வத்சரவாரியஞ்] செய்கின்
44. ற வாரியப் பெருமக்களோம் பணி
45. யால் இப்பெருமக்கள்க் கணக்கு எழுது
46. கின்ற ஸ்ரீ பரகேஸரிச் சேரி மத்$_3$யஸ்தன்
47. உயதின் வாமன்நன் ங நூற்றுவ
48. னனேன் இவை என்னெழுத்து
49. ஸ்ரீ சூரசூளாமணிச்சேரி மத்$_3$யஸ்தந் பர
50. வன் ஸ்ரீ பராந்தக சேரி மத்$_3$யஸ்தன்
51. வன் ஸ்ரீ பராந்தக சேரி மத்$_3$யஸ்தன்
52. நூற்றுவன் தாமோதிரனேன் இப்
53. படியறிவேன் ஸ்ரீ மானகுலாசனி சேரி
54. மத்$_3$யஸ்தன் வானவன்மாதேவிப் பெ
55. ருங் காவிதியேனன் இப்படியறிவே
56. ன் ஸ்ரீ ராஜகேஸரிச் சேரி மத்$_3$யஸ்தன்
57. தெங்கங்குடையானேன் உ

## 4:9

**இடம் :** *மேற்படிக் கோயில் கருவறை, வடக்கு அதிட்டானம், குமுதத்திற்கு மேலுள்ள பலகைக் கல்லிலும் குமுதத்திலும்*

**காலம் :** *இரண்டாம் இராசராசன் 14, [1160]*

1. ....புவனச்சக்ரவத்திகள் ஸ்ரீராஜராஜதே$_3$வற்கு யாண்டு 14ஆவது வடகரை விருதராஜபயங்கர வளநாட்டுத் தநியூர் ஸ்ரீ வீரநாராயணச்ச...
2. மங்கலத்து உடையார் ஸ்ரீ மூலஸ்தாநமுடையார் கோயிலில் ஸ்ரீகாரியஞ் செய்வார்களும் ஸ்ரீ மாஹேச்வரக் கண்காணி செய்

3. வார்களும் தேவகன்மி கோயில் கணக்கரும் உள்ளிட்ட பல பணி நிமந்தக்காறரோம் ஸ்ரீ மாநகுலாஸநிச்சேரிக் காரம்பிச்செட்டு திருச்சிற்றம்பல

4. முடையான் பட்டநுக்கு [நா]ங்கள் உபயம் பண்ணிக் குடுத்த பரிசாவது இத்தேவற்கு இவர் எரிக்க விட்ட திருநுந்தா விளக்கு ஒந்றுக்கு நெய்

5. உழக்காக நாள் முந்நூற்றுபத்தஞ்சுக்கு நெய் தொண்ணூற்று ஒரு னாழி உழக்கு இந்நெய் தொண்ணூற்று ஒரு னாழி உ

6. ழக்கும் இத்தேவற்கு திருவுடையாடைக்கு பொந் கொள்ள இவர் பக்கல் கைக்கொண்ட காசு இருநூறு இ[ருநூ]றுங் கைக்கொண்டு சந்த்$_3$ராதி$_3$த்த

7. வற் பண்டாரத்தே இந்நெய் எரிக்கக் கடவோமாக ஸம்ம[தி]த்தோம் இவ்வறைவோம் ...

## 4:10

**இடம் :** *மேற்படிக் கோயில் தெற்கு அர்த்த மண்டப அதிட்டானம் குமுதம்*

**காலம் :** *இராஜகேஸரி [சுமார் 950]*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோராஜகே ....ப்$_3$ரஹ்மதே$_3$யம் ஸ்ரீ வீரநாராயணசதுர்வேதிமங்கலத்துப் பெருங்குறிப் பெருமக்...

2. னை விலையாவணம் இவ்வூ... ஸ்தாநத்து பரமேச்வரற்க்கு சந்த்$_3$ராதி$_3$த்தவல் நொந்தாவிளக்குக்கு நாங்கள் விற்றுக் குடுத்த மனையாவன பெருமாள்

3. சங்கிளி நாட்டு வெண்ணா... வெண்ணாயிலுடை யான் காரி கண்டராதித்தன் அகமுடையாள் இக்கயி... வாயில் கூற்றத்து சிறுகுளத்தூருடையான் செம்பியன்

4. சந்த்$_3$ராதித்தவல் ஸ்ரீ மூலஸ்தா... நொந்தாவிளக் கெரிப்பதற்கு இவள் வைத்த காசு 8 இவ்வெட்டு காசும் இ தே$_3$வர்கன்மிகள் பக்கல் கொண்டு இவ்வெட்டு காசுக்கும் நாங்கள் விற்றுக் குடுத்த

5. ...ணத்தார் சேரி கிழக்கு நின்றும் மேற்கு 2 ஆன் தெருவுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை கு...

## 4:11

**இடம் :** *மேற்படிக் கோயில் தெற்கு அர்த்தமண்டப அதிட்டானம், குமுதம்*

**காலம் :** *பரகேசரி [சுமார் 950]*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேஸரி பம்மற்கு யாண்டு 16 ஆவது வடகரை ப்$_3$ரஹ்மதே$_3$யம் ஸ்ரீ வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்து ஸ்ரீ மூலஸ்தானத்து பெருமாளுக்கு இவ்வூர் இருக்கும் மன்றாடிச் சிரட்டன் திருவெண்காடன் சந்த்$_3$ராதி$_3$த்தவல் நிச
2. தம் ஒரு பிடி நெய்யாக கால் விளக்குக்கு ஆக இ ஸ்ரீ கோயில் சிவப்$_3$ராஹ்மணர் வசம் குடுத்த காசு 4 இக்காசு நாலுக்கும் மாத்தால் விளக்கால் நெய்யால் மூன்று மாஸம் கார்த்திகையும் மார்கழியும் தையும் இம்மூ
3. ன்று மாஸமும் சந்த்$_3$ராதி$_3$த்தவல் திருநொந்தா விளக்கு எரிக்கக் கடவோமானோம் இக்கோயில் சிவப்$_3$ராஹ்மணரோம் இது. பன்மாஹேச்வர ரக்ஷை உ

## 4:12

**இடம் :** *மேற்படிக் கோயில் கோயிலின் உட்புறம், வடக்கு மதிலில் பதித்துள்ள கல்.*

**காலம் :** *1537*

1. உ ஸ்வஸ்தி ஸ்ரீ
2. வெங்கடாத்திரி நாயக்கர் கா
3. ரியப் பேர் சந்திரையர்...
4. குறு செட்டியப்ப நாயக்கர்....
5. ஸ்ரீ மூலஸ்தாநமுடைய தம்பிரா...
6. ரைச் சேவித்து வடக்கு மதிள் தம்
7. முடைய தன்மமாக [சகாப்$_3$தம்
8. 1459] மேற் செல்லாநி
9. ன்ற ஏவிளம்பி வரு ஆவணி மீ
10. ய திருவோண நக்ஷத்ரதுக்கு...

11. க் கட்டுவித்து நிறைவேற்றினார்

12. சு$_2$ப$_4$மஸ்து

## 4:13

**இடம் :** *மேற்படிக் கோயில் முகமண்டப நுழைவாயில், வலது பக்கத்து தனிக்கல்.*

**காலம் :** *விஜயநகரம் அச்சுத தேவராயர், 1537[?]*

1. சு$_2$ப$_4$மஸ்து ச$_2$காப்$_3$த$_3$ம் ........ ன் மேல் செல்லாநின்ற
2. காலத்தில் விபஷ்ணன் கண்ட னாடு கொ
3. ண்டு கொண்ட னாடு குடாதான் அசுத மகாரா
4. யற்கு விஜயம்மும் உண்டாக என்று வெங்கடாத்தி
5. ரி நாயக்கர் ஸ்ரீமூலஸ்தாநத்துக்கு புரவரிமற்றுள்ள
6. வரியெல்லாம் வேண்டாமெ[ன] தாரை வாத்தப[டி]
7. யாலே தம்பிரானார் மகாபூசை திருப்பணியே நட
8. த்த கடவது யாதொருவன் யிதற்கு இடையூறு
9. செய்தான் அவன் கெங்கைக் கரையில்
10. லே காராவையும் பிராமணரையும்
11. கொன்ற பாவத்திலே அடையக்கட
12. வன் ஆகவும் சிவத்துரோகம் குருத்துரோ
13. கம் பண்ணினவன் போன பாவத்திலே
14. போகக்கடவான் சு$_2$ப$_4$ம் உ

# 5. பழைய சீவரம் பராந்தகசோழன் கல்வெட்டு

சு. இராசவேலு,
சென்னை

**இடம்:** *காஞ்சிபுரம் மாவட்டம், செங்கல்பட்டு வட்டம், பழைய சீவரம் ஊரில் உள்ள பெருமாள் கோயில் மேற்கு முப்பட்டைக் குமுதம்*

**காலம்:** *பரகேசரி [முதற்பராந்தகன்] 15 [922]*

**செய்தி:** *விண்ணபுரத்து பிராமண ஊர்ச் சபையில் குழுக்களுக்கு உறுப்பினர் தேர்ந்தெடுக்கும் தீர்மானம்.*

1. ஸ்வஸ்தி த ஸ்ரீ கொப்பர கெஸரி பர்ம்மக்கு யாண்டு 15 ஆவது நாள் 12 ஊற்றுக் காட்டுக் கொட்டத்து விண்ணபுரத்து பெருங்குறி ஸ்ஸபை$_4$யோம் இந்நாளால் சீர்க்குட்டி அம்பலத்திலெ கூட்டக் குறைவறக்

2. கூடி இருந்து இப் பதினைந்தாவது முதல் வாரியஞ் செய்யும் வ்யவஸ்தையாவது ஆவ்வவ் குடும்பிற் கொத்தாரும் ஸபை$_4$க் கொத்ததாரும் வாரியஞ் செவாராகவும் வாரியம் புகும்பொது ஸத்யஞ் செய்து வார்பலம்.

3. இரு கழஞ்சு பொன் அன்றி மற்று எப்பேர்ப்பட்டிதும் ஏரி ஆயமும் சோறுமாட்டும் முதலாக மற்றும் ஆஜ்ஞா ப்$_3$ரஹ்மஸ்வம் எப்பேர்பட்டிதும் கொள்ளோமென்று ஆண்டறுதி செய்து ஸபை$_4$

4. க்கு ஒக்க கணக்கு காட்டி விடுநாளும் ஸத்யஞ் செய்வாராகவும் புகும்போதும் ஸத்யஞ் செது புகுவாராகவும் இவ்வாரியம் வார்பலங் குடுத்துப் போக்கு காட்டப் பெறாதாராகவும் வாரியம் புக்காரல்லாதார்.

5. வஸ்ஸரந் தொறும் வார்பலங் கொள்வதாகவு இதன் மேல் வார்பல [ெ] மன்று கொள்ளப் பெறாதாராகவும் வாரியம் இரண்டாண்டடுத்து வாரியஞ் செய்யப் பெறாதாராகவுங் குடும்பழிக்கப் பெறாதாராகவும்.

6. கு[றை] அவ்வவ் குடும்புக்கு ஒத்தாரேய் வாரியஞ் செய்வா [ரே]

... [வார்] பல மட்டி செய்து இசைய குடும்புமட்டி ஒக்க அடைத்துக் கொள்வதாகவும் மன்றாட ஊர் நின்றும் புறப்பட்ட நாள் முதல் ஊர் சோறு.

7. உண்பதாகவும் ஊர்த்$_3$ரவ்யங் கொள்வொமாக [எப்பே]ர்ப்பட்ட... ந்யாந்யா வ் யவஸ்தைப் ஸஹவாஸஞ் செய்யப் பெறாதோம் ஆகவும் இவ்வ் யவஸ்தைய் அன்றென்றாரை ஸபை$_4$யிலும் வ்யவஸ்தய் குடுப்பாராக

8. வும் ஸத்யஞ் செய்யாதார் வாரியஞ்... ஸத்யஞ் செய்தோம் பெருங்குறி ஸபை$_4$யோம்.

# 6. கொழுப்பளூர் நயம்பாடிக் கல்வெட்டு

மா. கலைவாணன்,
ஆர்க்காடு
ப. வெங்கடேசன்,
காவேரிப்பாக்கம்

6:1

**இடம் :** திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டம், கொழப்பளூர் ஊரில் சிவன் கோயிலிலுள்ள கற்பலகை.

**காலம் :** முதலாம் இராசராச சோழன், ஆட்சியாண்டு 997.

**செய்தி :** கொழப்பளூரில் உள்ள 'திருக்குராங் கோயில்' மூலவருக்கு நுந்தா விளக்கு எரிக்கவும், பனிசந்தி விளக்கு எரிக்கவும், கைவிளக்கு எரிக்கவும் கொடையளிக்கப்பட்ட செய்தி.

முன் பக்கம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சாலை கலமறுத்தகோ
2. வி ராஜராஜ கேசரிபந்மற்கு யாண்டு
3. 12வது பல் குன்றக் கோட்டத்து
4. குழைப்பலூர் நாட்டு குழைப்பலூ
5. ருரோமெமூர்த் திருக்குராங் கோயி
6. ல் மூலவற்கு வைத்த நிமந்தமாவது
7. ..... செறுவு ஒரு நுந்தா வி
8. ளக்கு ஆகவும் . . . . . . டங்காணி பூ4
9. மிக்கு நீர் விலை ஸமத்ஸர வரி
10. பூ4மி பொன் கழஞ்சு இடுவதாகவும்
11. இதற்றிறம்பில் காத்தூட்டுவோமா
12. ன்னோம்என்நின்றொந் திருவாணை.



பின்பக்கம்

13. ங் கோப்பமுமித்த.. ணயுங்கொ
14. ண்டு பணம் செய்வதான பனிசந்
15. தி விளக்கொன்றுங் கைவிளக்கொ

16. ன்று கொளுத்தி ஸ்ரீபலி வலஞ்செ
17. யுமொரு சந்திக்கு அரிசி ஒரு நாழி ஆக
18. மூன்று சந்தியும் சந்திருவது காட்ட
19. வதாகவும் கணபதியார்க்கும் . . . . . தெ
20. வர்க்கும் ஒரு சந்தி விளக்கிடவும்

## 6:2

**இடம் :** திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் வட்டம்,. நயம்பாடி ஊரில் சிவன் கோயில் முன்புள்ள கற்பலகை.

**காலம் :** முதல் பராந்தக சோழன், ஆட்சியாண்டு 920.

**செய்தி :** மலடாற்றுப் போக்கிலி ஏரியைப் பராமரிக்க 'சோணர் அக்கவையன்' என்பவன் ஏரிப்பட்டி நிலம் கொடுத்துள்ளமை.

**முன்பக்கம்**

1. ........................................................
2. ரை கொண்ட கோப்பகேசரி பன்மற்
3. க்கு யாண்டு பதின் மூன்றாவது
4. மலடாற்றுப் பொக்கிலி ஏரிக்கு
5. ஏரிப் பட்டி ஆடி அட்டினேன் சிங்க
6. புற நாட்டுக் கீழ்வழி சோண நெற்கு
7. ன்றமுடைய சோணர் அக்கவைய
8. ன் ..........................................

**பின் பக்கம்**

9. இது இறக்குவான் ஏழா நரகத்
10. துக் கீழா நரகம் புகுவான் அற
11. மறவற்க அறமல்லது துணை
12. இல்லை.



# 7. விழுப்புரம் பகுதியில் புதிய கல்வெட்டுகள்

**சி. வீரராகவன்,**
**வீ.ஆர். மங்கையர்க்கரசி,**
**விழுப்புரம்**

**7:1**

**இடம் :** *கள்ளக்குறிச்சி வட்டம் - விழுப்புரம் மாவட்டம். கீழ்பரிகம் - மாரியம்மன் கோயில் முன்பாக நடப்பட்டுள்ள பலகைக் கல்.*

**காலம் :** *முதல் இராசராசன் [?] [985-1014]*

**செய்தி :** *சாலைக்கல மறுத்தருளி என மெய்க்கீர்த்தி தொடக்கம் சிதைந்துள்ளது. நரசிங்கப் பேரிளமை நல்லூரில் உள்ள ஏரியை ஒலோக விடங்கன் கருணாகரன் திருவை யோத்தி மாயிலட்டி [வணிகன்] கெட்டியவனாவான். வீரசோழன் ஏரியை வெட்டி வைத்தமை*

பக்கம் : 1

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ...............

பக்கம் : 2

2. ஸ்வஸ்தி ஸ்ரீ தாம
3. ப் பாடி யான நர
4. சிங்கப் பேரிள
5. மை நல்லூரில் ஒ
6. லோக விடங்கன்
7. கருணாகர
8. நான திருவையோ
9. த்தி மாயிலட்டி
10. வெட்டுவிச்ச
11. வீர சோழ
12. னேரி யான
13. சீலகப் பேரேரி

## 7:2

**இடம் :** *விழுப்புரம் மாவட்டம், திருக்கோவிலூர் வட்டம், கரடி பாடசாலை இறைவழிபாட்டு திடலில் உள்ள நடுகல்*

**காலம் :** *8ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *வீரன் உருவத்தின்பேரில் கல்வெட்டுப் பொறிப்பு உள்ளது. கொற்றடை கோடில் நிரை மீட்ட பொழுது இறந்த கோனாரு என்பவருக்காக எடுக்கப்பட்ட நடுகல்.*

1. "புல்லிது கொற்றாடை கோடு நிரை
2. மீட்டு பட்டான் கோனாரு."

## 7:3

**இடம் :** *விழுப்புரம் மாவட்டம், செஞ்சியிலிருந்து வெடால் செல்லும் [வழியில்] சாலையில் இல்லோடு என்னும் சிற்றூரில் திரு. அண்ணாமலைக்கு உரிய நிலத்தில் இயற்கையாக அமைந்த பாறையில்*

**காலம் :** *கிருஷ்ணதேவராயர், சகம் 1449 [1527]*

**செய்தி :** *உண்ணச்சி நாயக்கர் என்பவர் கலிங்கத்தரைய முதலியார்க்கு இல்லிடமல் [இல்லோடு] ஏரி ஏதுவாயில் அமைந்துள்ள குசவன் தாங்கலில் நஞ்செய் நிலம் 'காணி உரிமம்' செய்து கொடுத்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மண்மஹா மண்டலேசுற கிருஷ்ணதேவ
2. மகாராயர் பிருதிவி ராச்சியம் பண்ணியருளா நின்ற
3. சகாப்தம் 1449ன் மேல் செல்லாநின்ற ஜெய
4. வருஷம் கார்த்திகை மாதம் 13 தியதி உண்ணச்சி நாயக்கர்
5. கலிங்கத்தரைய முதலியார்க்கு காணியாட்சி பண்ணிக்
6. குடுத்தி கல்வெட்டுக்கு விபரம் நம்மிட சீர்மையான
7. இல்லிடமல் ஏரி யெதுவாய் குசவன் தாங்கல்
8. நஞ்சை நிலம் உண்டானது நாற்பாற் கெல்லையும் கொ
9. ல்லங் கிணற்றுக்கு மேற்கு, காடு மேட்டுக் கொல்லி

10. தாங்கல் எதுவாய் பூமியார் கொல்லை கலிங்கல்
11. கொல்லையும் இம்மதியார் இறையிலியாக சந்திராதித்த வ
12. ரையும் கல்வெட்டிக் கொடுத்தோம் அனுபவித்து
13. .................. சகத்திலே இருக்கவும்

## 7:4

**இடம் :** *விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம், திருவம்பட்டு, ஏரி தற்போது பொதுப்பணித்துறை திண்டிவனம் அலுவலகத்தில் வைக்கப்பட்டுள்ள தூம்புக் கற்கள்.*

**காலம் :** *சோழன் முதலாம் இராஜேந்திரன், ஆட்சியாண்டு 31 [1043]*

**செய்தி :** *இவ்வூர் ஏரிக்கு தூம்பு இடுவித்தமை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ராஜேந்திர
2. சோழ தேவர்க்கு யாண்டு
3. 31–வது அமணா
4. ற்றூருடையான் தாங்கி ஆ
5. ரூரான் செம்பியன் உத்தரம
6. ந்திரி இடுவித்த தூம்பு

## 7:5

**இடம் :** *மேலது*

**காலம் :** *முதலாம் இராசராசன், 22 [1007]*

**செய்தி :** *தூம்பு இட்டமை.*

1. ஸ்ரீ இராஜராஜ
2. தேவற்கு யாண்டு – இ
3. ருபத்திரண்டாவ
4. து வரிவலங் கிழான்
5. வேளாண் சூற்றி இடுவிச்ச
6. தூம்பு

## 7:6

**இடம் :** விழுப்புரம் மாவட்டம், திருக்கோயிலூர் வட்டம், திம்மச்சூர், குத்துப்பாறை [அகத்தீசுவரர் கோயிலின் அருகே உள்ளது]

**காலம் :** சோழன் இராசகேசரி ஆட்சியாண்டு 4, [10ஆம் நூற்றாண்டு]

**செய்தி :** இவ்வூர் எண்ணெய் வணிகரான [சங்கரபாடியான்] வேளான்மாறன் காளி என்பவன் இவ்வூர் அகத்தீசுவரர்க்கு விளக்கு ஒன்றுக்கு தொண்ணூற்று ஆறு ஆடுகள் கொடை செய்தமை.

1. ஸ்ரீ கோவிராச கேசரி
2. பந்மர்கி யாண்டு நான்காவது
3. சங்கரப்பாடியான வே
4. ளான் மாறன் காளி திமிசூ
5. ர் திருவத்தீசவர்க்கு வ
6. த்த விளக்கொன்றினா
7. ல் ஆடு தொண்ணூற்றாறு
8. சந்திராதிதவல் வைத்தே
9. ன் நந்தா விளக்கு



# 8. கீழையூர் கலகக் கல்வெட்டு

க. பன்னீர்செல்வம்,
மைசூர்

**இடம் :** *தஞ்சாவூர் மாவட்டம், மாயவரம் வட்டம், கீழையூர் - வேதபுரிஸ்வரர் திருக்கோயில் கருவறையின் தெற்கு சுவரில் காணப்படுகிறது.*

**காலம் :** *மூன்றாம் குலோத்துங்க சோழன் - ஆட்சியாண்டு 20 [1192]*

**செய்தி :** *பிரமதேய ஊரான திருவழுந்தூரில் சில பிராமணர்களும் வெள்ளாளர்களும் சேர்ந்து ஊருக்கு விரோதமாகச் சில செயல்களில் ஈடுபட்டார்கள்; தங்கள் நிலங்களுக்கு வரி நிர்ணயிக்க ஒத்துழைக்க மறுத்தனர். மேலும் இரு பிராமணர்கள் இரவிலே திருட்டுத்தனமாக தீ வைத்ததில் இன்னொரு பிராமணர் வீடு தீக்கிரையாகியது. இவற்றையெல்லாம் விசாரித்த ஊர் சபையாரும் அரசு அலுவலரும் குற்றஞ் செய்த பிராமணர்களைத் தண்டிக்க அவர்கள் நிலத்தைப் பறித்து ஏலத்தில் விற்க முடிவு செய்தனர். விற்று வந்த தண்டப் பணத்தை வாணதராயன் பொறுப்பில் இருந்த அரசுக் கருவூலத்தில் [தண்டல்] செலுத்தவும் கட்டளை பிறப்பிக்கப்பட்டது.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் மதுரையும் – யீழமும் பாண்டியனை முடித்தலையும் கொண்டருளின ஸ்ரீ குலோத்துங்க சொழதெவற்கு யாண்டு 20 – தாவதுவரை திருநாமத்துக்காணி யாகக் கொண்ட கொல்லை நிலங்களுக்கும் விளை நிலைங்களுக்கும் தானம் பெற்ற நிலங்களுக்கும் ப்ரமாணப் படிக்கு, கல்வெட்டு [1] இத்தெவற்கு எழாவது இஷப$_4$நாயற்று பூர்வபக்ஷத்து சப்த$_3$தியும் செவ்வாய்க்கிழமையும் பெற்ற ஆயில்லிய நாள் வீரராஜெந்திர வளநாட்டுத் திருவழந்தூர் – நாட்டு ப்ரஹ்ம தே$_3$ச$_0$ம் திருவழந்தூர் சபைக்கு சமைஞ்ச ஊர்வாரியம் மண்டையந் பொந்மலை ஆயனும் யவறுன் சற்வதெவன் திருவரங்கமுடையானும் இவ்விருவொம்

சபைவிலைப் பிரமாணம் ப்ரஸாதஞ்செய்தருளின திருமுகப்படி இவ்வூர் எழாவது தரமிடுகிற இடத்து இவ்வூரில் திம்பாகயிருப்பன திரண்டு எற்றச் சுருக்கம் பண்ணி கடமையும் இறாதே இராக்களவிலெ வீடுகள் சுட்டும் மஹாயேச்வர வதிஷ்ணமாகச் சில வார்த்தைகளும் சொல்லி இவூர்த்திருக்கதவுடை ஆழ்வார் திருநாள் எழுந்தருளுகிற இடத்து முன்பி–லாண்டுகள் செய்து வாராதிருக்கச்சிலெ பச்சைக் – குருதையாகச் செய்து திருமங்கை ஆழ்வாரை ஏற்றியும் திருவாய்மொழி பாடுவாரிலெ ஒருவன்மேழியாகச் செய்து கழுத்திலெ இட்டு வொள்ளானரைத் திரட்டி மணக்கேடுகளாய்யிருப்பன செய்தார்கள்ளென்றும் மாணக்கயன் நமக்குச் சொன்னவாறெ இவ்வூர் கொயில்னுதாரங்களிலும் இப்படி செய்தாரை இருபதிநாயிரம் காசு தெண்டமாகக் கொள்ளவும் இக்காசு ஒடுக்காதார்ருண்டாகில் இவர்கள் காணியை அசல்பிளந்து சபை விலையாக விற்றுக்காசு ஒடுக்கவும் இப்படி செய்யுமிடத்து நம் செய்தார் ருண்டாகில் ப்₃ராஹமணரைச் சுடும்படி....

2. கடவதாகவும் இது சுட்டித்தண்டாளருக்கு பிழையாக – கடவுதல்லாதுதாகவும் சொன்னோமிவ்வூர் ப்₃ராஹ்மணரிலும் வெள்ளாளரிலும் கோயில் அனுதாரங்களிலும் மனைக் கேடுகளாகச் செய்தாரைத் தெண்டமாகக் கொள்ளச் சொன்னக் காசு இருபதினாயிரம் விசையபாலன் நிச்சையித்தபடியெ தண்டிவரக்காட்டி வாணாதராயன் அடைப்பான் தண்டலிலெ ஒடுக்கப்பண்ணுவதென்று ப்ரஸாதம் செய்தருளின திருமுகம் வந்தமையில் இவ்வூர் கவுணியன் ஸ்ரீகபாடன் ஸ்ரீ கிருஷ்ணனுடன் பெரியாண்டனும் தரமிடாமல் கலகம் பண்ணியும் இராக்களவில் ப்₃ரஹ்மணந் அரிநாராயணன் அகம் வெந்த யிதுக்குப் பாடிகாப்பாரும் சபையாரும் அகத்தபெரில் உள்ளூர் பட்ட பேராகையாலும் இவர்களை உடையார் விசையபாலரும் சபையாரும் தெண்டமாகக் கொள்ள நிச்சையித்த கவுணியன் ஸ்ரீகபாடன் ஸ்ரீ கிருஷ்ணனைக் கொள்ள நிச்சையித்த காசு அறுநூறும் ஸ்ரீகபாடன் பெரியாண்டானைக் கொள்ள நிச்சையித்த காசு நானூறும் ஆக காசு ஆயிரத்துக்கு வாரம்பின்வாசி தரவு கூலி திருமுகச் சம்படம் சிதார்ப்படி எற்றிக்காசு ஆயிரத்து அறுபதும் இவர்கள் முன்நிந்று ஒடுக்காமையாலும் இன்நிலத்துக்கு அசலானனவர்களை தாங்களும் குறைவராயிருக்கையாலும் மாற்றுக்

கொள்வாரிலாமையில் ப்ரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி காசு ஒடுக்கவேண்டுவதாய் உடையார் திருமடமுடையார்கோயில் ஆதிசண்டெசுரப் பொருளாக இக்கோயில் மாயெசுரக்கண்காணி செய்வார்களுக்கும் சிரிகாரியம் செய்வார்களுக்கும் தெவகன்மி கொயிற்கணக்கனுக்கும் தெவர் குடிமை நாமத்தால்... யால்வந்த கடமையும் இறுத்து குடிமையுஞ் செய்யக் கடவதாக விற்று திரிபுவன தேவிவதிக்கு மேற்கு இராஜேந்திர சோழவாக்காலுக்கு தெற்கு முன்றங்கண்ணுற்று முன்றாஞ்சதிரத்தும் நாலஞ்சதிரத்தும் ஸபை$_4$விலையாக விற்கிற புந்சைத் தோட்டத்துக்கு கீழ்பாற்கெல்லை யழுந்தூர்வாய்க்காலுக்கு மெற்கும் தென்பாற்கெல்லை இவ்வாற்.... ககதவன் அழகிய மணவாள குளமும் கரைக்குங்......

3. னும் ஸ்ரீ கபாடன் பெரியாண்டானும் உள்ளிட்டார் விளை நிலத்துக்கு தெற்குமாக இசைந்த பெருநான்கெல்லை உள்நடுவுபட்ட புன்செய்குழி 950-த்துச்சின்நம் இக்குழி தொளாயிரத்து ஐம்பத்துச் சின்னமும் ஸபை$_4$ விலையாக விலை மதித்த காசு 1060 இக்காசு ஆயிரத்து அறுபது ஆவணக்களியெ காட்டெற்றிக் கைச்செலவறக் கொண்டு விற்று ஸபை$_4$விலை ப்ரமாணம் பண்ணிக் குடுத்தொம்.

# 9. கீழ்வலம் முதலாம் குலோத்துங்கன் கல்வெட்டு

ஜி. திருமூர்த்தி,
சந்திரகிரி

**இடம் :** *காஞ்சிபுரம் மாவட்டம், மதுராந்தகம் வட்டம், கருங்குழி - திருக்கழுக்குன்றம் சாலையில் 5 வது கி.மீ. தொலைவில் கீழ்வலம் ஊரில் அதிட்டானத்தின் ஜகதியின் மூன்று பக்கங்கள்.*

**காலம்:** *முதலாம் குலோத்துங்க சோழன் ஆட்சியாண்டு - 47 [1118]*

**செய்தி:** *முற்றுப்பெறாத இக்கல்வெட்டு களத்தூர் கோட்டத்து மதுராந்தக சதுர்வேதி மங்கலத்தின் வடபிடாகையான கீழ்கலம் ஸ்ரீ மதுரையாழ்வார் கோயிலுக்கு நிலக் கொடை அளித்தமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீமதுராந்தக சருப்பேதிமங்கலத்து மஹா ஸபையார் நியொகப்படி கீழ்கலத்து ஸ்ரீ மதுரையாழ்வார்க்கு கோயிலில் கல்வெட்டும்படி புகழ்மாது விளங்க ஜெயமாது விரும்ப நிலமகள் நிலவ மலர்மகள் புணர உரிமையற் சிறந்த மணி முடி சூடி மீநவர் நிலை கெட வில்லவர் குலை தர ஏனை மந்நவர் சிரியலுற்றிழிதரத் திக்கனைத்தும் தன் சக்கர நடாத்தி விசைம் பண்ணி வீரசிம்மாசனத்து உலகுடைய்யாளொடு வீற்றிருந்தருளிய கொராஜ கேஸரி பன்மரான சக்கரவர்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவருக்கு யாண்டு 47–வது ஜயங்கொண்ட கோழ மண்டலத்து களத்தூர் கோட்டத்து தநியூர் ஸ்ரீமதுராந்த சருப்பேதி மங்கலத்து வடபிடாகை கீழ்கலத்து ஸ்ரீ மதுரையாழ்வார்க்கு இளையதிரரில் நந்தப் பட்டநென் ஸ்ரீ ஹஸ்தத்து உதக பூர்வமாக நான் தானம் பண்ணிந பூமியாவது இவ்வூர் வடபிடாகை கருங்குழிக் கழநி ஸ்ரீராஜகேசரி வாய்க்காலுக்கு தெற்கு முதற்கண்ணாற்று ஸ்ரீதரவதிக்கு மேற்கு ஐஞ்சாசதிரத்து கிணற்று விளைநிலம் பாடகம் முன்செ.

# 10. ஆச்சாள்புரம் கல்வெட்டுகள்

கோ. விஜயவேணுகோபால்,
நா. பாபு [எ] ராமசாமி,
கே. இரவிந்திரன்,
புதுச்சேரி

10:1

**இடம் :** *நாகப்பட்டினம் மாவட்டம், ஆச்சாள்புரம் சிவலோகதியாகர் கோயில் இரண்டாம் பிரகாரம் தென் சுவர்.*

**காலம் :** *சோழன் இரண்டாம் இராசாதிராசன், ஆட்சியாண்டு 14 [1177]*

**செய்தி :** *குலோத்துங்க சோழ சதுர்வேதி மங்கலத்து சபையார் [பிராமண நிலக்கிழார்] அவர்களுடைய உழுகுடிகள் செலுத்த வேண்டிய குத்தகையைக் குறைத்ததைப் பற்றிய தீர்மானம் பற்றியது. மேலும் அடிமைகள் வைத்துக் கொள்வது போன்ற சில உரிமைகள் பற்றியும் குறிப்பிடுகிறது.*

1. ஸ்வஸ்ஸ்ரீ கடல் சூழ்ந்த பார்மாதரும் பூமாதரும் கலை மாதரும் மடல் சூழ்[ந்]த போர்மாதரும் சீர்மாதரும் அமர்ந்து வாழ நாற்கடல் சூழ் புவிநாடும் பாற்கடல் போல் புகழ் பரப்ப ஆதி உகமாமென்னச் சோதிமுடி புனைந்தருளி அறுசமையமும் ஐம்பூதமும் நெறி நின்று பாலிப்பத் தென்னவருஞ் சோலருஞ் சிங்களரு முதலான மன்னவர்கள் திறை சுமந்து வந்தண்டிச் சேவிப்ப ஊழி ஊழி ஒரு செங்கோல் எழு பாரும் இனி தளிப்பச் செம்பொன் வீரஸிங்நாஸனத்து உலகுடை மு
2. வீற்றிருந்தருளிய கோஇராஜகேசரி பற்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் மதுரையும் ஈழங்கொண்டருளின ஸ்ரீஇராஜாதி$_4$ ராஜதேவற்கு யாண்டு பதிநாலாவது உடையார் திருச்சிற்றம்பலம் முடையார் தேவதானம் வடகரை இராஜாதி$_4$ராஜவள நாட்டு வெண்ணையூர் நாட்டுப் பஞ்சவன் மாதேவியான குலோத்துங்க சோழச்சருப்பேதிமங்கலத்து பெருங்குறிப் பெருமக்கள் எழுத்து நம்மூர் பிடாகை நினைந்த .. வாறபட....த கல்லூரும் தில்லை

அழகநல்லூரும் உள்ளிட்ட பிடாகைகளில் உழுகுடி வெள்ளாளர் கண்டு தாங்களும் நாலாவதுமு

3. கடமை அளக்கு மிடத்து முன்பிலாண்டுகள் தலைவரிசை கால் செய்க்கு எண்பதின் கலவரிசையான நிலம் எழுதின் கலமாகவும் எழுத்தைங்கல வரிசையான நிலம் அறுபத்தைங்கலமாகவும் எழுபதின் கலைவரிசையான நிலம் அறுபதின் கலமாகவும் அறுபத்தெல்லை வரிசை [து]டங்கி நாற்ப்பதின் வரிசை அறுதியாக தோறு[ம்] ஐங்கலநெல்லு தாழ்வதாகவும் ஒரு மரக்கால் செய்க்கு நாற்ப்பதின்கல வரிசை துடக்கி ... வரிசை அறுதியாக வரிசை தொறும் ஐய்க்கலநெல்லுத் த[ழ்]வதாகவும் இருப்பத்தைங்கல [வரிசை]...

4. கவும் இருபதிந்கல வரிசைக்கு இருகல நெல்லுத் தாழ்வதாகவும் இவையிற்றி[றா]ல் வரிசைக்கு ப...நிலங்களும் ...ளத்துக்கு அடுத்த நிலங்களும் வாரம்2 ண்ணும் இடத்து வெள்ளான் பற்றும் இறையிலி தெவதானா.... மூதாற்க்கு வார ... முண்... மிடத்து ஐஞ்சில் இரண்[டு] வாரமுண்ணக கடவதாகவும் குடிவாரத்த.... ஆவதாக[வும்]... குடிபற்று உழுதாற்கு மூன்றத்தொன்றும் உடன் வார

5. [வி]ளையு நிலங்களில் பயறு அந்நிலத்துக்கு அளிக்க வேண்டும் பயறு அளக்க கடவ... வும் விளைநிலத்துப் பாழில் வி[ளை]ச்சின எள்ளும் பயறுமி செவ்வாரம்முண்ணக் கடவதாகவும் காரில் பண்டாரத்து எடுத்தளக்கும் நெல்லு நாங்களெடுத்தளக்ககடவோமாகவும், காரும் பசானமுங்குண்டிகைக்கு இடவேண்டுங்காசுக்கு விற்ற விலைநெல்லும் பொலிசை –

6. சென்னலிலே செம்பாதி நெல்லு நாங்களேய் சத்தக்கூலி பட்டு எடு[க்]ககடவே[ா]மாகவும் சென்னல் அளந்து தருமடத்து ஒக்கும் [மரக்கா] லே அளக்கக் கடவர்களாகவும் புன்பயிர் செய்த நிலத்துக்கு இருபது காசு இரு நிலத்துக்கு பதிநேழு[கா]சு இடக்கடவதாகவும் பதிநெட்டுக் காசு துடங்கிப் ப[த்]துக்காசு இடுநிலத்தளவு[ம்] வரிசைதொறும் இவ்விரண்டு காசு தாழக்கடவதாகவும் பின்பு ஐஞ்சு காசு இடு நிலத்தள

7. ..................ார் இழக்கக் கடவதாகவும் இப்படியால் வந்த கடமை கொள்ளு மடத்து...............

8. மக்களுக்கு மேல் ஸொம்மாவதாகவும் இவன் மரிப்பதற்[கு] முன்பு

தட்டுப்படாநாகில் இவள் தேடின அடிமை[யு]ம் காணியும் இவன் விற்றாற்கே [விலை] ஆவதாகவும் பிராமணர் எருது கட்டி[க்கொ]ண்டு உழக்கடவர்கள் அல்லாதார்கள் ... ம் பணிசெய்மக்[கள்] வேளும் அரசும் லெ[ப]றாதா[ர்]ஆகவும் காவிரிகளும் குசவரும் உவைச்சரும் சாலியரும் அம்பணவரும் குடிம...வக்த.... வர்கள் அல்லாதார் ஆகவும் இவர்[க]ள் நந்மைத் தீமைக்குப் பேரி[லெ]க கொட்டக் கடவர்கள் அல்லாதாராகவும் இவர்கள் அடிமை ஆளக்

9. கடவர் அல்லாதாராகவும் ஊர் உாய... காலி இடையன் மேத்து இஷ்டத்துக்கு தொள – இட்டுக் குடுத்தால் தொளத்தை புக அடிக்ககடவராகவு[ம்] ஊர் மநையில் நெல்லு நடக்கடவதல்லாதாகவும் குசவன் அகலும் குடமும் இ[ட்டு] கடை உணாவுங் கொண்டு பரிசட்டமும் கு[டுக்க [கட]வதாகவும் – மக்களில் பெற்றுடையார் ...............ள ஆடுமாடு ஆளக் கடவராகவும் அல்லாதார் தவிரக் கடவராகவும் இப்ப[டிச் செய்ய]க் கடவதாகவும் சொன்நொம் இந்நியொகப்படிக்கு அழிவுசொந்நார் திருவாணை[யு]ம் ஆயிரத்தொண்ணூற்றுவன் ஆணையும் மறுத்தார் பட்ட

10. து படக்[க]டவர்கள்ளாகவும் சொன்னோம் இந்நியோகப்படியெ உடையார் திருப்பெருமணமுடையார் கோயிலில் தி[ரு]மாளிகையில் கல்லிலெ வெட்டிக் கொள்ள பண்ணுக பணியால் ஊர்கணக்கு க..ணபூருடையான் அம்பலங்கோயில் ....கா....ன் உதையந் செய்தாநான கற்பகப் பிரியன் எழுத்து பணியால் ஊர் கணக்கு வானவன் மாதேவி உடையான் உத்தம....யன் எழுத்து பணியால் ஊர்க்கணக்கு சிம்மனி உடையான் இளமை ந....னான ஆயிரத்தொண்ணூற்றுவப் பிரியன் எழுத்து பணி

11. யால் ஊ........................... இப்படிக்கு இவை காமக்காணி திருச்சிற்றம்பலமுடையான் [ப]ட்டன் எழுத்து இப்படிக்கு இவை தில்லை மூவாயிர நம்பி எழுத்து இப்படிக்கு இவை தெய்வநாயகபட்டன் எழுத்து இப்படிக்கு [இ]வை திருச்சிற்றம்பல நம்பி எழுத்து இப்படிக்கு இவை இராயூர் சிவக்கொழுந்துபட்டன் எழுத்து இபப்டிக்கு இவை அமுத தில்லை அமுத பட்டன் எழு து இப்படிக்கு [இ]வை திருவம் பல...ள

12. ழுத்து இப்படிக்கு இவை திருநானசம்பந்தநம்பி எழுத்து இப்படிக்கு இவை கெங்காதரபட்டன் எழு[த்து] இப்படிக்கு இவை

இடையாற்றுக்குடி இராயகெசவப[ட்]டன் எழுத்து இப்படிக்கு இவை இடையாற்றுக்குடி நாராயணன் பட்ட ........ யார் எழுத்து இப்படிக்கு இவை ஏமபேலூர் சா[ம/த] வேதவபட்டன் எழுத்து இப்படிக்கு இவை வாகை குறை மண்டை ஆழ்வான் எழுத்து இ.... அட்டகம்புறத்து திருவெண்காடுபட்ட[ன்] எழுத்து இப்படிக்கு இவை செந்தாமரைக் ............. பட்டன் எழுத்து [இப்படி]க்கு இவை காது......................ண்காடு

13. ப்ப[ட்]டன் எழுத்து இப்படிக்கு இவை காமக்காணி வீற்றிருந்தான் பட்டன் எழுத்து இப்படிக்கு இவை காமக்காணி சந்திரபூஷணப்பட்டர் எழுத்து இப்படிக்கு இவை காரா[ம்] பிச்செட்டு திருவெண்காடுபட்டன் எழுத்து இப்படிக்கு இவை நாற்ப்பத்தெண்ணாயிர நம்பி எழுத்து இப்படிக்கு இவை நடாதூர் தொண்ட குமார பட்டந் எழுத்து இப்படிக்கு இவை ப[ா]களூர் தொ[ம்ம]யபட்டந் .... பெ.... ப்படிக்கு இவை காமக்காணி வீற்றிருந்தாந் தெய்வநாயகப் பட்[டன்] எழுத்து இப்படி [ா]க்கு இவை காமக்காணி சரிை............. ட்டன் எழுத்து

## 10:2

**இடம் :** *மேற்படி கோயில்இரண்டாவது வடக்கு வெளிச்சுவர்*

**காலம் :** *மூன்றாம் குலோத்துங்கன், ஆட்சியாண்டு 10 [1188]*

**செய்தி :** *ஊர்க்கீழி இறையிலியாக விட்ட நிலத்தின் விப்பா வினியோகம் இறுதித் தரவும் கோவிலக்கு அளிதராயம் வரிசைப்படி காசு ஒடுக்கவும் செய்தமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ ............. ஸ்ரீ குலோத்துங்க [தே]தவற்கு யாண்டு பத்தாவ[து] நாயற்று... திங்கள்கிழமை பெற்ற....து...ள உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானம் வடகரை ராஜாதி$_4$ராஜவளனாட்டு வெண்ணை... சதுர்வேதிமங்கலத்து உடையார் ஸ்ரீகைலாஸமுடையார்... திருப்பெருமணமுடையார் கோயில் தீர்த்தகுளம்...................

2. முதுசெய்தருள – வீனோதங்கண்டருளா.... க்க இக்கோயில் தானத்தார் இந்நாயனார்க்கு முன் – ஊர்க்கீழ் இறையிலியாக விட்டு அனுபவித்து வருகிற நிலத்து ஸபா வினியோகம் த்துத் தரவேணுமென்று மஹாஜன.. மார் நமக்குச் சொன்னமையில்

இந்னாயனார் திருநாமத்து இறையிலியாக முன்பு விட்ட விளைநிலத்தால் இறையிலி மடக்கிலே இருமாவரை மடக்கு இவ்வாண்டு பசான முதல் ஸபா வினியோகம் – ழிக்கவும் அந்தராயம் வரிசைப்படி காசு ஒடுக்கவும் கடவதாகச் சொன்னோம். இப்படி செய்ய பண்ணுக பணியால் ஊர்க்கணக்கு திருச்சிற்றம்பலப் பிரியன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை – ழகூர் திருவெண்காடுபட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை – ன்திரமங்கலத்து திருக்கழிப்பாலை உடையான் பட்டன் எழுத்

3. தென்றும் இப்படிக்கு இவை நடா கமுடையான் பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை பாரதாயன் திருக்கழிப்பாலைஉடையான் பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை இராயூர் திருச்சிற்றம்பலமுடையான் பட்டன் எழுத்தென்றும் இவை காமக்காணிச் சுப்பிரமணிய பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை பிரயாகை பரமன் பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை காமக்காணி திருவெண்காடு பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை ஆரிதன் திருச்சிற்றம்பலமுடையான் பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை விளமயூர் திருவெண்காடு பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை மாடலன் திருவெண்காடு பட்டன் எழுத்தென்றும் எழுதின நியோகப்படி :

**10:3**

**இடம் :** *மேற்படிக் கோயில் இரண்டாவது சுற்று வடக்கு வெளிப்புறச் சுவர்.*

**காலம் :** *மூன்றாம் இராசராசன், ஆட்சியாண்டு 2 [1248]*

**செய்தி :** *திருப்பெருமணமுடையார் கோயில் ஆளுடைய பிள்ளையார் [திருஞானசம்பந்தர்] மற்றும் சொக்கி யார் காவேரிக்குத் தென்கரை ஊர்களில் திருவீதியில் செல்கின்றபொழுது ஆச்சாள்புரம் சைலாசநாதர் கோவிலின் வந்திருளும் பொழுது வேண்டிய செலவினங்களுக்கு நிலக்கொடை அளித்தமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ உ தி[ரு]புவனச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தேவர்க்கு [யா]ண்டு இரண்டாவது நாள் நாற்பத்தைஞ்சினால் உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானம் ராஜாதிராஜ

வ[ள] நாட்டு வெண்ணையூர் நாட்டுப் பஞ்சவன் மாதேவியான குலோத்துங்க சோழச்சருப்பெதிமங்கலம் கற்கடக நாயறு முதல் [கிரா]ம காரியஞ் செய்கிற கூட்டப் பெருமக்களோம் எழுத்து உடையார் திருப்பெருமணமுடையார் கோயில் தானத்த[ார்] கண்டு இந்னாயனார் கோயில் ஆளுடைய பிள்ளையாரும் ம......... சொக்கியாரும் காவேரிக்[கு] தெற்கு[ப]ட்ட ஊர்களில் திருவெண்காட்டிலும் திருநன்னிபள்ளியிலும் திருவக்கூரிலும் எழுந்தருளிப் பின்பு பெரும்பற்றப்புலியூரிலே எழுந்தருளி அருளுகிற இடத்து நம்மூரிலே எழுந்தருளிப் புகுந்து கிராமப்பிர தெக்ஷணமாக எழுந்தருளி ஆ....ரிஉடை

2. யார் ஸ்ரீ கைலாஸமுடையார் கோயிலில் எழுந்தருளி இருந்து திருவடி விளக்கி அருளி.... தருளினமையில் இந்நாள் முதல் சிறுகாலை [ச]ந்தியிலே ஆயிரத்தொண்ணூற்று[வ]ன் ஸந்தி என்று அமுது செய்தருள் ........... கரிகால சோழதேவர்க்கு பன்னிரண்டாவது தரம் பெற்ற விளை நிலத்து பெரிய தேவர் திரிட$_4$வன [ம]ஹாதேவர்க்கு முப்பதாவது நாளில் [திரி]புவன வீரமங்கலம் என்று பிறிந்த நிலத்தால் நெல்லுக்கும் பல...இறுப்பில் இறையிலியாகவிட்ட நிலத்தால் நெல்லுக்கும் தலைமாறு கிணைதரம் பாற்கிற இடத்து பாசனமய கோளரிநல்லூர் அங்னவி[ச்]சாதிர வதிக்கு கிழக்கு குலோத்துங்க சோழ வாய்க்காலுக்குத் தெற்குந் நாலாங்கண்ணாற்று மூன்றாஞ்சதிரத்து வடக்கடைய உறத்தூருடையான்

3. ..................சதிரத்தும் பிணங்கொண்[டு] போ[கு]ம் ஆறும் கரையும் என எழுதின நிலத்து புடவூர்வேளாண் திருத்தி தெறம் பிரச் செய்து வருகிற நிலமாய் [தி]னைதர பட்டோலை எழுதிக் கூட்டிக் கொள்ள[வு]ங் கிடந்த நிலத்தில் கூட்டிக் கொள்ளும் மடக்கு நிலம் கீழ் முக்காலு வீரசிகாமுகவதிக்குக் கிழக்கு தில்லை நாயக வாய்க்காலுக்கு தெற்கு இரண்டாங்கண்ணாற்று நாலாஞ்சதிரத்து மூன்றாங் கண்ணாற்று நாலாந்சதிரத்தும் பிணங்கொண்டோடி ஆறும் கரையும் என்று எழுதின நிலத்து கிளிஞலூர் கிழவன் திருத்தி நெல் பயி[ர்] செ[ய்]து வருகிற நிலத்து கினைதரப்பட்டோலை எழுதிக் கூட்டிக் கொள்ளாது கிடந்த நிலத்தில் கூட்டிக் கொள்ளும் மடக்கு நிலம் கீழரையும் ஆக மடக்கு நிலம் முந்திரிகைக் கீழ் முக்காலே இரண்டு மாக்காணிக் கீழரை மறுப்பற்றுக்களிலே இரண்

4. டாவது பசான முதல் கூட்டிக் கொள்ள[க்க]டவதாகவும் பட்ட விருத்தி இறையிலியல் ஈவரசிவ விருத்தி இறையிலியிலே நாற்பத்து அறுகலனே முக்குறுணி ஐஞ்ஞாழி நெல்லும் விய....தரன் விருத்தியிலே பதின்கலனே இரு தூணி நெல்லும் ஆக நெல்லு ஐம்பத்தறுகலனே இரு தூணி முக்குறுனி ஐஞ்ஞாழி நெல் மடக்கு நிலம் அரைக்காணிக் கீழ் இருமாவரையே அரைக்கா முந்திரிகை கீழரை இம்மடக்கு நிலம் அரைக்காணிக் கீழ் இருமாவரையே அரைக்காணிக் கீழ் இருமாவரையே அரைக்காணி முந்திரிகைக் கீழரையும் கிணைதரத்துக் கூட்டிக் கொண்ட [மட]க்கு நிலம்

5. மூந்[ற]ரைக் கீழ் முக்காலே இரண்டு மாக்காணிக் கீழரைய்ம் ஆக மடக்கு நிலம் காணி இம்மடக்கு நிலம் காணியும் இரண்டாவது பசான முதல் இறையிலியாக விடவும் இம்மடக்கு நிலம் காணிக்கும் ஊர்[மா] வீந்த அந்தராய வினியோகம் உள்ளூர் குண்டிகையிலே ஒடுக்கித் தரவு கொள்ளவும் நீக்கி நின்ற உ...............டிமாற்றுக்கு உடலாக கொள்ளவும் இம்மடக்கு நிலம் காணி[யு]ம் [க]ழிக்குமிடத்து உடையார் திருப்பெருமணமுடையார் – னாமத்துவரி அற்று வருகிற இறுப்பு விளைநிலமடக்கிலே இம்மடக்கு காணியும் பசான முதல் இறையிலியாக நிற்கவும் இம்மடக்கு நிலம் காணிக்கும் ஒட்டுப்படி நெல்லு நூற்று அறுகலனே இரு தூணி இந்நெல்லு நூற்று அறுகலனே இரு தூணியும் அந்தராயமும் ஊர் வினியோகமும்

6. நீக்கி நீக்கி நின்ற உடல் கொண்டு உலகுடையநாயனார் திருமேனி கல்லியாண திருமேனியாக அமுதுபடி செலுத்தவும் செலுத்துமிடத்து சிறுகாலை ஸந்தியிலே ஆயிரத்தெண்ணூற்று வன் ஸந்தி என்று ....னையாரும் சொக்கியாரும் அமுது செய்தருளவும் இச்சந்தியிலே அக்கிர........... ஒடுக்கி நாள் ஒன்றுக்கு இரு நாழி அரிசி ......... ஆயிரத்தெண்ணூற்றுவன் ஒடுக்கென்று அபூரிகளாய் வந்த பிராமண[ர்]க்கு திருமுன்பே பிரசாதிக்க கடவதாகவும் சொன்னோம் இப்படிச் செய்யப் பண்ணுக பணியால் ஊர்க்கணக்கு ஸ்ரீமாயேச்வரப்பிரியன் எழுத்தென்றும் பணியால் ஊர்க்கணக்கு இடைமணலுடையான் எழுத்தென்றும் பட்டப்பிரியன் எழுத்தென்றும் பணியால் ஊர்க்கணக்கு ஆயிரத்தெண்ணூற்றுவப்பிரியன் எழுத் தென்..........

**10:4**

**இடம் :** *மேற்படி கோயில் வடக்கு ஜகதி.*

**காலம் :** *12-13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *திருப்பெருமனமுடைய மகாதேவர் கோயிலுக்கு மஹிபாலகுல காலப் பேரளத்திலிருந்து 3000 கலம் ஆண்டுக்குக் கொடுத்தமை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ த்ரிபு$_4$வனச் சக்கரவர்த்தி கோநேரின்மை கொண்டான் ராஜாதி$_4$ராஜ வளநாட்டு
2. வெண்ணையூர் நாட்டு நல்லூர்த் திருப்பெருமணமுடைய மஹாதே$_3$வர் ஸ்ரீ கோயிலில் தேவகன்மிக்கும்ஸ்ரீ
3. மாஹேச்வர கண்காணி செய்வானுக்கும் இத்தேவர்க்கு உப்பமுதுக்கு நல்லூரான மஹிபாலகுலகாலப்பேர
4. ளத்து முன்பு விட்டு ஸம............ படப் பத்தாவது நாள் நூற்றெண்பத்து நாலு முதல் ஆண்டொன்றுக்கு ஊர்க்
5. காலால் மூவாயிரக்கல உ[ப்ப] ாக ஆட்டாண்டு தோறும் விடக்கடவதாகவும் இதில் உப்பமுதுக்கு வேண்
6. டுவது விட்டு ஏற்றமுள்ளது விற்றுச் சந்தன சிதாரியுள்ளிட்டு வேண்டுவன கொண்டு விடக்கடவதாக
7. வும் இப்படிக்கு வரியிலாரும் வரிக்கூறு செய்வார் தாம் எழுத்தி.............. ரச்சொன்னோம் பத்தாவது............................

# 11. கொண்டகரஹள்ளி நடுகற்கள்

இரா. ரமேஷ்,
சென்னை

**11:1**

**இடம் :** *கொண்டகரஹள்ளி, தருமபுரி மாவட்டம் தருமபுரி வட்டத்தில் பொம்மிடியிலிருந்து மேற்கே 5 கி.மீ. தொலைவில் வத்தல் மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு மேற்கே மலையடி வாரத்தில் உள்ள ஏரிக்கரையில் பத்து நடுகற்கள் நடப் பட்டுள்ளன. அவற்றில் ஆறு நடுகற்கள் கல்வெட்டு டனும் சில நடுகற்கள் உடைந்தும் காணப்படுகின்றன இரண்டு நடுகற்களின் கல்வெட்டுகள் மட்டும் முழுமையாக படிக்கப்பட்டுள்ளன.*

**காலம் :** *கி.பி. 10 ஆம் நூற்றாண்டு, கன்னட எழுத்து*

**செய்தி:** *முதல் நடுகல்லில் வீரனின் வலது கையில் குறுவாளும், இடது கையில் வில்லும் காணப்படுகிறது. வீரனின் வயிற்றுப்பகுதியில் இரண்ட அம்புகள் பாய்ந்துள்ளது விரனின் வலது புறம் குதிரையில் இரண்டு வீரர்கள் அமர்ந்துள்ள நிலையில் ஒருவரின் கையில் குடையும் மற்றொருவரின் கையில் வாளும் தாங்கி உள்ளனர். இடது காலுக்குக் கீழ் நான்கு மாடுகள் காட்டப்பட்டுள்ளன மேலும் வீரனின் தலைக்கு மேல் ஒரு தொடரில் இரண்டு தேவகன்னிகள் வீரனைத் தூக்கிச் செல்வது போன்று காட்டப்பட்டுள்ளது. இக்கல்லில் கல்வெட்டு இல்லாமல் அருகில் உள்ள பலகைக் கல்லில் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. பல்லவ குலதிலக, ஸ்ரீ பிருதுவி வல்லப, காஞ்சிபுர பரமேஸ்வர ஸ்ரீ மணிபதி ராஜ மற்றும் ஜகதேகமல்ல என்ற பட்டங்களைக் கொண்ட பல்லவ அரசு வழியில் வந்த பயலிசிரதேவாவின் மகனான சபதுக தேவா என்பவர் இப்பகுதியினை ஆட்சி செய்யும் போது*

*அவனுக்கு கீழ் இருந்த ஹொாசய்யாவின் மகன் மாசய்யா என்பவர் தொறுபூசலில் இறந்தார். தொறுபூசலில் இறந்த நடுகல் நடப்பட்டது*

**11:2**

**இடம் :** மேற்படி

**காலம் :** *கி.பி. 10 ஆம் நூற்றாண்டு, கன்னட எழுத்து*

**செய்தி :** *இந்நடுகல் கிழக்குப் பார்த்த நிலையில் நடப்பட்டுள்ளது. வீரனின் வலது கையில் குறுவாளும் இடது கையில் வில்லும் வைத்துள்ளான். வீரனின் கழுத்து மற்றும் வயிற்றுப் பகுதியில் அம்புகள் பாய்ந்துள்ளன மேலும் வீரனின் தலைக்கு மேலே இரண்டு தேவகன்னிகள் வீரனை தூக்கி செல்வது போன்று காட்டப்பட்டுள்ளது. வீரனின் தலைக்கு மேல் கல்வெட்டு வெட்டப்பட்டுள்ளது. தொறுபூசலில் தியாக கவுண்டர் சல்லயன் என்பவரின் மகனான சிணம என்பவர் இறந்ததைக் கூறுகிறது.*

# 12. ஓமந்தூர் - பீமேசுவரர் திருக்கோயில் கல்வெட்டுகள்

கோ. உத்திராடம்,
ப. பூபாலன்,
சென்னை

**12:1**

**இடம் :** *விழுப்புரம் மாவட்டம், திண்டிவனம் வட்டம், ஓமந்தூர் பீமேசுவரர் திருக்கோயில் தீர்த்தக் கிணறு அருகில் தரையில் காணப்படும் பலகைக் கல்வெட்டு.*

**காலம் :** *முதல் இராசராச சோழன், ஆட்சியாண்டு - 11 996*

**செய்தி :** *பீமேசுவரர் திருக்கோயிலில் நொந்தா விளக்கெரிக்க தொண்ணூறு ஆடு கொடையாக வழங்கியுள்ளமை.*

1. ஸ்ரீகோ ராஜ
2. ராஜ ராஜகே
3. சரி வந்பற்கி யா
4. ண்டு 11 ஆ
5. வது இவ்வூர் கு
6. ன்றங்கிழான்
7. கரணபறியன்
8. திருவருளிச்வரத்
9. தாழ்வாற்கு ஆ
10. ற்றின் மேல் கரை
11. க்கொல்லை வி
12. லை கொண்டுதிருத்
13. தின திருவருளி
14. செறுவும் ஊர்
15. ப்பக்கல் விலை
16. கொண்டு திருத்தி

17. ன கர்னன் குண்
18. டிலுமாக நந்தா வி
19. ளக்கு இரண்டுக்கு
20. நிபந்தம்
21. பறியன் கரணன்
22. வைத்த நந்தா
23. விளக்கு ஒன்று
24. க்கு விட்ட ஆடு
25. தொண்ணூறு
26. இவை கைக்
27. கொண்டு இத் தெவர்க்க
28. ஊரார் வைத்த
29. மான செறு நொ
30. ந்தா விளக்கு ஒன்
31. றுக்கு நிவந்தம்
32. மலையன் புத்த
33. ன் மேல் கரைக்
34. கொல்லை விலை
35. கொண்டு திருத்தி
36. ன செறுவுந் நந்தாவி
37. ளக்கரைக்கும் நக்க
38. ன் இளவையனு
39. ந்தம்பி மாரும்
40. மேல் கரைக்கொ
41. ல்லை விலை
42. கொண்டு திருத்
43. தின வரவை ந
44. ந்தா விளக்கரை
45. யுமாக விளக்கு
46. ஒன்றுக்கு நிபந்த

47. ம் கணவதிக்குநகுல
48. நுமல்லனைஞ்
49. னூற்றுவ நுமாக
50. திரிஸந்திக்கு விள
51. க்கு ஒன்றுக்கு வி
52. ட்ட ஆடு இருபத்
53. தேழு இராசிங்க
54. னாதித்தன் ச
55. ந்தி விளக்கொ
56. ன்றுக்கு விட்ட ஆ
57. டொன்பது ஸ்ரீகோ [யி]
58. லுடையார்கள் [தெ]
59. வணிகொண்டு ஸந்தி
60. மூன்றுக்கு விளக்கொ
61. ன்று காணி நாழி சந்தி வி
62. ளக்கு ஒன்றுக்கு விட்ட ஆ
63. டொன்பது....
64. ..................................................

## 12:2

**இடம் :** ஒமந்தூர் பீமேசுவரர் திருக்கோயில் கருவறை கிழக்கு முப்பட்டை குமுதம்

**காலம் :** முதலாம் இராசநாராயண சம்புவராயன் [கி.பி. *1337 - 1367*]

**செய்தி :** ஒய்மா நாட்டு ஒகந்தூரில் அமைந்துள்ள திருவீமீசுவர முடையார் திருக்கோயிலுக்கு கரைக்காடன் பற்று ஊரினைச் சார்ந்தவர்கள் பூசை, திருப்பணி செய்ய கொடை வழங்கியுள்ளனர். மேலும் சிறுநாவலூர் வரிகளையும் சர்வமானியமாகக் கொடுத்துள்ளனர்.

1. சுபமஸ்து அறமிறங்கா ஒய்மானாட்டு ஒகந்தூரில் திருவிமீசுரமுடையார் இறங்கல் மீட்ட நாயனார்க்குக் கரைக்காட்டுப் பற்றுனாட்டவரோம் பூசைக்குந் திருப்பணிக்குந் திருச்சூலதாபரம் பண்ணி மேழி பசும்பை



2. சதிரமுடி இட்டு ஆதிசண்டேசுர உதகம் பண்ணித் திருநாமத்துக்காணி ஆக நாட்டு இறையிலி ஆக சறுவ மானியமாகத் தந்த சிறுவலூர் முன்பிலாண்டு போலெ சகலலோக

3. சக்கரவர்த்தி இராசநாராயண சம்புவராயர்க்கு 19 முதல் திருநாமத்துக் காணி ஆன சிறுநாவலூர்க் கடமை விநியோகம் மற்றும் எப்பேர்ப்பட்ட உபாதிகளு[ம்] நாங்களே இறுத்து

4. தரக் கடவதாகவும் நாட்டிறையிலி ஆகத் தந்தோம் கரைக்காட்டுப் பற்று நாட்டவரொம் இவர் பணியானமைக்கு

இவை அறம் இறங்கா நாட்டுப் பிரம்மாதராயன் எழுத்து.

## 12:3

**இடம் :** *பீமேசுவரர் திருக்கோயில் கருவறை வடக்கு முப்பட்டை குமுதம்*

**காலம் :** *முதலாம் இராசநாராயண சம்புவராயன் ஆட்சியாண்டு 18, [1355]*

**செய்தி :** *திருவீமீசுவர உடையார் திருக்கோயில் பூசை, திருப்பணி செய்ய நூலாயம், சூலவரி போன்ற வரிகளை வழங்கியுள்ளார்.*

1. ஸ்வஸ்திஸ்ரீ சகலலோகச் சக்கரவர்த்திய் இராசனாராயணன் சம்புராயற்கு யாண்டு 18வது பங்குனி மாதம் ஒமாநாட்டு ஒகந்தூரில் உடையர் திருவீமீசுவர உடையனாயினார் யிறங்கல்மீட்ட நாயனார் திருமடைவளாகம் நாட்டார் அடைச்சு கொண்டு போந்த படியாலே பதினெட்டாவது பங்குனி மாத முதலுக்கு

2. நாட்டார்க்கு பணி அல்ல என்று முதலடங்க இறையிலி ஆக வேண்டுங்குடி ஏற்றிக் கொண்டு இவர்கள் பேரால் கொள்ளுங் கடமை வினிவோகம் நூலாயம் சூலவரி மற்றும் உள்ள பல்வரிகளுஞ் சறுவமானியமாக பண்ணி கொண்டு பூசையுந் திருப்பணியும் தாழ்வற நடத்திப் போதவும் சொன்னோம் இப்படி செய்வதே...

# 13. அரியலூர் - பெரம்பலூர் வட்டக் கல்வெட்டுகள்

இல. தியாகராஜன்,
அரியலூர்

**13:1**

**இடம் :** *திருமழபாடி [அரியலூர் மாவட்டம், அரியலூர் வட்டம்] வைத்தியநாத சுவாமி கோயில் உற்சவர் சன்னதி தெற்குச் சுவர் ஜகதி பீடம் -*

**காலம்:** *[மூன்றாம் இராஜராஜன்] 12ஆம் நூற்றாண்டு .*

**செய்தி:** *வைத்தியநாத பெருமாளுக்கு திருக்கற்றளியும் திருமண்டபமும் கூற்றூர் உடையான் தெற்றிப் பெரியான் ஆன எதிரிலி சோழ மூவேந்த வேளான் என்பவர் கட்டியுள்ளார். இவர் உத்துங்கதுங்க வள நாட்டுக் குன்றக்கூற்றத்து கூற்றூரிலும் குளப்பாடியான குலோத்துங்க சோழ கூற்றூரிலும் காணி உரிமை உடையவராக இருந்துள்ளார். இவர் இக்கோயிலில் உள்ள மூன்றாம் இராஜராஜனின் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுவதால் பின்வரும் கல்வெட்டும் இம்மன்னருடையது என்று கருதலாம்.*

1. ஸ்வஸ்திஸ்ரீ வைத்யநாதப் பெருமாளுக்கு இத்திருக்கற்றளியும் திருமண்டபமும் செய்வித்தான் உத்துங்க துங்க வளநாட்டுக் குன்றக் கூற்றத்து கூற்
2. றூரிலும் குளப்பாடியான குலோத்துங்க சோழன் கூற்றூரிலும் காணிய் விட்ட கூற்றூர் உடையான் தெற்றி பெரியான் ஆன எதிரிலிசோ
3. ழ மூவேந்த வேளான்.

**13:2**

**இடம் :** *எறக்குடி [அரியலூர் வட்டம்] மத்யார்ஜுனேசுவரர் கோயில் கருவறை தென்புறச்சுவர்.*

**காலம்:** *மூன்றாம் குலோத்துங்க சோழன் [1178-1218] ஆட்சியாண்டு 13 [1191]*

**செய்தி :** *இது மூன்றாம் குலோத்துங்க சோழனின் ஆணை ஆகும். இம்மன்னர் இரைக்குடி மதுராந்தக ஈஸ்வரமுடையார் கோயிலுக்கும், திருவாய்ப்பாடி ஆழ்வார் கோயிலுக்கும் சுத்த மல்லியில் இறையிலி தேவதானமாக நிலம் வழங்கியுள்ளார். இவ்வூரில் இருந்த நிலங்களில் இரண்டு பங்கு நிலம் சிவன் கோயிலுக்கும், ஒரு பங்கு நிலம் பெருமாள் கோயிலுக்கும் கொடுக்கப்பட்டுள்ளது. மன்னரின் ஆணையை திருமந்திர ஒலை நெறியுடைச் சோழ மூவேந்த வேளார், குருகுலராயர், விழிஞத்தரையர், இலாடராயர், மலையப்பிராயர், கச்சிராயர், வயிராதராயர், அமரக்கோனார், காடுவெட்டிகள், நரசிங்கபன்மர், வேணாடுடையார் ஆகிய அதிகாரிகள் எழுதி கையொப்பம் இட்டு உள்ளனர். இரைக்குடி குன்றக் கூற்றமான உத்துங்க துங்க வளநாடு என்னும் நாட்டுப் பிரிவின் கீழ் இருந்துள்ளது. இவ்வாறு நிலம் வழங்க வேண்டும் என்று வேணாடுடையான் என்னும் அதிகாரி மன்னருக்கு எடுத்துச் சொன்னதின் பேரில் மன்னர் இந்நிலக் கொடையை வழங்கியுள்ளார்.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரத்திகள் மதுரையும் கொண்டு பாண்டியன் முடித்தலையும் கொண்டருளி ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு
2. யாண்டு பதின் மூன்றாவது நாள் நூற்றொன்றினால் பிரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி திரிபுவனச் சக்கரத்திகள் கோனேரின்மை கொண்டான் குன்
3. றக் கூற்றமான உத்துங்க துங்க வளநாட்டு இரைக்குடி மதுராந்தக ஈஸ்வரமுடையார் கோயில் தேவகன்மிக்கும் கோயில் கண்காணி செய்வார்களுக்கு
4. ம் ஸ்ரீகாரியஞ்செய்வானுக்கும் இத்தேவர்க்கும் இவ்வூர்த் திருவாய்ப்பாடி ஆழ்வார்க்கும் இன்னாட்டு சுத்த மல்லியில் பன்நிரண்டாவது வரையும் தேவதானமா
5. ன நிலம் நீக்கி நீக்கிநின்ற நிலத்து மூன்று கூறிட்ட இருகூற்றில்

வந்த நிலம் இத்தேவர்க்குத் தேவதான இறையிலியாகும் ஒரு கூற்றால் வந்த நிலம் இ

6. வ்வாழ்வார்க்குத் தேவதான இறையிலியாகவும் பதின்மூன்றாவது முதல் இடக்கடவதாக பெறவேணுமென்று வேணாடுடையான் நமக்குச்

7. சொன்னமையில் இப்படி செய்யக் கடவதாகச் சொல்லி கணக்கிலும் இட்டுக் கொள்ளக் கடவர்களாக வரிக்கு கூறு செய்வார்களுக்கும் சொன்னோம் இவ்இறை

8. யிலி இத்தேர்க்கும் திருவாய்ப்பாடி ஆழ்வார்க்கும் பன்நிரண்டாவது வரையும் தேவதானமான நிலம் நீக்கிநின்ற நிலத்து மூன்று கூறிட்டு ஒரு கூற்றால்

9. வந்த நிலம் இவ்வாழ்வார்க்கு தேவதானமாக விட்டு ஒரு கூற்றால் வந்த நிலம் இத்தேவர்களுக்கு தேவதான இறையிலியாகக் கைக் கொண்டு நிம

10. ந்தஞ்செலுத்தப் பண்ணுக வென்று எழுதினான் திருமந்திர ஓலை நெறிஉடைச் சோழமூவேந்த வேளாரும் குருகுலராயரும் விழிஞத்தரையரும் இலடாராயரும்

11. மலையப்பிராயரும் கச்சிராயரும் வயிராதராயரும் அமரக்கோனாரும் காடுவெட்டிகளும் நரசிங்கபன்மரும் வேணாடுடையாரும் எழுத்திட்டது.

## 13:3

**இடம் :** *நக்கசேலம்-பெரம்பலூர் மாவட்டம், பெரம்பலூர் வட்டம் தாராபுரீஸ்வரர் கோயில் கருவறை அர்த்தமண்டபத் தென்சுவர் முப்பட்டைக் குமுதம்.*

**காலம்:** *மூன்றாம் இராசராசன். ஆட்சியாண்டு 25, [1241]*

**செய்தி :** *இவ்வூர்ப் பெயர் நெடுமதுரை எனவும் இக்கோயிலின் பெயர் இராஜராஜ ஈஸ்வரமுடைய நாயனார் எனவும் குறிப்பிடப்படுகிறது. இவ்வூரில் காணியுடைய மன்றாடிகள் நான்கு பேர்கள் ஒன்று சேர்ந்து தங்களுக்குச் சொந்தமான நன்செய் நிலத்தைத் தேவதானமாக மலைமண்டலத்து வியாபாரி நாக புரத்து கொடிமன்றச்ச நம்பி என்பவருக்கு*

*விற்றுள்ளனர். அவ்வியாபாரி இவ்வூரை ஜீவிதக் காணியாகப் பெற்றுள்ளார் என்றும் கல்வெட்டுக் குறிப்பிடுகிறது மலை மண்டலத்துடன் [மேற்கு கடற்கரைப் பகுதி] இப்பகுதி கொண்டிருந்த வணிகத் தொடர்பையும் இக்கல்வெட்டால் அறிய முடிகிறது. நெடுமதுரை என்றும் பெயர் காலப் போக்கில் நக்கசேலம் என ஆகிவிட்டது*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுனச் சக்கரவத்திகள் சீ றாசறாச தேவற்கு யாண்டு 25–வதின் எதிரமாண்டு நெடுமதுரை உடையார் இராரா ஈஸ்வர முடைய நாயனாற்கு நெடுமதுரை காணி உடைய மன்றாடி நெடுமதுரை உடையான் நம்பி அந்தராயன் பெரிய கோயில் நம்பியும் நெடுமதுரையுடையான் பகுவாயன் மறைகலந்தான்.
2. வலிகையராயனும் நெடுமதுரை உடையான் சொண்டன் தெற்றி இயாத வராயனும் நெடுமதுரை உடையான் சொண்டன் பெரியானும் இந்நால்வோம் கல்வெட்டிக் குடுத்த பரிசாவது இவ்வூர் ஜீவிதம் பெற்ற மலை மண்டலத்து வியாபாரி நாகபுரத்து கொடி மன்றச்ச நம்பி எங்களூரில் தெற்கில் குளமும்...
3. கால் நீர் பாயும் நன்செ நிலத்து இக்––நிலம் குடி நீங்காத் தேவதானமாக கல்வெட்டிக் குடும்பதென்று கொடி மன்றச்ச நம்பி எழுத்தும் இட்டுத் தந்த விலைப்படி இக்குளமும் இத்தால் நீர்பாயும் நன்செநிலம் தேவதானமாக இட்டுக் கல்வெட்டிக் குடுத்தோம்...*
4. இப்படிக்கு இவை நெடுமதுரை உடையான் நம்பி அந்தராயன் பெரிய கோயில் நம்பி எழுத்து இப்படிக்கு இவை நெடுமதுரை உடையான் பகுவாயன் மறை கலந்தாள் வலிகையராயன் எழுத்து இப்படிக்கு இவை நெடுமதுரை சொண்டன் தெற்றி இயாதவராயன் எழுத்து இவை நெடுமதுரை உடையான் சொண்டன் பெரியான் எழுத்து.

**13:4**

**இடம் :** *பசும்பலூர் பெரம்பலூர் மாவட்டம், பெரம்பலூர் வட்டம் உண்ணாமுலை அம்மன் உடனுறை ஆடவல்லேஸ்வரர் கோயில் கருவறைத் தெற்கு மேற்குச் சுவர் பீடம்*

**காலம்:** *மூன்றாம் இராஜராஜன் [1216-1257], ஆட்சியாண்டு 11 கி.பி. 1227*

**செய்தி :** *இவ்வூர்ப் பெயர் பசுமலூர் எனவும் கோயில் பெயர் உய்யக்கொண்ட நாயனார் எனவும் இவ்வூர் வெம்பார் கூற்றத்தின் கீழ் இருந்தது எனவும் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இக்கோயிலுக்கு ராஜராஜ மகதனான வாணகோவரையன் என்பவர் பூஜைவழிபாடுகளுக்கு இறையிலியாக நாள்பது வேலி புன்செய் நிலமும் நன்செய் நிலம் இரண்டு வேலியும் வழங்கியுள்ளார் இக்கோயிலில் உள்ள தொன்மையானக் கல்வெட்டு இம்மன்னருடையது ஆகும் எனவே இக்கோயில் இம்மன்னர் காலத்தில் இப்பகுதியை ஆட்சி செய்த வாணகோவரையர் குடம்பத்து சிற்றரசரான இராஜ ராஜ மகதனான வாணகோவரையானால் கட்டப் பட்டது எனக் கருதலாம். இவரைப்பற்றி வெண்பாவூர், அரும்பாவூர், தழுதாழை, திருவாலந்துறை, குகையூர், ஆறகளூர் தொடாவூர் ஆகிய ஊர்க்கல்வெட்டுக்கள் கூறுகின்றன.*

1. திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு 11 – வது இராஜராஜ மகதனான வாண கோவரையனேன் வெம்பார் கூற்றத்து பனமலூர் உடையார் உய்யக்கொண்ட நாயனார்க்கு தேவதான இறையிலி இவ்வூரில் நிலப்பரப்பில் புன்சை இறையிலிக் குழி 40–பதிற்று வேலியும் ஊர்க்குத் தெற்கு அத்தி குளத்தில் நன்சை இறையிலி ஒரு வேலியும்.
2. வடக்கிலேரியில் நன்சை இறையிலி குழி ஒரு வேலியும் ஆக நன்சை புன்சை 2யும் இநாயினார்க்கு முன்பிலாண்டுகள் இறையிலியாக போந்தபடியே நாமும் இநிலங்களுக்கும் பொன்வரி காசாயம் காத்திகைபச்சை திருமடைவிளாகத்தில் தறியிறையும் அனைத்தாயங்களுள்ளனவும் இந்நாயினாற்குயிறையிலியாய் நாமும், விட்டோம் இறையிலிக்கம் மாபூட்டஞ் சொன்னவன் எந்குதிரைக்கு புல்லிடும்.
3. பறையனுக்கு தன் பெண்டாட்டியை குடுத்தவனானவான் இத்தேவ தானம் சந்திரதித்தவரையுஞ் செல்லக்கடவதாக

கல்வெட்டிக் கொள்வது என்று சென்னோம். இராஜராஜ மகதனான வாணகோவரையனேன் இதுக்கு இலங்கணஞ் சொன்னவன் ஏழு பிறப்பிலும் புழுவாய் சனிப்பான் ஏழு.... றுவான் இது பன்மாயீஸ்வர ரக்ஷை

## 13:5

**இடம் :** *மேற்படிக் கோயில் கருவறைத் தெற்கு, மேற்குச் சுவர் பீடம்*

**காலம்:** *மூன்றாம் இராஜராஜன் [1257-1257] ஆட்சியாண்டு 1 [1227]*

**செய்தி** *பசும்பலூருடையார் ஆடவல்லேஸ்வரமுடைய நாயனார்க்கு அமுதுபடிக்கு இறையிலியாக 300 குழி நன்செய் நிலமும் பிடாரிக்கு 2 வேலி நிலமும் விடப்பட்டது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ யாண்டு 11–வது பசும்பலூருடையார் ஆடவல்லேசுரமுடைய நாயனாற்க்கு அமுதுபடிக்கு இறையிலி நிவந்தமுந் இறையிலி
2. க்கு இறையிலி விட்ட நிலம் குழி 200 நன்சை இறையிலி குழி பிடாரிபாத்தி ஆக பாத்தி2 வேலி நன்சை இறையிலி கு
3. ழி 300 விட்டோம்

## 13:6

**இடம் :** *மேற்படிக் கோயில் துர்க்கை கோஷ்டம்*

**காலம்:** *மூன்றாம் இராஜராஜன் [1216-1257] , ஆட்சியாண்டு: 1, [1227]*

**செய்தி:** *இக்கோயிலில் உள்ள துர்க்கை, பிரம்மா, லிங்கோத்பவர், வினாயகர், சுப்ரமணியன் ஆகிய இறைமூர்த்தங்களை யார் யார் செய்து வைத்தார்கள் என்ற தகவல்கள் கல்வெட்டுக்களாக அந்தந்த சிற்பங்கள் உள்ள தேவகோஷ்ட்டத்தில் கல்வெட்டாக எழுதப்*

*பட்டுள்ளது. இதுபோன்ற செய்தியைப் பென்னகோம், நல்லூர் போன்ற ஊர்க்கோயில்களிலும் காணலாம்.*

### துர்க்கை கோஷ்டக் கல்வெட்டு

1. இத்துக்கையாரைச் செ
2. ய்வித்தாந் ஆரூர் திருமழுப
3. ாடி

### லிங்கோத்பவர் கோஷ்டக் கல்வெட்டு

1. இத்தேரை செய்வித்தாந் ஒரு 2. ப்பான் கண்டந்

### பிரம்மா கோஷ்டக் கல்வெட்டு

1. இந்த பிரம்மாவை செய்வி
2. த்தாந் ஒருப்பான் கண்டந்

### வினாயகர் கோஷ்டக் கல்வெட்டு

1. இப்பிள்ளையாரை எழு
2. ந்தருளிவித்தாந் நாதன் பெரியாந்

### கருவறை மேற்குச் சுவர் கல்வெட்டு

1. மங்கலுடையான் தெற்றி
2. மருந்தன் சுப்பிரமண்ணி
3. ய்ப் பிள்ளையாரை எழுந்தருளிவி
4. த்தான்.

# 14. புதுக்கோட்டைப் பகுதியில் சில புதிய கல்வெட்டுகள்

து. தயாளன்,
சென்னை

## 14:1

**இடம் :** *புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், திருமயம் விஷ்ணு குடைவரைக் கோயில். திருமயம், முன்புள்ள பாறையின் மேல். கல்வெட்டின் முன்வரிகள் முன்மண்டபக் கூரையால் மறைக்கப்பட்டுள்ளது*

**காலம் :** *11ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *விளக்கெரிப்பதற்காக நிலக்கொடை அளித்த செய்தி*

....குடுத்துக் கொண்ட ...பூ[4]மி வேங்கை குளத்தின் [மே]லை மடை கீழ் வடக்கோடிய வாக்காலின் மேலைக்கு கண்ணாறு முற்றும் இதற்கெலை இவாக்காலுக்கு மேக்கு தெற்க்கெலை இக்குளங்கரைக்கு வடக்கும் மேலெலை நந்தவனத்துக் கிழக்கும் வடவெலை கலை இச்சுனைக்கு தெற்கும் நக்க... க்குளத்துக்கெலை கிழக்கும் மேக்கும் தெற்கெலை வழிக்கு வடக்கும் மேக்கெலை பெருஞ்செல்வ[ன்] குடிக்கு கிழக்கும் வடக்கரைக்கு தெற்கும் இ...இத்தடி அனைத்தும் உள்ப்பட்ட பூமி பெருந்தேவன் குடிக்குளத்[தால்]ப் நீர்ருண்ணப் [பெறுவதாக] சவையார் யி இட பூமியும் நூற்றுக்கலன்னெ[ல்]... செயூங்கொண்டு கிடந்த பிரானுக்கு நிசதி எண்ணாழி யுரி கொண்டு இரண்டு போது திரு அமிது குடுப்பார்க்கு இ முதல் கொண்டார் இவ்வூர் சபையார்... கூடி

## 14:2

**இடம் :** *திருமயம் வட்டம் ஆயன்குடி மலைக் கொழுந்தீஸ்வரர் குடைவரைக் கோயில் [முன்மண்டபத்திலுள்ள துண்டுக் கல்வெட்டு]*

காலம் : *14ஆம் நூற்றாண்டு*

செய்தி : *திருமதில் கட்டிய செய்தி*

1. ... குளத்துப் பெருமடையால் நீர் பாசன....
2. ..... அனைத்தா[லும்]...
3. டார் பக்க....
4. லைவ யா..... முடையனாய்
5. ச் செலுத்துவ .......... கோயிற் ----------
6. ச்ரு -----
7. பெருமாளே -----
8. ண்டு திருமதில் கட்டி மேஞ்சு -------

### 14:3

இடம் : *மலைக்கொழுந்தீஸ்வரர் குடைவரையின் முகப்பின் அருகில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு*

காலம் : *14ஆம் நூற்றாண்டு.*

செய்தி : *சாதம்பதராயன் என்ற பெயர் உள்ளது.*

1. அக்காரம் தொண்ட . நி
2. யமப்படிக்கு இன்னாட் [டார்]
3. . சாதம்பதரயன்
4. . ங்கஞூர் ஆனகு...ருபுரம்

### 14:4

இடம் : *சித்தன்னவாசல் சமணக் குடைவரையின் தென் பக்கமுள்ள பாறையில் வெட்டப்பட்டுள்ளது.*

காலம் : *8ஆம் நூற்றாண்டு*

1. கொடுங்கையூர்
2. கற்கோளன் கொ
3. த்தை கயசன்.

**14:5**

**இடம் :** *குளத்தூர் வட்டம், மேலப்பட்டி தனிப் பட்டைக் கல்லில்.*

**காலம் :** *12-13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *ஊரின் எல்லைக்கல்*

1. இவ்வூர் [க]
2. வினாட்டார் நாகன நா
3. ட[றி] புகழ் நல்லூர்

# 15. ஏப்பாக்கம் - செக்குக் கல்வெட்டு

**ப. பூபாலன்,**
**கோ. உத்திராடம்,**
**சென்னை**

**இடம் :** விழுப்புரம் மாவட்டம், திண்டிவனம் வட்டம் ஏப்பாக்கம் கிராமத்தில் திரௌபதி அம்மன் கேயில் குளம் கிழக்குப் படித்துறையில் உள்ள செக்கின் வாய்ப்பகுதியில்.

**காலம் :** *12ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** செக்குச் செய்தமை.

*1. நக்கன் வெட்டுவிச்ச செக்கு*



# 16. கீழப்பாவூர் கல்வெட்டுகள்

சு. பார்வதி,
குற்றாலம்

**16:1**

**இடம்:** *திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள பாவூர் சத்திரத்திலிருந்து 2 கி.மீ. தொலைவில் உள்ள கீழப்பாவூர் ஸ்ரீ நரசிம்மர் கோவில்*

**காலம்:** *கி.பி. 13ம் நூற்றாண்டு*

**செய்தி:** *துண்டுக்கல்வெட்டுக்கள் சில துண்டுக் கல்வெட்டுகள் இணைகின்றன உள்ளே 1ஹ-2க்ஷ, 2ஊ-2னு, 3ஹ-3க்ஷ போன்ற கல்வெட்டுத் துண்டுகள் இணைத்து பொருள் கொள்ளப்படுகிறது மொத்தம் கல்வெட்டுத் துண்டுகளின் எண்ணிக்கை 32 விக்கிரமப் பாண்டியன், ஸ்ரீ வல்லபன் கல்வெட்டுகளும் உள்ளன மற்றக் கல்வெட்டுத் துண்டுகளில் மன்னன்பெயரும் காலமும் குறிக்கப்படவில்லை முனைவது மோகர் ஆன தென்னவந் ஆபத்துதவிகள் என்ற பாண்டியர் படை பற்றியும் நிலங்கள் கொடுக்கப்பட்ட செய்திகளும் உள்ளன*

1. ணிக ராழ்வார் கோயிலில் திருவாய்க் குலத்து...
2. ... தலைவர் கூட நின்று இவள் வலது வாங்கி ஒடுக்கினமையில் இப்பொருள் தந்திர வினியோக
3. .... ணமான தெலங்க குல காலச் சதுர்வேதி மங்கலத்து உறுப்புடுா் இப்பேராயிரம் முடை
4. ...லை பொளிவிழந்த விழக்காட்டுக்கு வடக்கும் மேலெல்லை அச்சுதப்பட்டன, பொழிக்கும்.

**16:2**

1. திரப்பப் பொருகலா டை நிலமகள் புணரக் கடவுள் மேருவிற்கயல் விளையாட வடபுல மன்னர் வ

2. பச்செ பங்க கிருங்கலி துரந்து வேத விதியினிதி யினிலவச் சேரனம் வளவனுந் திறைகு னந்திறை.

3. மணிமுடி விளங்கிய மணியனி வீரசலிங்காசனத்து வீற்றிருந்தருளிய கோமா தமரான திரிபுவன சக்வத்திகள் ஸ்ரீ விக்கிரம

4. க்ஷத்திரிய சிகாமணி நல்லூர் முனைவது மோகரான தென்னாபத்து தவிகளோம் இவ்வூர் படை

## 16:3

1. கோமார பன்பரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ வல்லப தேவற்க்கு யா

2. மோகந்கு தண்டை நாயகம் செய்வார்கள்ளோமும் தந்திரத்துக்கு

3. காரன்ணதிரு இடையாட்டம் இட்ட... நிலம் காடேற்றுக் பெருநான்

4. க்கு தெக்கும் இநான்கெல்லைக்கு உள்ப்பட்ட நிலமும் மேல்நோக்கின மரமு...

5. இருமாவரையும் குற்றிம்மை ஒரு மாவும் ஆக இந்திலம் நிர்வா

## 16:4

1. ணகராழ்வார் கோயிலில் திருவாய்க்குலத்துப்பிள்ளை படைத்தலைவர் நாயகற்கு

2. தலைவர் கூட நின்று இவள் வாங்கி ஒடுக்கினமையில் இப்பொருள் தந்திர வினியொக

3. னமான தெலுங்க குலகாலச் சதுவெதி மங்கலத்து உறுப்புட்டுர் ப்பெராயிரமுடை

4. விலை பொளிவிழந்த விழுக்காட்டுக்கு வடக்கும் மெலெல்லை அச்சுதப்பட்டன் பொழிக்கும் வட...



# 17. திருமயம் வட்டக் கல்வெட்டுகள்

மு. காயத்திரிதேவி,
புதுக்கோட்டை

17:1

இடம் : புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், ஊனையூர் சிவன் கோவிலின் வடகிழக்கிலுள்ள ஒரு வயல் வரப்பில் கிடக்கும் பலகைக் கல்லிலுள்ளது.

காலம் : *11, 12ஆம் நூற்றாண்டு*



செய்தி : ஒரு புதிய வயலின் பெயர்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ இச்
2. செய் திருவம்ப
3. லம் பிரியாதார்
4. வயக்கல்

17:2

இடம் : புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், செவலூர் கிராமம் காஞ்சாற்று மலை மீதுள்ள சிவன் கோவில் மேல்புறச் சுவரிலுள்ளது.

காலம் : *1610*

செய்தி : செவலூர் ஊரவர் பற்றிய குறிப்பு.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சகாத்தம் 1532 மேல்
   செல்லா நின்ற விய வருஷத்[து]
2. ஆவணி *மீ*15 உ பொன்னமராபதி நாட்டு வடபற்று செவ்வலூரா
3. வமைந்த ஊரவரு...

17:3

இடம் : மேற்படி காஞ்சாற்று மலை சிவன் கோவிலின் அம்மன் கோவில் நிலைக்கால் மேல்படியிலுள்ள கல்வெட்டு

**காலம் :** *17ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *நெல்லிப்பட்டு நல்லதம்பி மகன் கொடை.*

1] நெல்லிப்பட்டு நல்லதம்பி மகன்
நல்லதம்பி சதா சேர்வை

**17:4**

**இடம் :** *புதுக்கோட்டை மாவட்டம், இலுப்பூர் வட்டம் பேயால் சிவன் கோவிலில் திருநிலைக்கால்*

**காலம் :** *13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *ஆட்கொண்டான் திருவாரூர் பெருமான் திருவரங்கதேவன் திருநிலைக்கால் செய்தமை.*

1. ஸ்வஸ்தி
2. ஸ்ரீ இத்தி
3. ருநிலை கா
4. ல் இரண்
5. டும் ஆட்
6. கொண்
7. டான் திரு
8. வாரூ[ர்]ப் பெ
9. ருமானா
10. ன திருவர
11. ங்க தா
12. தர் தம்மம்

# 18. நெடுங்குடி மற்றும் வெள்ளாஞ்சார் கல்வெட்டுகள்

ஜெ. ராஜா முகமது,
செ. கோவிந்தராஜ்,
கரு. ராஜேந்திரன்
புதுக்கோட்டை

**18:1**

**இடம் :** *புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், நெடுங்குடி கைலாசநாதர் கோயில் அர்த்த மண்டபத்தை தொடர்ந்துள்ள அந்தராளத்தின் ஜகதியில்.*

**காலம் :** *16ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *மாத்துாரான் வீரப்பருடையான் சண்டாண்டார் இக்கோவில் அம்பாளையும் கோவிலையும் செய்தமைத்தது மற்றும் தன்மத்தார் மரியாதையினை பெற்றது.*

1. சுபமஸ்து சுபானு வருஷம் தை மாதம் மாத்துாரான் வீரப
2. ருடையான் சண்டாண்டார், நம்பியார் நயினார் தென்கரை
3. நாச்சியாரையும் எரியருளப் பண்ணித் திருக்கோயிலும் திரு
4. [கோ]யில் சன்னதி.ல் சந்திராதித்தவர் தன்மத்தார் ஒடுக்கு போ கடவரா.

**18:2**

**இடம் :** *மேற்படி கோயிலின் கருவறை தென்புறம் உபபீட பட்டிகையில் உள்ள கல்வெட்டு*

**காலம் :** *சகம் 1348 [1426]*

**செய்தி :** *கைலாசநாதர் கோவிலில் உள்ள தென்கரை நாச்சியார் என்ற அம்மனுக்கு பூசை, திருப்பணி மற்றும் திருநாள் செலவினங்களுக்கும் அமுதுபடி போன்றவைகளுக்கும் சூரைக்குடி திருமேனியழகிய விசையாலயத் தேவர் மகன் பொன்னாயன் விசையாலயத் தேவர் நிலக்கொடைக் கொடுத்தமை*

1. ஸ்வஸ்திஸ்ரீ மன் மகாமண்டலீஸ்வரன் ஆதப தேவர் மஹாராயர் தேவர்க்கு செல்லாநின்ற சகாப்தம் 1348 மேல் செல்லாநின்ற ................

2. ஆற்றது..... நியமப் பற்றுச் சூரைக்குடித் திருமேனி யழகியர் விசையாலைய தேவர் மகன் பொன்னாயன் விசையாலைய தேவர்க்கு விருதராஜ.

3. பயங்கர வளநாட்டுக் கான நாட்டுச் செங்குன்றூர் நாட்டு உடையார் திருத் தென்கரை நாச்சியார்க்கு தேவதானம்... ல்லை மன்...யர்

4. .டக்கி. தென்றும் இப்படியெடுத்தோம் பூசையும் திருப்பணியும் திருநாளும் தானம்பட.... என்று

5. .தயவற நடக்கும்படி குடுக்கவேணும் என்றும் நம்மை எப்பொழுது... என்றும் செங்குன்றூர்

6. ..பொன்னாயன் மகன் அமுதுபடி கறியமுது... யமுது உப்பமுது முளகமுது அடைக்காயமுது

7. ......காலுக்க நாட்டால் நிற்செயிப்புக்கு கல்வெட்டி

8. .தலமுன்பாண்டான் தேவற்க்கும் சேட்டையர் பள்ளிசந்த[ம்] அய்யன் பாத்தி பிடாரி விளாகம் நீங்க

9. குடுத்தேன் இம்மரியாதி சந்திராதித்தவர் செல்ல நடத்துவதாகவும் இம்மரியாதி கல்வெட்டிக் குடுத்தேன்.

**18:3**

**இடம் :** *மேற்படிக்கோயிலின் கருவறை தென்புறம் தட்சிணாமூர்த்திக்கு கிழக்கில் உபபீட பட்டிகை*

**காலம் :** *15ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *சூரைக்குடி பொன்னனான விஜயாலய தேவர் காலத்தில் ஸ்ரீவல்லப தேவர்க் கால கல்வெட்டில் கண்டபடி இக்கோயில் வழிபாடு தப்பாமல் நடந்துவர அன்றாட பணம் மூன்றினை செலுத்திவர ஆணையிட்டமைக்கானது.*

1. ஸ்வஸ்ரீ.ப...ர..த. வருஷம் புரட்டாதி மாதம் 27 தேதி கான னாடான விருத ராஜ பயங்கர வளநாட்டு கான நாட்டு செங்குன்ற நாட்டு நாட்டார்...

2. பெருமாள் ஸ்ரீவல தேவர் தரம் கொள்ளுவதாக கல்வெட்டிக் குடுத்த கல்வெட்டுபடி ஒன்று பாதிக்கு ஆ... அதக்குக் காப்போம்.

3. .என்று நாடு...ப்ப நாடு குடி ஆகப்பேரதையால் ஆஹமனுக்கு. கழித்து... ஆடுர பணம் 2க்கு நீக்கி ஆடுரபணம் தமதானையே...

4. .நாலேநாலு பணம்... விலும் மாப்பேறு கொண்டு பேற் கிடைக்கும்.... பாதி... அதில்ஒன்று நீக்கி நின்ற பணம் கொள்ளக் கடவோம்... ஏழு.

5. .யிலே வழிபாடு தப்பாமல் நடத்திப் போகக் கடவதாக.... கல்வெட்டிக் குடுத்தவைக்கு கோட்டை மண்டலத்து... ணாட்டு

6. . உக்கடவோமல்ல வதாகவும் இம்மரியாதி சந்திராதித்தவர் செல்ல நடக்கும்படி கல்லிலும் செம்பிலும் வெட்டி

7. க்குடுத்தமைக்கு பொன்னாயநான விசையாலயத் தேவர் எழுத்து செண்பகராயரான விசையாலய தேவன் எழுத்து.

**18:4**

**இடம் :** *மேற்படிக் கோயிலின் உள்ள துண்டு கல்வெட்டு*

**காலம் :** *15ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *சூரைக்குடி விஜயாலய தேவர்களில் ஒருவர் இக்கோயில் இறைவர்க்கு அமுதுபடி நடந்துவர நிலக்கொடை வழங்கியமைக்கானது.*

1. சுபமஸ்து ஸ்ரீ வல்லப தேவர்க்கு யாண்டு 27 ஆவது உடையார் கூறு தென்பிறை நாயினார்க்குத் தேவ...

2. ...க்கனுல்லாக படியாலே என் செய்னாடயா வயக்கலில் தேவர் விசாலய தேவர்க்கு

3. ...ண்டு அமுது படித்தவரி இவ் ஆறுமரக்காலும் எண்ணைக்கு உரி நெய்யும் திருவிடை...

4. ...படி ஸம்மதித்து இந்நிலம் பற்றிக் கொண்டேன் பெரியான்... னுள்ளிட்ட...

**18:5**

**இடம் :** *மேற்படிக் கோயிலின் கருவறை தென்புறச் சுவரில் உள்ள ஒரு துண்டுக் கல்வெட்டு*

**காலம் :** *15ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *பல வரிகளை நீக்கி நிலக்கொடை கொடுத்தமைக்கானது.*

1. ...டாயாத் தெழுநூறும் இவ்வூர்க்குட்பட்ட மழு காட்டுக்கு வரும் உப்ரி ... வேண்டுகோள் விநியோகம் காணிக்கை பரவுடல் துணிப்புத்திறவரி தட்டொலி தட்டாரப்...
2. ...பட்டவையும் காத்திகைப் பொன் காத்திகைப் பச்சை எழுத்துத் தேவை பிள்ளையார் நோம்புத் தேவை திருவாதிரை தேவை ஆனைச் சாலை குதிரைப் பந்தி மதிட் தேவை சந்து
3. ... லயும் இழந்து இந்த புரவு நாலரையில் பழந் தேவதானம் தன்மதானம் இறையிலி நீக்கி நின்ற நிலத்தில் நாயநார் திருமெய்யமலையானுக்கு ஏழில் ஒன்று திருவிடையாட்டம்...
4. ...தென்பிறை நக்கர்க்கு ஒன்று தேவதானமாகவும் இந்நாட்டுக் கோறமங்கலத்து உடையார் திருமேனி அழகியாற்கு மூன்றில் ஒன்று தேவதானமாகவும் இப்படிக்கு பத்தாவது
5. ...கழித்தாரோன். சோதியாரில் பிள்ளையாரில் கோடைக் குறுவை பயிற் செய்த நிலத்துக்கு வெள்ளச்சாவி வறச்சாவி பயிற் கண்ணாற்றக் கழிவு கழித்து பயிற் நின்ற நிலத்து...

**18:6**

**இடம் :** *புதுக்கோட்டை மாவட்டம், இலுப்பூர் வட்டம், வெள்ளாஞ்சார் இடிந்த சிவன் கோயில் முகமண்டப அதிட்டானம்*

காலம் : *13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *அரையன் பிறந்தான் கடம்பராயன் சார் [வெள்ளாஞ்சார்] குலோத்துங்க சோழீஸ்வரருக்கு குடிகாட்டு ஏரியும் வயலும் காராண்கிழமையாக விட்டுக் கொடுத்தமை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாறு பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீசுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு 22வது கோனாடான உறத்துார் கூற்றத்துசார் அரையன் பிறந்தானான கடம்பராயனேன் சார் உடையார் குலோத்துங்க சோழ நாயனார்க்கு திருப்படி மாற்றுக்குடலாகக் காராண்கிழமைக்

காணியாக திருக்கை மலரில் உதகம் பண்ணிக் குடுத்த

2. குடிகாடான ஏரியும் வயலும் இந்நாயனார்க்கு திருநாமத்துக் காணியாக சந்திராதித்தவ செல்ல இவ்வயலுக்கும் குளத்துக்கும் நான்கெல்லைப் ..........ததனுந் திருச்சூலத் தாபகம் பண்ணி இந்நாயனார்க்கு இக்கற்றளியிலே கல்வெட்டிக் குடுத்தேன் பிறந்தான் தன்னனான கடம்பராயனேன் இறை கூட. திரக்கோயில் ஆதிசண்டேசுர அருளினால் சிரி உருத்திர சிரி

3. ...த்து இவை செங்கங்குடையான் அவையஞ் திரவாலவுடையானான வில்லவன் பல்லவதரையன் எழுத்து இவை வங்கி புரத்து விக்கிரம சோழ பிரமாதராயன் எழுத்து இவை பாக்கலுடையான் தேவன் பெருமாளான காங்கேய வேளான் எழுத்து...வ பாய்ச்சலுடையான் தேவன் சிற்றம்பலமுடையாநான தென்னவராயன் எழுத்து

## 18:7

**இடம் :** *மேற்படி சிவன் கோயில் முகமண்டப அதிட்டானத்தில் உள்ள கல்வெட்டு*

**காலம் :** *13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *சார் குலோத்துங்க சோழீஸ்வரர் கோவில் மாகேச்சுரக் கண்காணிகள், தேவகன்மிகள், கோயில் கணக்கர் ஆகியோர் அவ்வூர் மொன்னை குன்றுடைப் பெருமாள் அவன் தம்பி மொன்னை தேவபெருமாள் ஆகியவர்களுக்கு தண்டேசுர பெருவிலையாக 1800 காசுகளுக்கு கோயில் தேவதான வயலை விற்றுக் கொடுத்தமை*

1. திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு கொண்டருளி முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும் விஜய அபிஷேகமும் பண்ணி அருளிய சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு 22வது கோனாடான கடலடையாதிலங்கை கொண்ட சோழவள நாட்டு உறத்தூர் கூற்றத்து சார் உடையார் குலோத்துங்க சோழீச்வரமுடைய நாயனார் திருக்கோயில் ஆதி சண்டேசுர அருளினால் சிரி உருத்திர

2. மாகேசுரக் கண்காணி செய்வர்கள் தேவகன்மம் கோயில்

கணக்கர் இவ்வூர் உடையார் புன்னை வாயில் உடையான் மொன்னை குன்றுடைய பெருமாளுக்கும் இவன் தம்பி மொன்னை தேவ பெருமாளுக்கும் தண்டேச்சுர பெருவிலையாக விற்பதற்கு இசைந்த நிலமாவது இந்நாயனார் தேவதானமான குயவன் வயலான பெரியாண்டிபேரியும் வயலும் இந்நான்கெல்லைக் குன்னிலம்... தோரும்...

3. .ணவதான எம்மில் இசைந்த விலைப்பொருள் அன்றாடு நற்காசு 1800 இக்காசு ஆயிரத்து எண்ணூறும் காட்டேற்றிக் கை செலவர பண்டாரத்தோம் மொன்னை குன்றுடைய பெருமாளுக்கும் தேவபெருமாளுக்கும் உருத்திர சிமாகேச்சுவரும் தேவகன்மி கோயில் கணக்கனும் இவ்வனைவோம் இவ்வயலுக்கு ஐம்பத்தாறு குழி கொண்டது ஒரு மாவாக...

## 18:8

**இடம் :** *மேற்படி கோயில் முகமண்டபச் சுவரில் உள்ள கல்வெட்டு.*

**காலம் :** *13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *சார் ஊரவர் மேற்படியூர் கோயில் சைவாச்சார்யம் செருந்தனை திருச்சிற்றம்பலமுடையார் அவர் தம்பி திருச்சிராப்பள்ளி உடையார் ஆகியவர்களுக்கு நிலம் குடிநீங்கா தேவதானமாக விற்றுக் கொடுத்தது*

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறுபன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் குலசேகரதேவற்கு யாண்டு 5வது
2. ஸிம்ம நாயற்று அமரபச்சத்து துவிதியையும் திங்கட் கிழமையும் பெற்ற மூலத்துநாள் கோனாடான கடலடை
3. யாதிலங்கை கொண்ட சோழவளநாட்டு உறத்தூர் கூற்றத்து சார் ஊராக இசைந்த ஊரவரோம் எங்கள் காணி
4. யான அரியாண்டி கரிக்குளமும் வயலும் சிறுக்குளமும் வயலும் குடிநீங்கா தேவதானமாக விலைப்பிரமாணமாக
5. கொள். விற்றருளி கொள்வேனென்று ஒரு காலாவது மிருகாலாவது முக்காலாவது விலை
6. முற்கூறி இம்மொழி கேட்டு இவ்வூருடையார் குலோத்துங்க சோழீஸ்வரமுடை

7. ய நாயனார் கோயில் காணி உடைய சைவாச்சர்யம் செய்வார்களில் செருந்தனை... வருமா

8. ா திருச்சிற்றம்பல பண்டிதன் பெருமாப்பிள்ளையும் இவர் தம்பி திருச்சிராப்பள்ளி உடையாரும்

9. கொள்வேனென்று பிற்கூற முற்கூறிய அரியாண்டியேரி குளமும் வயலும் சிறுகுளமும் வயலுந்த...

10. பெருநாங்கெல்லையாவது கீழபாற்கெல்லை இக்குளத்தில் கீழ் கடையில் எழுந்தருளப்பண்ணின

11. திருச்சூலதேவற்கு மேற்கும் மேல்படி சிறுகுளத்தில் நிற்கிற திருச்சூலதேவற்கு மேற்கும் தென்பாற்கெல்லை

12. சிறுகுளத்தில் முன்குள நிலமும் இவ்வயலில் பெருவரம்புக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை ஏரிவயலெல்

13. லை விட்டு ஏறியருளப்பண்ணின திருச்சூல கிழக்கும் வடபாற்கெல்லை... மேல் நோக்கின...

**18:9**

**இடம் :** *மேற்படி கோவில் மண்டப வடபுறம் தேவகோட்டத்திற்கு மேற்கிலுள்ள கும்ப பஞ்சரத்துக்கு கீழ் அதிட்டானத்தில் உள்ள கல்வெட்டு*

**காலம் :** *13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *வியாபாரி வையருடையான் தென்னகோனுக்கு சார் அரையன் தன்னைன் தெங்கன் குலோத்துங்க சோழீஸ்வரருக்கு திருப்பணிக்கு உடலாக நிலக் கொடை கொடுத்தது.*

1. ஸ்ரீ கோச்சடை பன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஈழமும் கொங்கிரண்டுஞ் சோழமண்டலமுங் கொண்டு பல்லவனை வென்று பெரும்பற்றப்புலியூரில் வீராபிசேகமும் விஜையாபிசேகமும் பண்ணியருளிய வீரபாண்டிய தேவர்க்கு...

2. வருஷம் மிதுன நாயிற்று அபரபக்சத்து பிரதமையும் செவ்வாய்கிழமையும் பெற்ற புணர்பூசத்து நாள் கோனாடான கடலடையாதிலங்கை கொண்ட சோழ வளநாட்டு உறத்தூர் கூற்றத்து சார் அரையன் தன்ன... தெங்க...

3. வில் வியாபாரி வையூருடையான் திருமஞ்சனம் பதியான... தியினன் தென்னகோனுக்கு நான் பிரமாணம் பண்ணி குடுத்த பரிசாவது நம்மூர் உடையார் குலோத்துங்க சோளீஸ்வரமுடைய நாயனாற்கு திருப்பணிக்கு உடலாக...

4. போகிற வழிக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இன்னாயனார் தேவதானம் பெரியாண்டி ஏரி எல்லைக்கும் வெள்ளாஞ்சார் எல்லைக்கும் தெற்குஆக இசைந்த பெருநான்கெல்லைக்குட்பட்ட உண்ணிலமொழிவின்றி யொ நாள்...

5. சயற் அட்ட....வை..ந்தலும் நங்கொள்ள ராசக்கறம் இறுப்பானாகவும் கீழிறை மாத்தால் பதினைஞ்சு காசு இறுப்பானாகவும் இப்படி சம்மதித்து...லை...டம் பண்ணி குடுத்தேன்.

## 18:10

**இடம் :** *மேற்படிக் கோவில் மண்டப வடபுறம் கோமுகைக்கு மேல்புறம் முப்பட்டை குமுதகத்தில் உள் கல்வெட்டு*

**காலம் :** *13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *வெள்ளாஞ்சார் வியாபாரிகளில் செழுவனூருடையான் அம்பலவன் நெய்யூர் வேளான் செழிய தரையர் ஆகியவர்களுக்கு சார் அரையன் கடம்பராயன் குலோத்துங்க சோழீஸ்வரர் கோயிலுக்கு திருப்பணிக்கு உடலாக வருமாத்தூர் வயலையும் குளத்தையும் கொடுத்தமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவன சக்கரவத்திகள் ஈழமுங் கொங்கிரண்டுஞ் சோழமண்டலமுங் கொண்டு பல்லவனை வென்று பெரும்பற்றபுலியூரி

2. ல் வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் பண்ணியருளிய ஸ்ரீ வீரபாண்டிய தேவற்கு யாண்டு 15 ஆவது சார் அரயந் தன்னன் தெங்கனான கடம்பராயநேந் சார் வியாபாரிகளில்

3. செழுவனூருடையான் அம்பலவன் நெய்வூர் வேளாஞ் செழிய தரையற்கும் வேங்கடருடையான் மொன்னை மொன்னையன் பெரிய தேவருக்கும் நான் விற்ற...

4. கு அருமத்தூர் குளமும் வயலும் சார் உடையார் குலோத்துங்க

சோளீஸ்வரமுடைய நாயனார்க் குடினைக்கும் திருப்பணிக்குமுடலாகத் திருக்கை மலரிலே நான் நீர்வார்த்துக் குடுக்கையில் குடிக்காட்டு

5. கு கடமை பதினாறடி கோலாலே ஒரு மானிலத்துக்கு திருக்சூலாலே கூராத்த நிலத்துக்கு அறுகலனே பதக்காக வந்த நெல்லும் ஆடிக்குறுவை பாதியும் ஐப்பசிக் குறுவைக்கும் புன்பயிருக்கும் மாத்தால் நூற்றி...

6. சும கீழிறை மாத்தால் 12 காசும் இறுப்பாராகவும் இப்படி சம்மதித்து குடுத்தேன் செழியதரையர்கும் பெரியதேவர்கும்... தெங்கனான கடம்பராயனேன் இப்படிக்கு இவை தன்ன

7. தெங்கனான கடம்பராயன் எழுத்து இவை தெங்கங்குடையா. அரையந் பிள்ளை ... ரா...வளவன் பல்லவரையன் எழுத்து..

8. நான்குடுத்த இச்சவயலுக்குப் பெருநான்கெல்லை ஆவது...ற்.கெல்லை இருநீலிக்குளத்து

9. க்கு கடமை இறுக்குமிடத்து பள்ளம் பாத்தால் விளைந்த நிலத்துக்கு திருச்சூலக்கால்லால் க...

10. தெங்கன்ன... கடம்ராயனேன் எழுத்து இத்தெங்குடையான் வளவன் பல்லவரையன் எழுத்து. உ.

## 18:11

**இடம் :** *புதுக்கோட்டை மாவட்டம், இலுப்பூர் வட்டம், வெள்ளாஞ்சார் ஊருக்கு தென்புறமுள்ள கொப்பாண்டி ஊரணி கீழ்க்கரையில் கிடக்கும் தூணில் உள்ள கல்வெட்டு.*

**காலம் :** *சகம் 1704 [1782]*

**செய்தி :** *வெள்ளாஞ்சாரிலிருந்த வினைத்தான் கொப்பாண்டி தர்ம மானியமாக வெள்ளாஞ்சார் வயலில் நிலக்கொடை வழங்கியமை.*

1. ஸ்ரீமது சாலிவாகன ச
2. காத்தம் 1704 கலி
3. யுகம் இத
4. ன்மேல் செல்லானின்ற

5. பிலவங்க வருஷம் பங்கு
6. னி மாதம் 27 தேதி திங்கள்
7. கிழமையும் புனர்
8. பூச நச்செத்திரமும் க
9. றனாம யோகமும் பெ
10. ற்ற சுபதினத்தில் வெள்
11. ளாஞ்சாரிலிருக்கும் வி
12. னைத்தான் கொம்ப பி
13. ரியன் கொப்பாண்
14. டி தர்மத்துக்கும் தாள
15. கம் மாணியளக ஸ்ரீ ஆன்ற
16. தளயரவர்கள் பாப்ப
17. ளயரவர்கள் ஸ்ரீ பள
18. யில் யிலுப்பூரு சீமை
19. அமிலள செட்டியனவ
20. ர்கள் விட்டுக்குடத்தது
21. வெள்ளாஞ்சார் வய
22. லில் கத்தரி மேடு செக இ
23. வெருவாய்க்கால் செஇ
24. ஆக செ.உ. புஞ்சை சே
25. வ காடகள் கொன்னையம்
26. ..................கள் ஆக புஞ்
27. சையில் விரையடி உள
28. மும் விட்டு குடுத்த படியி
29. னாலே ஆக சந்தராதித்த வல்
30. யிந்த தற்மம் பரிபால
31. னம் பண்ணிக் கொ
32. ண்டு வருவாளாகவும்
33. இந்த தற்மத்தக்குயா
34. தாமொருவன் விகற்

35. தம். ண்ணினானாக
36. கெங்கை கரையிலே
37. காராம் பசுவைக் கொண்
38. ண பாவத்தில்ப் போவார்க
39. அம்மாகவகத்தி பதிவகள்
40. பண்ணின தோஷத்திப்
41. போவாளகவும் வசுவாசபா
42. தகம் சுவாமி துரோகம்.

## 18:12

**இடம் :** *மேற்படி கோவில் கருவரை பின்புறம் வடபகுதி குமுதகத்தில் உள்ள கல்வெட்டு.*

**காலம் :** *13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *வெள்ளாஞ்சாரிலிருந்த வலையரில் எதிர்முனை கண்ட முத்தரையனுக்கு சார் அரையன் தன்னன் கடம்பராயன் விற்றுக் கொடுத்த குடிகாட்டு குளம் வயலினைப் பற்றியது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலசேகர தேவற்கு யாண்டு மேஷ நாயிற்று
2. அமரபக்சத்து துதியையும் திங்கள் கிழமையும் பெற்ற விசாகத்து நாள் கோனாடான கடலடையா
3. திலங்கை கொண்ட சோழவள நாட்டு உறத்தூர் கூற்றத்து சார் அரையன் தன்னன் தெங்கனான கடம்பரா
4. யனேன் இவ்வூர் வலையரில் எழும்போதனான எதிர்முனை கண்ட முத்தரையனுக்கு நான் விற்ற சண்ணு
5. வான குடிக்காடு இவ்வூர் உடையார் குலோத்துங்க சோளீஸ்வரமுடையார்க்கு குடிநீங்கா தேவதானமாக குடுத்த இக்குடிகாட்டுக்கு பெருநான்கெல்லையாவது கீழ்பாற்கெல்லை கடையன் குடிகாட்டு எல்லைக்
6. கு எழுந்தருள இருக்கிற திருச்சூல தேவர்க்கு மேற்கும் தென்பாற்கெல்லை அஞ்நூற்றுப் பேறையன் கு

7. டிக் காட்டில் முன்... பாழுங்கிணற்றில் வட விளிம்புக்கு கிழக்கும் வடபாற்கெல்லை குயத்துார் நாயனார் பழந்

8. தேவதானத்துக்கும் த....க்கும்....ம் ஆக இசைந்த பெருநான் கெல்லைக்குட்பட்ட இக்குடிகா

9. டும் குளமும் வயலும் இந்நாயனார்க்கு.... தேவதானமாக திருக்கைமலரில் நீர்வார்த்துக் குடு

10. க்கையில் இந்நிலத்துக்கு ஸ்ரீ பண்டாரத்துக்கு கடமை யிருக்குமிடி...

# 19. பூதமங்கலம் கல்வெட்டுகள்

சி.வீரராகவன்,
வி.ஆர். மங்கை ராகவன்,
விழுப்புரம்

**19:1**

**இடம் :** *திருவண்ணாமலை மாவட்டம், பூதமங்கலம், அண்ணாமலை உடைய நாயனார் கோயில் கருவறை மற்றும் கிழக்கு அதிட்டானம்*

**காலம் :** *பாண்டியன் மாறவர்மன் சுந்தரபாண்டியன், 11ஆம் நூற்றாண்டு*

**செய்தி (1)** *பூதமங்கலத்து அண்ணாமலை உடைய நாயனார்க்கு அன்றாடு பூசையின்போது அமுது படைக்கவும், பூமாலை சாத்தவும், திருப்பணி நடத்தவும் பல்வேறுபட்ட நிவந்தங்களுக்கும்.*

**(2)** *கல்வெட்டு இரண்டில் அரசன் பெயரில்லை. வேறொரு நிலக்கொடை நாட்டவர் கொடுத்ததாக உள்ளது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ .... திரிபுவன சக்கரவத்திகள் ..... கொண்டு டருளிய சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு 11 வது மேஷநாயிற்று பிரபவ ஏகாதசியும் திங்கள்
2. கிழமையும் பெற்ற அத்து நாள் பாக்கப்பற்றின் உத்தம சோழவள [நாட்டு]..... ல் உடையார் அண்ணாமலை உடைய நாயனார்க்கு அமுதுபடி சாத்துப்படிக்கு திருபணிக்கும் பல நிவந்தங்களுக்கும்
3. இறையிலி தேவதானாமாகவிட்ட பூதமங்கலத்தில் மறிவான் மலையப்படி கோணார் ஏந்தல்.... மணியந்தாங்கல் பற்றில் உட்பட்ட நாற்பாற் எல்லைக்கு உட்பட்ட நஞ்சை புஞ்சை மாவடை மரவடை, குளவடை
4. இவ்வூரில் மற்றும் காசாயகுடி வாசல்பணமும் பூதமங்கலத்தில் திருமடை விளக்கத்தில் ஏறும் காசய [ம்... யும் அனைத்தாய .... ங்க[ளும்] இறையிலி தேவதானமாக சந்திராதித்த வரை செல்வதாக கல் வெட்டிகுடுத்தோம் பாக்கப்பற்று நாட்டவ

5. ரோம் நாட்டுப் பணியால் பெரியநாட்டு வேளான் எழுத்து இறவா அழகபன் வேளாநெழுத்து இடை வள்ளி....

## 19:2

1. ..... பாசிப்ப.... றும் பேற்றில் கொள்ளும் உபாதியுள்பட்ட இன்நாயனார்க்கு அமுது படிக்கும், கறியமுதுபடி, வெஞ்சனத்துக்கும், சாத்துப்படிக்கும், திருப்பரிவட்டத்துக்கும், திருநாளுக்க பூக்கும் நமியார் உள்ளிட்ட பல பணி நிமிந்ததுக்கும் திருசை னுந்தா விளக்கு .... [ச] ந்தி விளக்கு இருபதுக்கும், விஷிசாயந் ஸந்திமத்துக்கும் பலதிவஸங்களுக்கும் திருப்பணிக்கும் இவ்வூறாம் இவ்வூர் பிடாகையில் திருவிடையாட்டம் ஆண்பாரெந்தலும், பட்டனேந்தலும் பாடகத்துக்கு போகிற வழிக்கும் வீர மரணம்

3. ........... பாக்கத்துக்கு போகுற [வழிக்] கும் நடு எல்லைய கொல்லை உட்பட்ட திருவிடையாட்டம் நீக்கி வழுவாத்தலைப்பூண்டி பொங்கையார் ஏந்தல் பற்றுடை கூத்தப்பரையன் ஏந்தல், தாமரை ஏ[ந்]தல் மற்று மற்றும் உள்ளிட்ட புறவடைக்கும் உள்பட்ட இநாயனார்க்கு

4. நஞ்சைய, புஞ்செய் நாற்பாற்கெல்லையும் ........................ இறையிலி தேவதானமாக சந்திராதித்தவரையும் செல்லும் படிக்கு கல்லுவெட்டிக் குடுத்தோம் நாட்டவரும் வீரசம்பக்கச்சியாரு இவ்வனை வரோம் இந்த தன்மன் [ம்] மாறுவான் கெங்கையிடை குமரி.

5. யிடை காராம்பசுக் கொன்ற பாவங்கொள்வான் ஸ்ரீ பன்மாஹேச்வரக்ஷை.

# 20. இரணியூர் கண்மாய் கல்வெட்டு

வீ. முத்துக்குமார்,
புதுச்சேரி

**இடம் :** *சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம், இரணியூர் என்னும் ஊரில், மேற்கே அமைந்துள்ள கண்மாய்க்கு நடுவில் நடப்பட்டுள்ள தனிக்கல்லில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு*

**காலம் :** *சுமார் 13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *கல்வாய் நாட்டு இரணியூர் ஊரார் அள்ளியூர் உடையான் கண்டன் பிள்ளைக்கு ஊருணிப் பராமரிப்புக்காக வழங்கிய நிலத்தினைக் குறிப்பிட்டுள்ளது.*

1. .....ம்மதேவற்கு யாண்டு 6
2. வது ஆவணி மாதத்து இரு [நா
3. ள்] கல்வாய் நாட்டு இரணியூர் ஊர்
4. க்குச் சமைந்த ஊரவரோம் அள்ளியூர்
5. உடையான் கண்டன் பிள்ளை[யாந] த
6. ன்மம் வளத்துவாழ்விச்சானுக்கு ஊ
7. ரணிப்புறமாகப்பன..கும் வயலி
8. ல் பெருவாய்க்காலால் நீர் பாஞ்சு
9. நெல் விளையும் நல்லபிள்ளைப்
10. பெற்றாளுக்கு பெருநான்கொல்லை கீழ்பா
11. ற்கெல்லை ஆட்கொண்டீசுரமுடைய
12. நாயனார் தேவதானத்துக்கு மேற்
13. கு தென்பாக்கெல்லை வல்லாண்டி
14. குளவெல்லைக்கு வடக்கும் மேல்[பாக்
15. கெ]ல்லை கண்ணுக்கினியார் செய்
16. க்குக் கிழக்கும் வடவெல்லை நல்லப்பி
17. ள்ளைப்பெற்றாள் தென்வாமைக்குத் தெ

18. ற்கும் ஆக இசைந்த பெருநான்கெ
19. ல்லைக்குள்பட்ட நிலமுற்றும்
20. இந்த ...............
21. நத்தமெப்பேர்ப்
22. பட்டனவும் இது
23. க்கு விற்ற விலைப்
24. பொருள் முதலாக
25. கொண்டு இறையில்
26. கழித்துக் குடுத்தோம்
27. ஊர்க்குச் சமைந்த
28. ஊரவரோம் இப்படி
29. சந்திராதித்த [வல்] செ
30. ல்வதாக இவ்வூற்கு எல்
31. லா நன்மையும் பெருக
32. வளத்து வாழ்வித்தார் க
33. ரையில் தீத்த மண்டபத்தி
34. லே இவூர் ஆட்கொண்டீச்சு
35. ரமுடைய நாயினார் தீத்த ப்ர
36. ஸாத3த்து ஏறி அருளுவாராக
37. இப்படிக்கு இந்நாட்டுக்கண
38. [க்கு] கல்வாயி நாட்டு வேளான்
39. எழுத்து இப்படிக்கு சாத
40. னத்தின் படிக்கு பிள்ளை
41. மாணிக்க தச்சன் எழுத்து

# 21. பசுபதி கோயில் போசள வீரராமநாதன் கல்வெட்டு

கோ. தில்லைகோவிந்தராஜன்

**இடம் :** *தஞ்சாவூர் மாவட்டம் , பாபநாசம் வட்டம் தஞ்சாவூர் கும்பகோணம் நெடுஞ்சாலையில் பசுபதி கோயில் செல்லியம்மன் கோயிலின் மேட்டுப் பகுதியில் நிலைப்படி [தனிக்கல்]*

**காலம்:** *போசள வீரராமநாதன் ஆட்சி ஆண்டு: 2 ஆவது 1251*

**செய்தி:** *வீரராமநாதனின் யானைப் படையைச் சேர்ந்த மாவத்த தண்டநாயக்கன் கொடுத்த கொடையினை குறிப்ப தாகும்.*

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. போச
3. ள வீரராம
4. நாத
5. தெவற்க்
6. கு யாண்
7. டு உ வது
8. பிரமதே
9. யம் கடப
10. ங்குடில்
11. திருமுற்ற
12. த்து திரு
13. வாசல்
14. செவித்த
15. ஆச்சய
16. மாஹத்த

# 22. பழங்கரை கல்வெட்டுகள்

கரு. ராஜேந்திரன்,
மேலப்பனையூர்,
செ. கோவிந்தராஜ்,
புதுக்கோட்டை,

## 22:1

**இடம் :** *புதுக்கோட்டை மாவட்டம், ஆலங்குடி வட்டம், பழங்கரை புராதனபுரீஸ்வரர் கோயில் கருவறை மேற்குச் சுவர், இலிங்கோத்பவர் சிற்பத்துக்குக் கீழ் அதிட்டானத்தின் ஜகதி*

**காலம் :** *சுமார் கி.பி. 13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *இலிங்க புராண தேவர் கற்சிலையினை பாலையூர் ஒலியன் பெற்றானான செம்பியன் பல்லவதரையன் தானமாக அளித்தமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீ இ...ங்கபுராண தேவர் பாலையூ
2. ஒலியன் பெற்..னான செம்பியன் பல்ல
3. வதரையன் தன்மம்.

## 22:2

**இடம் :** *கருவறை மேற்குச் சுவர், தேவகோட்டத்துக்குக் கீழ் அதிட்டானத்தின் ஜகதி*

**காலம் :** *சுமார் 13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *தேவகோட்டச் சிற்பத்தைத் வேளார் ஒருவன் தானமாக வழங்கியமை*

1. ஸ்....ா பெற்ற
2. னாயனார்.....க்கி வே
3. ளார் தன்ம...

## 22:3

**இடம் :** *முகமண்டபத் தூண்.*

**காலம் :** *சுமார் 13ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *அருள்மொழி தேவபுரத்து வியாபாரி புலியன் பனையனான பத்தற்கருள் செய்வார் என்பவர் தூணை தானமாக வழங்கியமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீ
2. அரு[ள்] மொழி தேவ
3. புரத்து வியாபாரி
4. புலியன் பனைய
5. நான பத்தற்கரு
6. ள் செய்வார் செ
7. ய்த தன்மம் இக்கா
8. ல்.

## 22:4

**இடம் :** *முகமண்டபத்தின் மற்றொரு தூண்.*

**காலம் :** *சுமார் 13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *மேற்குப் பக்க தூண்களிரண்டை திருநெடுங்களத்து அகழங்கமாராயர் மகன் சிவலோகமுடையார் என்பவர் தானமாக வழங்கியமை*

1. ஸ்வஸ்திஸ்ரீ மேலைக்
2. கால் இரண்டும்
3. திரு நெடுங்களத்து அகழங்க மாரா
4. யர் மகன் சிவலோ
5. கமுடையார் தன்
6. மம்.உ.

## 22:5

**இடம் :** *நிலைக்கால்.*

**காலம் :** *சுமார் 13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *நிலைக்காலை பெரியகன் ஆழ்வானாகன் மலையரைய வேளான் என்பவர் தானமாக வழங்கியமை.*

1. ஸ்வஸ்தி
2. ஸ்ரீ இத்தி
3. ருநிலை கா[க]
4. ல் பெரியக
5. ன ஆழ்வா
6. னாகன் [மு]
7. மலை யரை
8. ய வேளா
9. ன் தன்ம
10. ம்.உ.

## 22:6

**இடம் :** *முகமண்டபத்தின் நிலைக்கால்.*

**காலம் :** *சுமார் 13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *நிலைக்காலை ஆழ்வான் மலையரைய வேளானான பெரியான் என்பவர் தானமாக வழங்கியமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. இத்திருநிலை
3. கால் ஆழ்வா
4. ன் மலை அ
5. ரைய வே
6. ளானான
7. பெரியான் த
8. ன்மம்.உ.

## 22:7

**இடம் :** *கருவறையின் மேற்கு முப்பட்டை குமுதத்தில் உள்ள 5 துண்டு கல்வெட்டுகள் இடங்கள் மாற்றி வைத்து கட்டப்பட்டுள்ளன.*

**காலம் :** *சுமார் 16ம் நூற்றாண்டு*

**செய்தி :** *அறந்தாங்கித் தொண்டைமான் கால நிலத் தானத்தைக் குறிப்பிடுகிறது.*

1. ஸ்வஸ்திஸ்ரீ....24ல் மேல் செல்லா ... வருஷம் ஆவணி மாசம் 18 தேதி அறந்தாங்கி....அரசு இற....னாயக தொண்ட[மா]
2. னார்....அ.......யகத் தொண்டைமானார்....யூர் மடஞ்சைய வாராக முதலியார் ..........த மடப்........புரமாகத் தன்ம பண்ணினா.........
3. பாலை[யூர்] நாட்டு வயலில் னாட்டு தாது பெரியம..........ருந்து நெல்விளையும் அரையன் வயக்கல்........நிலஞ்...டி.....மாவும் பரவயக்கல் 3 மா...
4. வுதகம் பண்ணி குடுத்தோந் சந்திராதித்தவர் .....தோலக்க தம் வகை இப்படிக்கு........ லகன்.........கத்த.......ய....தேவ அடியா......த்தா......

## 22.8

**இடம் :** *கருவரை கிழக்கு முப்பட்டை குமுதம்*

**காலம் :** *சுமார் கி.பி. 13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *பாலையூர் நாட்டவர் மேல்நாட்டு வைராகி ஆகியவர்கள் சேர்ந்து வழுத நாராயண பட்டற்கு கோயில் பண்டாரத்திற்கு நெல் அளக்குமாறு ஆணையிட்டு இறையிலியாக நிலம் விற்றுக் கொடுத்தமை.*

1. ............உடையார் திருக்காடர் [பா]லையூராளி பொ........வழுதி[ய]னார்...யன்...கு ராசராசவள...
2. பிச்சனத்து கட்டு நாப்... பல மண்டல...மேயவும் நாட்டு இறையிலி... நாட்டு... துப்பட...கும்...போந்த ஆலங்குடி [வாய்க்] காலால் நீர்பாஞ்சு நெ
3. [ல்விளையும்] வழுத நாராயண பட்டற்கு இறையிலி விலை பிரமாணமாக விற்ற இத்த நாவற் செய்க்கும்... த மாஞ்சைக்கும் அரை
4. ஆக இசைந்த பெருநான்கெல்லைக்குட்பட்ட நிலமும் மேல்நோக்கிய மரமுங் கீ நோக்கிய கிணறும் மாற்று...

இந்நிலத்தால் வந்த சுவாதினங்களும் இராச கெம்பீர வேளார் குமரச் செய்யிகுப் பெருநான்கெல்லையானது மே நாட்டு வைராகி கொற்றவன் வி...

5. ....இத்தம் நாலும் நம்மில் இசைந்து விலைப்பொருள் விலையாவண க்களரிக் காட்டி ஏற்றக்காலே வரக் கொண்டு இந்த பலய .... கவரவ வ...பிரமாணம் பண்ணி குடுத்தோம் வழுதநாராயண பட்டற்கு நாட்டவரோம் இப்படி இறையிலியாக விற்றுக் குடுத்தோம்.

6. ....ராகவும் நெல்லு ந...த்து போந்த நிலத்துக்கு புள்ளி பாத்து கோயிற் கணக்கன் கையாற் தரவு கொண்டு பண்டாரத்துக்கு சிலவ[று]ப்பாராகவும் இந்நிலங்களில் உள்ள நீர் பாய்வதாகவும் இந்நிலங்கள் தமக்கு வேண்டுவார்க்கு தானதன் மத்துக்குரித்[தாக]

7. ...ரட்டவழுதி நாராயணபட்டற்கு இப்படிக்கு கண்ணகாராயன் எழுத்து இப்படிக்கு உத்தம வேளார் எழுத்து இப்படிக்கு உலகளந்த வேளான் எழுத்து இப்படிக்கு சேனாவரையன் எழுத்து இப்படிக்கு இராச கெம்பீர வேளான் எழுத்து

8. ...ரையன் எழுத்து இப்படிக்கு நம்பி செய்வான் எழுத்து இப்படிக்கு பூவாலராயன் எழுத்து இப்படிக்கு மாயலூர் வேளான் எழுத்து இப்படிக்கு வேணாவுடையான் எழுத்து இப்படிக்கு கடந்தான் எழுத்து இப்படிக்கு வெளி சேவான் எழுத்து.

## 22:9

**இடம் :** *கருவறை மேற்கு பக்க அதிட்டான பட்டிகை.*

**காலம் :** *சுமார் 13ம் நூற்றாண்டு*

**செய்தி :** மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 5வது ஆட்சியாண்டில் பழங்கரை நாயனார்க்கு கடமையிறுப்பதற்கு மருமக்க நாயனாருக்கு மாகேசுவரர்கள் நாட்டுக் கண்காணி ஸ்ரீகார்யம் செய்பவர்கள் இராசிங்கன் குளக் கீழ் நிலத்தினை காராண்கிழமையாக விட்டமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறு பன்மரான திருபுவன சக்கறவத்திகள் ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு 5வது மார்கழி மாதம் ... நாள் இராச வளநாட்டு பாலையூர் நாட்டு உடையார்க்கு பழங்....

மாஹேச்வர நாட்டு கண்காணி ஸ்ரீ காரியம் செய்வார்களோம். இராசிங்கன் குளக் கீழ் இராசேந்...சீ..ல...... மண....தான் மருமக்க நாயனாற் குடி நீங்கா காராண்கிழமையும் பிரமாணம் பண்ணி குடுத்த பரிசாவது இன்னாயனார்.

2. ......காராண்கிழமையான தலையான்.... புலம்...நான்கெல்லைக்கு உட்பட்ட.....வது.... கள..ம் ெ.பட்டித் திருத்தி னக்க உழவாராகவும் 2ம் மடித்து பிறமான...ன் பழங்கரை கால் மண்டபத்திலே கல்பதற் செக்கை முளை [மடவலோம்] நீங்கலாக மா சிறுங்கன் மாற்று அளக்கும் 7 நூற்று கலமும் அளத்தாறு காட்டிச் செல்.... கொள்வாராகவும் இப்படி அவிதல வகை

3. செல்வதாக குடிநீங்கா காராண்கிழமை ப்றமாணம் பண்ணி குடுத்தோம். முன்சொல்லப்பட்ட னாயநாற்கு மேல் னோக்கிய மரமும் கீழ் நோக்கிய கிணறும் மற்றுந்தல்... பொம்பாராகவும்.

4. ...ற்வாள் தலைக்கு வடக்கும் இக்குளத்துக்குத் தெற்கும் இப்படி அனுபவித்து நெல்லு குடி நீங்கா காராண்கிழமை பிரமாணம் பண்ணிக் குடுத்தோம் மருமக்க னாயினார்க்கும் ஸ்வஸ்திஸ்ரீம... ஆண்டொன்றுக்கு ஐஞ்சு பணமாண்டாசறுதி இறுப்பாராகவும் இப்படி வருசத்து வர செல்வதாக இப்படிக்கு பழிய இ...பட்டன் எழுத்து... திருச்சிற்றம்பலம் பட்டர் எழுத்து பாளையூர் நாட்டு பட்டர் எழுத்து நாற்பத்தென்னாயிர பட்டர் எழுத்து

5. எழுநாட்டு வைராகி கையெழுத்து நம்மயார் திருச்சிற்றம்பல முடையான் எழுத்து... இந்தக் குடிநீங்காக் காராண்கிழமை பிறமாணம் எழுதிநேன் நம்பி உழான் திருச்சிற்றம்பலம்...

## 22:10

**இடம் :** *கருவரை கிழக்கு பக்க அதிட்டான குமுதம்.*

**காலம் :** *பாண்டியன் மாறவர்மன்.. 13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *இம்பர வேளார் மகன் இறையிலியாக நிலம் கொடுத்தமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ மற்கத்திக்கு மேல் ஸ்ரீ கோமாறு பன்மரான திரிபுவன சக்கரவத்திகள்... தேவர்க்கு யாண்டு 5 வது ....ந்திரத்து நாள்...ங்காக்க

2. ....நாட்டு பாலையூர் நாடாக இசைந்த நாட்டவரோம் ... திருப்புவன எழுந்தருளி இந்நாயனார் சொப்ப... ல் எழுந்திரு...

3. நெல் விளையும் நெல்வேலி வயலில் ஊரான் கயவன் நாவல் இ... மய அந்தமாஞ்சை... இம்பர வேளார்க் குமாரர் செய்யும் இறையிலி விலைய

4. ...கால் செய்க்கும் பெருநாங்கெல்லையாவது ஆலங்குடி வாய்க்காலுக்கு கிழக்கு... கற்கோடிய வ.... வாய்க்காலுக்கு பாகிற வாய்க்காலுக்கு வடக்கும் வடபாற்கெல்லை.

5. இக்காலுக்கு மேற்கும் தென்பாக்கெல்லை உத்தம வேளார் கடம்பன் செய்க்கு வடக்கும் மேல்பாற்கெல்.. வாய்காலுக்கு.. செய்க்கு பெருநான்கெல்லைக்குட்பட்ட நிலமும் மேல் நோக்கி மரமும் கீ நோக்கிய...

6. இக்குடி நாலுக்கட கிழக்கும் காலுக்கும் உடையார் திருப் பழங்கரைஉடைய நாயனார் திருப்பங்குனி திருநாள்... திருப்பவழக்கு... டொன்றுக்கு ...ம் இறுப்பராகவும்...

7. ....தரவிதாகவும் இப்படிக்கு உடைய நாயனார் கோயிலிலே கல்லிலுஞ் செம்பிலும் வெட்டிக் கொள்ள... இந்நிலம் சந்திராதித்தவர் செல்வதாகவும்... துக் கொள்ள கடவாராகவும் இப்படி சம்மதித்து இறையிலி விலைபிரமாணம்...

8. ...செம்பியன் பல்லவரையன் எழுத்து இப்படிக்கு இவை யாதவராயர் எழுத்து அழ... வேளான் எழுத்து இப்படிக்கு மாவரோ தரையர்... ரா விழுப்பரையன் எழுத்து இப்படிக்கு பெரியநாட்டு வேளான்...

## 22:11

**இடம் :** *மேற்படிக்கோயில் - அம்மன் சன்னதி தரை.*

**காலம் :** *சுமார் 13ம் நூற்றாண்டு*

**செய்தி :** *பெரியநாட்டு வயிராகி என்பவருக்கு இவ்வூரில் பாடிகாவல் செய்தமை.*

1. ஸ்வஸ்திஸ்ரீ பெ
2. ரியநாட்டு வயி
3. ராகி அகம் பாலை
4. யூர் னாட்டார் ஆசிரியம் உ

# 23. ஆலத்தூர் கல்வெட்டு

பெ. சுதாகர்,
தஞ்சாவூர்

இடம் : விழுப்புரம் மாவட்டம், சங்கராபுரம் வட்டம், ஆலத்தூர் கிராமத்தின் ஏரிக்கோடி அருகில் இருக்கும் பாறை

காலம் : *ஜய 1414[?]*

செய்தி : விஜயநகர நாயக்க அரசரான இரண்டாம் தேவமகாராயரின் கட்டளைப்படி ஆலத்தூரை சேர்ந்த அகமுனாப்பன் மகன் பல்லவத்தரையன் என்பவர் பெரிய ஏரிக்கு தண்ணீர் கொண்டுவர பாப்புக்கால் ஓடை ஒன்றை வெட்டி சீரமைத்து கொடுத்தது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மன்மகா மண்டலேஸ்வர
2. தேவர் ராஜாதிராஜ ராஜ
3. பரமே பவர .... தேவாம
4. காசாயர் ப்ரதிவிராஜ்யம் பண்ணி
5. யருளா நின்ற சகாப்தம் 1316
6. ஜய வருடம் தைமாதம்
7. இம் ஆலத்தூர் பாப்புக்கால்.....
8. அக முனாப்பன் மகன்
9. பல்லவத்ரையன் கண்டத்....
10. தோம் யிது ச......ம...



# 24. பழனி அக்கசாலை (அஞ்சுசாதியார்) மடத்துப் பட்டயம்

செ. இராசு,
ஈரோடு

பழனி அடிவாரத்தில் உள்ள அக்கசாலை என்ற அஞ்சு சாதியார் மடத்தைச் சேர்ந்த பட்டயம் இது. இப்பட்டயத்தின் நகல் அம்மடத்துக்குப் பொறுப்பாக இருந்த திரு. தட்சிணாமூர்த்தி என்பவரிடமிருந்து பெறப்பட்டது.

மதுரை அஞ்சுசாதி பஞ்ச கம்மாளர் கொடுத்த செப்பேட்டுப் பட்டயம் இது. முருகப் பெருமானையும், கம்மாளர்களையும் புகழ்ந்து சில பாடல்கள் முதற்கண் [வரி 1-18] கூறப்படுகின்றன.

அடுத்து 19-76 வரிகளில் சிவபெருமானின் நெற்றிக் கண்ணில் விசுவ முனியேந்திரன் பிறந்த விபரமும், காரணமும் முதற்கண் கூறப்படுகின்றது. சிவபெருமான் பணிக்க விசுவமுனியேந்திரன் மேரு, பூமி, அட்டமா நாகம், அட்டதிக்கு யானைகள், அட்ட கல பர்வதங்கள், அட்டதிக்குப் பாலகர்கள், ஏழு கடல், வேதம், ஆகமம், புராணம், மிருகங்கள், நீர் வாழ்வன, அக்கினி பஞ்சபூதங்கள், பஞ்சாங்க உறுப்புகள் முதலிய உலகில் வழங்கும் அனைத்தையும் படைத்த விபரம் கூறப்படுகிறது

76-115 வரிகளில் விசுவகர்மாவின் ஐந்து முகத்திலும் ஐந்து பிருமாக்கள் தோன்றி மிகுந்த ஆற்றலுடன் பலவற்றைப் படைக்கின்றனர். சிவன் திரிபுர தகனம் செய்ய உதவியவர்கள் என்று கூறப்படுகின்றனர். இராமனுக்கு இராவணனை அழிக்க உதவியவர்கள், சேர, சோழ, பாண்டியர்கட்குச் செங்கோல் முதலியன கொடுத்தவர்கள்; இராவணனுக்காக இலங்கைய நிர்மாணித்தவர்கள்; மன்மதனுக்கு அம்பும் வில்லும் கொடுத்தவர்கள்; சூரியனுக்கு ஒரு சக்கரத் தேர் கொடுத்தவர்கள், தேவேந்திரனுக்கு அமராவதியைக் கொடுத்தவர்கள்; என்று பலவிதமான உயர்வு நவிற்சிப் பெருமைகள் கூறப்படுகின்றன.

பின்னர் [வரி 116 - 147] பஞ்சகம்மாளரின் குலதெய்வமும் தாயும் ஆகக் கருதப்பட்ட காளிதேவியின் பல்வேறு பெயர்களும் புகழ் மொழிகளும் கூறப்படுகின்றன. அடுத்து முருகப் பெருமான் புகழ்

*மொழிகள் பல கூறப்படுகின்றன. [165-187] முருகப் பெருமானுக்குப் பழனியில் அக்கசாலை மடம் அமைக்க அனைத்துப் பிரிவுப் பஞ்சகம்மாளர்களும் சேர்ந்து மதுரையில் சொக்கநாதர் சன்னதியில் மதுரை மன்னர் முத்து வீரப்ப நாயக்கர் காலத்தில் ஒன்றாகக் கூடுகின்றனர் [187-206]. இங்கு சிவபெருமான் மதுரையில் நிகழ்த்திய பல திருவிளையாடல்கள் கூறப்படுகின்றன பல அரசு அலுவலர்கள், சமயப் பெரியோர் முன்னிலையில் கூடி 1,200 பொன் செலவில் தகர் [ஆட்டுக்கிடாய்] வாகனம், கல் மண்டபம் ஆகியன உருவாக்கி விழா நடத்தும் முறைகளையும், அவற்றுக்குச் செய்ய வேண்டியப் பல்வேறு செலவுகள் குறித்தும் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளது [206-258].*

*விழாவில் அர்ச்சகர் ஊழியர்கட்குக் கொடுக்க வேண்டிய செலவு குறித்தும் கூறப்படுகிறது. பின்னர் [259-274] சமனொளி மலைக்குக் கிழக்கே, மாந்தைக்கு மேற்கே, காசிக்குத் தெற்கே, கன்னியாகுமரிக்கு வடக்கே தொழில் செய்கின்ற பஞ்ச கம்மாளப் பிரிவினர் கொடுக்க வேண்டிய மகமைப்பணம் நிர்ணயம் செய்து எழுதப்பட்டுள்ளது இக்கொடை தவறாமல் கொடுக்க வேண்டும் என்றும், கொடை கொடுப்பதால் ஏற்படும் நன்மை குறித்தும் கூறப்பட்டுள்ளது. [275-309]*

*இந்த ஆவணத்தை உருவாக்கியவர் அவனியாபுரம் அரிகரபுத்திரன் என்பவர். இதைச் செப்பேட்டில் பொறித்தவர் ராயப்ப ஆசாரி மகன் வசந்தராயன் என்பவர்.*

*இச்செப்பேடு முத்துவிர வசந்தராயராகிய முத்துவீரப்ப நாயக்கர் காலத்தில் செய்யப்பட்டது என்ற குறிப்புள்ளது ஆயினும் கொடுக்கப்பட்டுள்ள சக ஆண்டு 1538ம் சாதாரண ஆண்டும் பொருந்தி வரவில்லை சாதாரண ஆண்டு 1610 மற்றும் 1670இல் வரும். இது 1670 ஆண்டைச் சேர்ந்தது எனக் கொள்ளலாம்.*

### முதல் ஏடு – முதல் பக்கம்

1. செக குருவாகிய அஞ்சுசாதியார் குடுத்த அனாதி செப்பேடுப்பட்
2. டையம். ஓதனை யாகலும் ஓங்கு புகழ்பெருங் காதல் பொருளனைத்தும் கைக்கொண்
3. டும் சீதப் பனிக்கோட்டு மால்வரைப் பாரதப் போர் தீட்டும் தனிக்கோ

4. ட்டு வாரணத்தின் தாள். அம்பவளத் துய்யநிறத் தைங்கரத்து மெய்ஞ்ஞானக் கம்பமத யா

5. னைதனைக் கட்டுவிக்கக் கொம்பாற் பொற் போருமே வினையறுமே போக்குமே மேஞானந் தீருமே

6. நினைத்ததெல்லாம் தான், மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி ஏவரும் து

7. திக்க நின்ற ஈராறு தோள்கள் போற்றி மாவடி வைகும் செவ்வேள் மலரடி போற்றி

8. அன்னான் சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி, கழுவா மணி

9. க் கலசங் காஞ்சிசூழ் நாட்டில் புழுவாய்ப் பிறந்தாலும் போதா வழுவாமல்

10. சந்திரராய்ச் சூரியராய்த் தானவராய் வானவராய் இந்திரராய் வீற்றிருப்பதில்

11. ஆதித்தன் எங்கே அயன்மூவர் தான்எங்கே வேதச் சொல் எங்கே வினை எங்கே

12. நீதிக்குள் மண்ணாளர் எங்கே மனைவரம்பு தான் எங்கே கண்ணாளர் கைவிலகி

13. னால், அகிலாண்டமும் சில அழிந்து பெரிய அண்டாண்டமும் சண்ட அங்கிகொ

14. ண்டுலகமும் பாதம் பதிமறந்துபோய் ஒருவரன்றியே ஒழியும் அந்தநாள் பிலாவன்சீ

15. ர் மகாபாலமே மாலவன் சடம் சூலமிது கொண்டு உலகு சிங்கைவாழி தலைவன் எங்கை

16. யன் இடமதாகவே நடமாடுமேல் செக குருவாகிய மதுரை அஞ்சுசாதி பஞ்சாளர்

17. குடுத்த அனாதி செப்பேட்டுப் பட்டையம், காஞ்சிபுரத்துச் செப்பேட்டுப்படி சுவத்தி

18. சீமன் நம் திருநெறி தழைக்க திருமகள் தழைக்க போர் மன்னர் வாழ்ந்திருக்க

முதல் ஏடு – இரண்டாம் பக்கம்

19. த் திருவாய்க் கேள்வி முன்பாக திங்கள் மும்மாரியும் சிறப்புடன் பொழிய சீரிமன் மகா

20. மண்டலேசுரன் சங்கரா சங்கரன் சதாசிவமூர்த்தி சருவலோகேசுரர் சகல ஆத்துமாக்க

21. ளையும் சகல பேதாதி பேதங்களையும் உண்டாக்குவான் பொருட்டாக திருவுளத்தே வ

22. ன்னித்துத் திருநெற்றிக் கண்ணில் விசுவ முனியேந்திரனைப் பிறப்பிக்க பஞ்ச முகமும்

23. பதினைந்து கணங்களும் அய்யிரண்டு கரமும் சிவவேடமும் கையில் கமண்டலமும் பி

24. ன்ங் குடுமியும் முப்புரிநூலும் பஞ்சமுகமுமாகத் தோணி அரன்அடி வணங்கி அடி

25. யேனைப்பிறப்பித்த காரியம் திருவுளம் பற்றி யருளுமென்ன அகில சகல

[26 முதல் 181 முடிய உயர்வு நவிற்சியான மெய்க்கீர்த்தி]

## ஆறாம் ஏடு – முதல் பக்கம்

182. லாந்தகன் அறத்திக் குமார கண்டீரவன் வள்ளி பயங்கரன் தெய்வயானை மனோகர

183. ன் சிறீவீரபத்திர தெய்வ்வ சகோதரன் துட்டநிற்கிறக கண்டன் சாமத்துரோகிய

184. ள் மிண்டன் சத்துராதியள் சங்காரன் மன்மத வசீகர பஞ்ச பாணாவதாரன் அமன

185. ர் முடி சிதறிடும் தீரன் சுவாமிநாத விசயீயவன் பராபரமாகிய பரமேசுவரன் தரா

186. தலம்படைக்கத் தானினைந் தருளிய வைகாவூர் நாடன் கன்னிகார வனமாம் தி

187. ருவாவினன்குடியில் சுவாமி கலியுக வரதரான பழனிக் குமாரர் சன்னதியில் நம்மி

188. ட அக்கசாலை மடத்துக்கும் அறை அபிஷேகம் நைவேத்யம் திருனந்தவனம் உள்

189. பட்ட அடங்கலாக கட்டளையிட்டபடி சுவாமி சொக்கநாயகர் மீனாட்சியாயி வரப்

190. பிறசாதி ஆகிய சிறீமன் மகாமண்டலேசுரன் துரைகள் சிகாமணி துரைகள் தேவேந்திரன்

191. இருங்கோளவளப் பாண்டிவளநாடன் தேவேந்திர பூசிதன் சவுந்தர பாண்டியன் பூலோ

192. க புரந்தரன் பூறுவ பச்சிம உத்தர தெட்சண சமுத்திராதிபதி அறுபத்து நான்கு திருவிளையா

193. ட்டத்துக்கு அறுபத்தஞ்சாந் திருவிளையாட்டமான முத்துவீர வசந்தராயராகிய

194. முத்து வீரப்ப நாயக்கரய்யன் இராச்சியபாரம் பண்ணப்படா நின்ற சிறீசகாத்தம்,

195. 1538ன் மேல் செல்லாநின்ற சாதாறண வருஷம் வைகாசி மாதம் 25 தேதி வெள்ளிக்கிழமை

196. யும் பஞ்சமியும் பூசநட்சத்திரமும் சிவயோகமும் அமுதகேளிகையும் கூடிய

197. னாளில் கன்னி காரியமாய் காளி ஆலைவாய் மாடக்குளக்கீழ் மதுரை உதைய

198. வளநாட்டில் நயினார் அறுபத்துனாலு திருவிளையாட்டமாடிய சவுந்திரபாண்டிய

## ஆறாம் ஏடு – இரண்டாம் பக்கம்

199. ன் பிஞ்சுமதி சூடி நிற்றக் கலியாணன் பிட்டுக்காகப் பிரம்படி பட்டவன் பாணனுக்கா

200. க விறகு சுமந்தவன் பரதேசிக்காக அங்கம் வெட்டினவன் மீன்காரனாக வலைவீசினவன் செ

201. ட்டியாக விறகு விற்றவன் வலியானுக்கு அருள்புரிந்தவன் அங்கண்ணாயகி பிராணநா

202. யகன் திரு ஆலைவாயுடைய தம்பிரானார் திருவாலைவாயாகிய நான்மாடக் கூட

203. லில் மதிராபுரியில் கடம்பவனமாகிய அட்டகசஞ் சூழ்ந்த வெள்ளியம்பலத்தில்

204. பரதேசி காவலனான ஏழைபங்காளன் அண்டர்நாயகன் அடியார்க் கெளியவன் அகிலா

205. ண்டகோடி விறுமாண்ட சருவசீவ தயாபரனான அழகிய சொக்கர்

206. மீனாட்சி ஆயி சன்னதியில் ஆறுகால் பீடத்தில் செட்டியாரய்யன் செவ்வந்திநாத பி

207. ள்ளை அய்யன் திருவிருந்தாழ்வா பிள்ளை அய்யன் ராமப்ப நாயக்கரய்யன் எறமசெட்டி

208. நாயக்கரய்யன் செட்டியண்ண நாயக்கரய்யன் கத்தி நாரசிங்க நாயக்கரய்யன்

209. பொக்கிஷ முதலியப்பிள்ளையையன் இவர்கள் முன்பாகவும் அபிஷேகத் தம்

210. பிரான் அய்யன் தீராவினைதீர்த்த பண்டாரம் இராயண பண்டாரம் குடைச்சீவன

211. அனந்தப்ப அய்யன் நம்பியார் மதுரை நாயகர் குலசேகர பட்டர் செண்பகக்க

212. ண்ணர் சொக்கபட்டர் தெற்பக்குளம் பிறசாத உடையார் நீரகாப்பண்டாரம் கா

213. ளத்தி உடையார் சதவிட்டி உடையார் காசி உடையார் சங்காவசவ ராத்திரி உடை

## ஏழாம் ஏடு – முதல் பக்கம்

214. யார், நிரம்பழகிய பண்டாரம் சிவப்பிரகாச பண்டாரம் இவர்கள் முன்பாக நம்மிட

215. சாதியார் சகலமான அஞ்சுசாதி பஞ்சாள பத்தகளனைவரும் ஓசகள் வீரகள் பூமித்

216. தலையாரிகள் சந்தைவரோதயர் பலமண்டல சமய சங்கேதிகள் சமையக்கணக்கப் பி

217. ள்ளை சகலமான உறவின்முறையார் அனைவரும் குறைவறக் கூடி நிறைவற நிறை

218. ந்து பழனியில் நம்ம குரு நமசிவாய கயிலாயர் உடையவற்கு நிகுதியாகத் தன்மை சா

219. தனப்பட்டையம் கட்டளையிட்டபடிக்கு விபரம் நம்மிட தகர் வாகனம் அ

220. டங்கல் பொன் 1200 இந்த ஆயிரத்திருநூறு பொன்னிலே தகர் வாகனம் முகிஞ்ச

221. உடனே சுவாமியை எழுந்தருளப்பண்ண வேணுமே தகர்வாகனம் முகிஞ்ச பொன்னு

222. க்கு அடங்கல் கல் மண்டபம் பொன் 300 அபிஷேகக் கட்டளைக்கு விபரம் தினமொ

223. ண்ணுக்கு சாத்தெண்ணெய் ஒண்ணரைப் படியாக பொன் 18 தினமொண்ணுக்கு ப

224. ழும் 120தாக பொன் 18 தினமொண்ணுக்கு பசுவின்னெய் கால்ப் படியாக பொன் 2

225. பணம் 4 தினமொண்ணுக்கு தேன் கால்ப் படியாக பொன் 3 பணம் 4 சற்கரை பொன் 2 பணம் 4

226. வெல்லம் பொன் 2 பணம் 4 தேங்காய் பொன் 2 பணம் 4 பசுவின்பால் பொன் 2 பணம் 4 தயிர் பொன் 2

227. பணம் 4 எலுமிச்சம்பழம் பணம் 6 சந்தனம் கற்பூரம் புனுகு குங்குமபூ கோரோசணை பொன்

228. 12 சவ்வாது பொன் 2 பணம் 4 சாம்பிராணி பொன் 2 பணம் 4 சிதாரி பொன் 1 பணம் 2 ஆக வருஷமொன்றுக்

229. கு அபிஷேக கட்டளைக்கு பொன் 75 நெய்வேத்தியம் கட்டளைக்கு விபரம்

## ஏழாம் ஏடு – இரண்டாம் பாகம்

230. தினமொன்றக்கு உழா பூசைக்கு படி 20 சிறுகாலசந்திக்கு படி 40 உச்சிக் காலத்துக்கு

231. படி 20 சாயங்காலத்துக்கு படி 20 ராக்காலத்துக்கு படி 20 திருப்பள்ளி அறைக்

232. கு படி 20 கயிலாயனாதற்கும் பெரியனாயகி ஆயிக்கும் படி 20 சுப்பிரமணியப் பிள்ளை

233. யார்க்கும் இடும்பேசுரனுக்கும் படி 10 ஆகத் தினமொன்றுக்கு அரி படி 150 ஆக

234. த் தினமொன்றுக்கு நெல்லு முக்கலனே குறுணி நானாழியாக மாத மொன்றுக்கு 93

235. கலம் இருதூணியே மரக்கால் ஆக வருஷம் ஒன்றுக்கு 1125 கலத்துக்குக் கூலி 75 கலம் ஆக நெல்

236. 1200 கலம் விலைப்படி பொன் 300 தினமொன்றுக்கு பயறுபடி பன்னிரண்டுக்கு பொன்

237. 6 கூட்டுக்கறி பொறிக்கறி மிளகு நீர்த்தாளிதம் பொன் 6 கா

238. ய்கறி உப்பு புளி விலை பொன் 6 பணம் 6 பலசம்பார் விலை பொன் 1 பணம் 4 இரண்டு

239. வகை ஊறுகாய் பொன் 1 பணம் 2 இரண்டு வகைத் திருப்பணியாரம் பொன் 12 பாக்கு

240. வெத்திலை கற்பூரம் பொன் 3 பணம் 6 ஆறு துப்பட்டி ஆறு சேலை பொன்னீர் வாத்த சந்திர

241. காவி உருமாலை 2 கச்சை பொன் 15 திருநந்தா விளக்கு பொன் 6 சேம விளக்கு பொன் 12

242. திருமாலை பொன் 3 பணம் 6 அறைகாவல்க்காரருக்கு பொன் 2 பணம் 4 திருமஞ்சனத்துக்கு பொன் 3 பணம் 6

243. திருமஞ்சனத் திரவியம் பணம் 8 எரி கரும்பு விலை பொன் 2 பணம் 4 திருமஞ்சனத்திற்கு பொன் 3 பணம் 6 நம்பியாற்கு பொன் 12 கணக்

244. குப்பிள்ளைக்கு பொன் 6 இதுக்கு குறியாக நடத்தி வருகுற பண்டாரத்துக்கு பொன் 6

## எட்டாம் ஏடு – முதல் பக்கம்

245. ஆக பல சிலவும் பட்டகாற சம்பளம் உள்பட பொன் 125 ஆக அபி

246. ஷேக கட்டளை நெய்வேத்தியக் கட்டளைக்குள்பட வருஷம் 1

247. க்கு பொன் 500 இந்த 500க்கும் ஒன்றிலொன்றுக்கு குறைவற சாங்கபாங்கம

248. ற நடத்திவரக் கடவோமாகவும் நம்மிட அய்யற்குப் பல்லக்கு உம்

249. பளிக்கை பொன் 60 நெய்வேத்தியமான 150 படிக்கும் சிலவு தான

250. த்தார் நம்பியார் பாரபத்தியக்காரக் கணக்குப் பிள்ளைகள் கடைக்கூ

251. ட்டுப் புண்ணியாமம் அறைகாவல்க்காறன் திருமஞ்சனக்காரர் திருமா

252. லைக்காரர் ஓதுவார் திருவிளக்கு பாக்கிறவன் நட்டுவர் முட்டுக்காரர் பா

253. டுவார் பரிகலம் உள்பட ஆகப்படி 50 போக மற்ற நூறுபடி அமுது

254. ம் நம்மிட மடத்திலே வேதிநம் மாயேசுர பூசையிலே நடத்தி வரக் கட்

255. டளை இடவும் கல்மண்டபம் பொன் 300க்கும் முகச்சாப்போலே நம்மி

256. ட கட்டளையாக நட்டுவர் முட்டுக்காரர் பாடுவார் பரிகலம் மேள

257. தாளம் திருநந்தவனம் தோப்புத் துரவு சகலமான கட்டளையும் உண்

258. டாக்கி அங்கரங்க வைபோகமாக நடத்திவரக் கடவோமாகவும் இன்

259. றைக்கு நடந்து நாளைக்குப் போரதல்லவே என்றென்றைக்கும் நடக்க

## எட்டாம் ஏடு – இரண்டாம் பக்கம்

260. வல்லோ வேணும் சமநொளிக்குக் கிழக்கு மாந்தைக்கு மேற்கு கா

261. சிக்குத் தெற்கு கன்னியாகுமரிக்கு வடக்கு இன்னான்கெல்லைக்குள்

262. பட்ட நம்மிட சாதியார் சகலமான உறவின் முறையாரனைவரும் ஒப்ப

263. மிட்டு வயிஞ்சு கொண்டு இன்னார் இனியார் என்னாமல் அய்ந்தலைநாகமா

264. னது அஞ்சு தலையிலும் இரையெடுத்து ஒரு மிடற்றிலே இறங்கினாப்

265. போலே கொல்லுக்குப் பணம் 2 தச்சுக்கு பணம் 2 நோட்டக்காரருக்குப் பணம் 2 கண

266. க்குப் பிள்ளைக்கு பணம் 2 சிற்பாசாரியனுக்குப் பணம் 2 பணக்கணம் பட்டக்காரரு

267. க்கு பணம் 2 காசுக்கண பட்டக்காரருக்கு பணம் 2 கல்த்தச்சருக்கு கொட்

268. டுவார்க்கு சாணைகாரருக்கு பணம் 2 கண்ணார் உலைக் கூட

269. த்துக்கு உலைக்கு பணம் 2 இரும்பூதியன் உலைக் கூடத்துக்கு உலைக்கு பணம் 2

270. செப்புக் கன்னார் பித்தளைக் கன்னார் கஞ்சக் கன்னார் கடைக்காரர் சித்திர

271. வேலைக்காரர் சொன்ன வேலைக்காரர் வாணக்காரர் மற்றும் உண்டான

272. வருகளுக்கெல்லாம் வீட்டுக்கொரு பணமும் கலியாணத்துக்கு பெ

273. ண்ணின் வீடு பணம் 1 மாப்பிள்ளை வீட்டுக்கு பணம் 1 கட்டளையிட்டு நட

274. த்தி வரக் கடவோமாகவும் இந்த நாள்வரைக்கு எல்லோரும் ஒப்பிட்டு

275. வயிஞ்சு கொண்டு புண்ணியமாக நம்மிட உறவின் முறையாராகி

## ஒன்பதாம் ஏடு – முதல் பக்கம்

276. ய நம்மிட சாதியை பாக்கிறபொழுது லட்சங்காணுமே நம்மிட சாதி

277. ஒப்பு உள்ள சாதிக மரியாதிக்குச் சரியொத்த சாதி நாம் எந்தெந்தப் பணிவிடை

278. தொடுத்தோ மந்தப்பணி எல்லாம் நம்மிட முன்னோர்கள் செய்த புண்ணியத்துனாலே நி

279. றைவேறும் ஒருவன் வயிஞ்சு கொண்டு அல்லோ அநேகம் புண்ணியங்களை செயிதார்கள்

280. நாமே வயிஞ்சு கொண்டோமாகில் என்னே புண்ணியம் நிறைவேறாது அளவிலாத புண்ணியத்தை

281. அய்யர் ஒருவர் தோன்றி நம்மிட வங்சத்துக்கு எல்லாம் அளவிலாத புண்ணியத்தை

282. தேடிக் கொடுத்தார் உத்தண்ட உத்தாரம் பண்ணாமல் அதம்மம் பேசாமல் இந்த தன்ம

283. த்தை வழுவாமல் நடத்தி வந்தோமாகில் புகழும் புண்ணியமும் வார்த்தைப்பாடு மெகீர்த்தி

284. யும் பெருமையும் உண்டு பழனிக் குமாரரிட கிருபையுமுண்டு நமக்கு இந்த அய்யரை

285. ப் போலேயும் பழனிக் குமாரர் சன்னதி போலும் கிடையாது இந்தப் புண்ணியத்தை

286. மேன்மேலும் அதிகமாகப் பரிபாலணம்பண்ணி நடத்திவரக் கடவோமாகவும் வேத

287. நெறி பொய்த்தாலும் வெள்ளி தெற்கு ஏகினாலும் விடியாத இருளாகி நாளும் ஆதவன்

288. திசை பிழைத்தாலும் நீள்கண்ணி ஆண்பால் மறுத்து விட்டாலும் சொன்ன மொழி த

289. வறாதவர் ஏற்ற கை மாற்றாதவர் கொண்டவரந் தவறாதவர் தன்னை அடைந்தாரை தானா

290. கக் காப்பவர் மறைபுக்கார் காவலர் அன்ன சொன்னந் தருவார் சிவ பூசை குரு பூசை ம

291. யேசுரபூசை உடையவர்கள் தன்மமும் தயவும் கிறுபையும் இரக்கமும் உடையவர்

292. கள் சுவாமிகாரிய புரந்தரர் நம்மிட அய்யர் எந்தெந்தச் சமசிட்டாலும் அந்த

293. சமசிக்கு நின்று அய்யருட ஆணைக்குள்பட்டு நடந்துவரக் கட

294. வோமாகவும் இந்தப் புண்ணியத்துக் கெல்லாம் யாதாமொருவர் ஒத்தா

## ஒன்பதாம் ஏடு – இரண்டாம் பக்கம்

295. சை உதவி வாக்கு சகாயம் சரீரசகாயம் அர்த்த சகாயம் பண்ணின பேர்க்கெல்லாம்

296. பழனியில் சன்முக நதியில் தீர்த்தமாடி தைப்பூசத்தில் பௌர்ணமி னாள் பழனி

297. யப்பரையும் வள்ளியம்மை தெய்வத் தாயையும் கயிலாய நாதரையும் பெரிய

298. னாயகி ஆயையும் சேவித்த பலனும், ஆவணி மூல நட்சத்திரத்து நாள் பொற்றாமரையி

299. லே தீர்த்தமாடி சொக்கநாதரையும் அங்கயற்கண்ணித் தாயாரையும் சேவித்த பலனும்

300. மார்கழித் திருமஞ்சனத்து நாளில் சிவகெங்கையிலே தீர்த்தமாடி சிதம்பரேசுரரையும்

301. சிவகாமித் தாயாரையும் தில்லைக் கோவிந்தராயரையும் சேவித்த பலனும், தனக்கோடியி

302. லே தீர்த்தமாடி ராமநாதசுவாமியையும் மலைவளர் காதலியாரையும் சேவித்த பல

303. னும் காசியிலே தீர்த்தமாடி காசி விசுவநாதரையும் விசாலாட்சி ஆயையும் அன்ன பூரணை

304. யையும் சேவித்த பலனும், பிரயாகையிலே தீர்த்தமாடி பிரயாகையில் மாதவனை சேவித்த ப

305. லனும் உண்டாகவும், சுவாமி கலியுக வரதரான பழனிக் குமாரரிட அனுக்கிரகத்தையும் பெற்று

306. நமக்கு மாதா பிதா குரு குலதெய்வமாகிய விசுவமுனியேந்திரனிட திருவருளையும் பெற்று

307. நம்மிட மாதாவாகிய காளிகா தேவியுட அனுக்கிரகத்தையும் பெற்று கயிலாச நிவாசனாகி

308. ய மகா தேவருடைய திருவருளையும் திருமெய்ஞானத்தையும் பெற்று சாலோக சாமீப சாரூப சாயூ

309. ச்சியத்தையும் பெற்று வாழவும் இந்தத் தன்ம சாசனப்பட்டயம் எழுதிய நன்மைக்கு அவனியாபுர

310. ம் சமயக் கணக்குப் பிள்ளை அரிகர புத்திரன் எழுதின பட்டயத்தின்படி ராயப்பாசாரி மகன்

311. வசந்தராயன் கையி எழுத்து உ

# 25. கருத்தட்டாங்குடி சமணக் கோயில் கல்வெட்டுகள்

மா. பாவனி,
தஞ்சாவூர்

**25:1**

**இடம் :** *தஞ்சாவூர் மாவட்டம், தஞ்சாவூர் வட்டம் கருந்தாட்டாங்குடி உள்ள சமணக் கோயில் நுழைவு வாயிலின் வலப்பக்கம் மற்றும் கோயிலின் உட்புறச் சுவரின் கிழக்கு, வடக்கு சன்னதி சுவர்*

**காலம் :** *விபவ ஆண்டு [1868]*

**செய்தி :** *முதல் பகுதியும் இறுதிப் பகுதியும் வடமொழியில் கிரந்த எழுத்தில் உள்ளது. தமிழ்ப் பகுதி மட்டும் கீழே கொடுக்கப்பட்டுள்ளது மந்தாரடி தீர்த்தேசுவர ஸ்வாமி கோயிலுக்குத் தஞ்சாவூரைச் சேர்ந்த இராமஸ்வாமி முதலியார் பதினாறு கால் மண்டபம், கோபுரம், மதிள்கள், பிரகாரம் தளவரிசை போன்றவற்றை ஏற்படுத்தியது பற்றிக் கூறுகிறது. சில யக்ஷி சிலைகளும் குறிப்பிடப்படுகின்றன.*

1. *……………… மந்தாரடி ஸ்ரீ மதா$_3$தி$_3$ தீர்த்தே$_2$ச்$_0$ச ஸ்வாமி ஸந்நிதௌ$_2$ தஞ்சாவூர் கோபால முதலியார் பேரனும் ஆதியப்ப முதலியார் புத்ரனுமாகிய இராமஸ்வாமி முதலியாரால் செய்த பதினாறுகால் மண்டபம் ப்$_3$ரஹ்மயக்ஷா ஜ்வாலிநி கூஷ்மாண்டி$_3$ ஸப$_3$லி ஸஹிதம் கீழைவாசல் கோ$_3$புரம் மேலைவாசல் கோ$_3$புரம் மட$_3$ப$_3$ளி [மு]நிவாஸ ஸஹிதம் நாலு பக்கம் மதிள் ப்ராகாரமுந் தளவரிசை ஸ்ரீ கோ$_3$புர கபாடத்வயஞ்ச சிரஜ்ஜீயாத் ஸ்வஸ்தி…*

**25:2**

**இடம் :** *கோயில் கிழக்குச் சுவர் உட்புறம்*

**காலம் :** *1849*

**செய்தி :** தஞ்சாவூர் கோபால முதலியார் ஆதியப்ப முதலியார் ஆகிய இருவர் மந்தாரடி ஸ்ரீ ஆதிநாத சுவாமி சன்னதியில் கலச ஸ்தாபன மண்டபம் அமைத்துக் கொடுத்துள்ளனர்.

1. ஸ்ரீ ஜிநாயநமி
   சாலிய வாகனம் 1771 சவு மிவ ஹூ
2. ஆனி மாதம் முதல் மந்தாரடி
3. ஸ்ரீ ஆதிநாத சுவாமி ச
4. ன்னதியில் கலச ஸ்தாப
5. ன மண்டபம் தஞ்சாவூர்
6. கோபால முதலியார்
7. ஆதியப்ப முதலியார்
8. உபயம் சதாசேர்வை

**25:3**

**இடம் :** *கோயில் வடக்குச் சுவரின் உட்புறம்.*

**காலம் :** *கலியாண்டு 4950 சவுமிய [1849]*

**செய்தி :** *தஞ்சாவூர் அனந்த விஜய முதலியார் புத்திரன் அப்பு முதலியார் குமாரன்நாகப்ப முதலியார் மந்தாரடி ஸ்ரீ ஆதிசுர சுவாமி சன்னதியில் மகா மண்டபம் அமைத்த துடன், அனந்தநாதசுவாமி கலசதாபனம் செய்வதற்கு 108 சொம்பு, 5 குடம் முதலியன கொடையாக வழங்கியமை.*

1. கலி 4950 சவுமிய ஹூ அர்ப்பாசி மீ மந்தாரடி ஸ்ரீ ஆ
2. திஸகுர சுவாமி சன்னதியில் மகா மண்டபம் அனந்த
3. னாத சுவாமி கலசஸ்தாபன சொம்பு 108 குடம் 5 குத்து
4. விளக்கு 5 தட்டு 11 அபிஷேகம் பண்ணுகிர சிம்மா
5. சன கல்லு பெலிபீடம் உள்பட தஞ்ச நகரம் அனந்த விஜய
6. முதலியார் புத்திரன் அப்பு முதலியார் குமாரன் நாகப்
7. ப முதலி உபையம்.

# 26. பூந்துறை சிம்மாசன கல்வெட்டு

ரா. கார்த்திக் ராஜா,
தஞ்சாவூர்

**இடம் :** *ஈரோடு மாவட்டம் மொடக்குறிச்சி ஒன்றியம் பூந்துறை [அவல் பூந்துறை] ஊரின் நடுப்பகுதியில் ஈரோடு பழனி [அறச்சலூர் வழியாக] நெடுஞ்சாலையின் மேல்பகுதியில் உள்ள சிம்மாசன மேடையின் கல்சுவரின் ஒரு பக்கத்தில்.*

**காலம் :** *16ஆம் நூற்றாண்டு*

**குறிப்பு :** *16 அடி நீளமும் 16 அடி அகலமும் உள்ள சதுரமான கல் மேடையின் மேற்கு பக்கத்து கல் சுவரில் புடைப்பாக செதுக்கப்பட்ட இரு வீரர்களின் உருவச் சிலைகளுக்கு இடையே உள்ளது இக்கல்வெட்டு. இரு வீரர்களின் சிலைகளும் ஒரு கையில் பெரிய வாள் போன்ற ஆயுதம் பிடித்தும் மறு கையில் சிறு கட்டாரி போன்று குத்துவாள் பிடித்த படியும் அமைக்கப்பட்டுள்ளன. தலையில் இடது பக்கமாக முடித்து கட்டப்பட்ட கொண்டையும் மார்பில் பல வித ஆபரணங்கள் அணிந்தவாறும் காணப்படுகிறது. இக்கல்வெட்டுக்கு 10 அடி இடைவெளியில் குதிரையில் வாளேந்திய போர் வீரனை கீழே நின்றவாறு வீரன் ஒருவன் வாள் ஏந்தி எதிர்த்து நிற்கும்படியான புடைப்புச் சிற்பம் ஒன்றும் உள்ளது. முப்பாட்டு ரங்கப்பனாயக்கன் பட்டக்காரன் பெரியண்ணாயக்கன் பெயர் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது*

1. முப்பாட்டு ரங்க
2. ப்பனாயக்கன்
3. பட்டக்காரன்
4. பெரியண்ணாய
5. க்கன்

# 27. கேசவன்புதூர் கல்வெட்டுகள்

செந்தீ நடராசன்,
நாகர்கோவில்

27:1

**இடம் :** *குமரி மாவட்டம், தோவாளை வட்டம், கேசவன்புதூர், அரிகரவினாயகர் கோவில் முன்புறமுள்ள கற்பலகையின் மூன்று பக்கமுள்ள இரு கல்வெட்டுகள், கற்பலகையின் அளவு 70 செ.மீ. நீளம், 20 செ.மீ. அகலம், 110 செ.மீ. உயரம்.*

**காலம் :** *சகம் 1572, கொல்லம் 831, ஆனி மாதம் 22ந் தேதி [கி.பி. 1665?]*

**செய்தி :** *கல்வெட்டில் இவ்வூர் நாஞ்சில் நாட்டு அழகியபாண்டியபுரம் புதுவூர் என வழங்குகிறது. இங்குள்ள நயினார் அரிகா வினாயகர் கோவிலுக்கு ஆரியக்கரையில் வசித்த பரதேசிகளில் மாதவப்பட்டர் என்பவர் நமக்கார பூசைக்கு அளித்த நிவந்தம் குறித்து குறிப்பிடுகிறது.*

**தென்புறம்**

1. சகாத்தம் 1572 ன் மேல் செல்லா நி
2. ன்ற கொல்லம் 831 ஆமாண்டு ஆனிமாதம் 20-ந்தேதி பூ
3. றுவ பக்கிஷத்து துதிகையும் குருவாரமும்
4. பூசமும் சுபயோகமும் சுபகரணமும் இ
5. ன்னாளால் நாஞ்சினாட்டு அழகியபாண்
6. டியபுரம் புதுவூரில் நயினார் அரிகரவினா
7. யகன் கோவிலில் ஆரியக்கரை வதிக்கும்
8. பரதேசிகளில் மாதவபட்டர் கணக்காக நா
9. ள் 1 க்கு ஒரு நமக்காரம் கற்பிக்கையில் நா
10. ள் 1 க்கு அரிசி நாழி 0.75 ஆக மாதம் 1 க்கு 21, 5 உரி
11. க்கு கூலி உள்பட நெல் 10 மரக்கால் ம் கறிகாய் மாம்பு வருடம் 1க்கு

12. 20 உரி ஆகவும் நெல் 17 நாழியும் மாதம் 1 க்கு தேன்
13. காய் 5 க்கு நெல் 7 நாழி உரியும் மிளகு செவிடு 2 இஞ்சிக்கு நெல் 5 நாழியும்
14. உப்பு 0.75 உரி விறகும் இலையும் நெல் 9 நாழி நறு நெய்
15. க்கு நெல் 9 நாழி மாதம் 1க்கு நெல் 15 ஆக வருடம் 1 க்கு சி
16. லவு கோட்டை எட்டே முக்கால் நா
17. னாழிக்கு பிள்ளையார் பண்டாரத்தில் கு
18. டுத்த பணம் 500 க்கும் 101.75 ஆக வருடத்துக்கு உபையம்
19. கோட்டை 8.75 நானாழியும் இந்தப்படி
20. யே திருப்படி உபயம் நடத்திக் கொண்டு
21. பூசையில்க் கூட கூட்டி மேல்படி மடத்தில் சி
22. பண்டாரக் காரியஞ் செய்வார்கள் இந்த
23. ப்படியே அமுதுபடியும் வெஞ்சனமும் கு
24. டுத்து ஆதிசெந்திரதாரமே சந்ததி பிற
25. வேசமே நடத்திப் போதுவாராகவும் இந்த
26. ப்படி நடத்தி போதுமிடத்தில் இதுக்கு
27. அகுதம் செய்தபேர்கள் கெங்கைக் க
28. ரையில் காராம் பசுவை கொன்ற
29. தோஷத்திலே போவாராகவும்

## 27:2

**இடம் :** *மேலது*

**காலம் :** *சகாத்தம் 1572[?] கொல்லம் 831 கார்த்திகை மாதம் 19-ந்தேதி [கி.பி. 1665]*

**செய்தி :** *கல்வெட்டில் சகாத்தம் ஆண்டு தவறாகக் குறிக்கப்பட்டுள்ளது ஊரின் பெயர் அழகியபாண்டியபுரம் கேசவன்புதூர் எனப்படுகிறது. நயினார் அரிகர வினாயகர் கோவிலுக்கு ஆரியக்கரையில் வசித்த பரதேசிகளில் கெணேசர் மாதவப்பட்டர் என்பவர் துவாதசி தோறும் நமக்கார ஊட்டு 12 பேருக்கு அளிக்க நிவந்தமாக நிலத்தை சோர ஒற்றியாகக் கொண்டு*

*கொடுத்தார். வரி 1213இல் 'கலமறுக்கையில்' என்ற தொடர் குறிப்பிடற்குரியது.*

வடபுறம்

1. சகாத்தம் 1572
2. ன் மேல் செல்லா நின்ற கொ
3. ல்லம் 831 ஆமாண்டு காத்திகை மா
4. சம் 19ந் தேதி பூறுவபட்சத்து துதி
5. கயும் சோமவாரமும் மூலம்
6. சூலை யோகமும் புலிக்கரணமும்மே
7. இன்னாளால் நாஞ்சிநாட்டு அழகிய பா
8. ண்டியபுரம் கேசவன்புதுவூரில் நயினார் அ
9. ரிகர வினாயகன் கோவிலில் ஆரியக்கரை வர்
10. த்திக்கும் பரதேசிகளில் கெணேசர் மாதவபட்டர்
11. கணக்காக இவ்வருடம் முதல் துவாதெசி ஒன்றுக்கு ந
12. மக்காரம் ஊட்டு பன்னிரண்டு பேருக்குக் கலம
13. றுக்கையில் மேல்படி வகைக்கு வருடம் 1 க்கு பலவெஞ்சனம் உள்
14. பட ஆண்டு 1 க்குள கோட்டை 12 க்கு விட்டுக்குடுத்த நிலமாவது மேல்படி
15. நாட்டு அழகிய பாண்டியபுரம் வடபற்று வடவாற்
16. றுப் பற்றுக்கு கூடு வயல் உள்ளிட்டத்தில் உண்ணியூ
17. ர் கொற்றவன் பாறைப் பற்றில் ஸ்ரீபராங்குச தீர்த்த
18. ரோடும் சோர ஒற்றியாக பணம் 805 க்கு ஒற்றிகொண்ட
19. தடி 3 க்கு [. . . நில அளவைகள் . . . . .
20. . . . . . . . . . ]க்கு எல்கையாவது கீள்
21. எல்கை ஆண்டான் அழகிய நம்பி நிலத்துக்கு மேற்குத் தென்
22. எல்கை செட்டு திருக்குருகன் நிலத்துக்கு வடக்கு மேல்
23. எல்கை தென்வடல்ப் பெருங்காலுக்கு கிளக்கு வட
24. எல்கை செட்டு திருநெல்வேலி பெருமாள் நிலத்துக்கு
25. தெற்கு ஆக இவ்விடம் இந்த பெருநான்கெல்கைக்குள்ப
26. ட்ட தடி 3 க்கு . . . . . இன்னாள் முதல் சோர ஒ
27. ற்றியாக . . . . கடனயும் உளாமா . . . .

## மேற்குப்புறம்

28. சில்வரிப் பெருவரியு
29. ம் இறுத்து கைய்யாண்
30. டு கொண்டு துவாதெ
31. சி தோறும் பன்னிர
32. ண்டு பேருக்கு ஆசெ
33. ந்திரதாரமே சந்த
34. தி பிறவேசமே ஸ்ரீ
35. பராங்குச தீர்தர்
36. புதுவூர் மடத்தில்
37. நின்றும் நடத்திக்
38. கொண்டு வருவராக
39. வும் இந்த தன்மத்து
40. க்கு அகிதம் பண்ணி
41. ன பேரா் கெங்கைக்
42. கரையிலே கராம் ப
43. சுவைக் கொன்ற தோ
44. ழத்திலே போகக்
45. கடவராகவும் இது பரி
46. பாலனமாக நடத்தின
47. பேரர் அச்சுவமேத யா
48. கம் பண்ணின பலம்
49. பெறுவராகவும்.

# 28. அம்மூர் கல்வெட்டு

**சி. வீரராகவன்,**
**விழுப்புரம்**

**இடம் :** *வேலூர் மாவட்டம், வாலாசா வட்டம், வாலாசாபேட்டைக்கு வடக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ள அம்மூர். திரௌபதி அம்மன் கோயில் முன் பரப்பட்ட கற்பலகையில். இக்கற்பலகை திரௌபதி அம்மன் கோயில் அருகே அமைந்துள்ள அங்காளம்மன் கோயில் நிலை காலுக்கு மேல்கல்லாக பயன்பாட்டிலிருந்து வந்தது என ஊரவர் கூறினார்கள் தற்போது மக்கள் பார்வைக்காக கல்லெழுத்து கற்பலகை ஐராவதீசுவரர் கோயிலில் நட்டு வைக்கப்பட்டுள்ளது.*

**காலம் :** *சுமார் 12ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *ஐராதீஸ்வரர் கோயில் அழகிய பல்லவன் விக்கிரம சோழச் சம்புவரான் என்பவரால் கட்டப்பட்டது.*

**கல்வெட்டுப் பாடம்**

1. ஸ்வஸ்திஸ்ரீ ஐம்
2. மூர் ஆள்ளுடைய
3. ார் அய்ராதீ
4. ச்சுர முடையான்
5. கோயில் அழகிய
6. பல்லவன் விக்
7. கிரம சோழச்சம்பு
8. வராயன் தன்ம[ம்].

# 29. திருவந்திபுரம் கல்வெட்டுகள்

ந. வேங்கடேசன்,
வில்லியனூர்

## 29:1

**இடம் :** *விழுப்புரம் மாவட்டம், கடலூர் வட்டம், திருவந்திபுரம், தேவநாயகப் பெருமாள் கோயில், மகர மண்டபத்தின் கிழக்குச் சுவர்*

**காலம் :** *முதல் குலோத்துங்க சோழன் - ஆட்சியாண்டு 49 [1119]*

**செய்தி :** *பாகூரைச் சார்ந்த திருவாண்டாள். திருவயிந்திரபுரத்து இறைவனுக்கு விளக்கெரிக்க ஆடுகள் கொடை.*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு 49
2. வது கங்கை கொண்ட சோழ வளநாட்டு வாகூர் நாட்டு வாகூராந அழகி
3. ய சோழச் சதுப்பேதிமங்கலத்து கொமபுறுத்து அழகிய மணவாளக் கிரமவித்தன் ப்3ராஹ்ம
4. ணி திருவாண்டாள் விருதராய பயங்கர வளநாட்டு மேற்கா நாட்டு திருவயிந்திரபுரத்தாழ்
5. வார்க்கு வைத்த ஸந்தி திருவிளக் கொன்றுக்கு விட்ட ஆடு பன்னிரண்டு இவ்வாடு பன்நிரண்
6. டும் கைக்கொண்டு சாவா மூவாப் பேராடாகக் கொண்டு ஆழ்வார் தாரா நாழியாலெய் திங்கள் நாழி நெய்யால்
7. சந்திரா தித்தவற் திருவிளக்கு நெய்ட்டக் கடவ மன்றாடி பிச்சன் சீராமனான சோ
8. ழக்கோன் இது சிவைஷ்ணவ ரகைஷ

## 29:2

**இடம் :** *விழுப்புரம், கடலூர், திருவந்திபுரம், தேவநாயகப் பெருமாள் கோயில் மகாமண்டபத்தின் கிழக்குச் சுவர்*

**காலம் :** *விக்கிரம சோழன், ஆட்சியாண்டு 3 [1121]*

**செய்தி :** *பாகூரைச் சார்ந்த நம்பிச் சோரமாசி திருவயிந்திரபுரத்து இறைவனுக்கு சந்தி விளக்கெரிக்க பசுக்கொடை.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ விக்ரசோழ தேவற்கு யாண்டு 3ஆவது வாகூராக அழகிய சோழச் சரு

2 ப்பேதிமங்கலத்து ப்ரயாகை நம்பிச்சோமாசி திருவயிந்திரபுரத் தாழ்வாற்கு

3 வைத்த சந்தி திருவிளக்கு ஒன்றுக்கு விட்ட பசு 4 இவை கைகொண்டு சந்திராதி

4. த்தவற்

# 30. வேலூர் மாவட்டக் கல்வெட்டுகள்

கி. குமார்,
சென்னை

**30:1**

**இடம் :** *வேலூர் மாவட்டம் வேலூர் வட்டம், பென்னாத்தூர் சிவன் கோயிலில் தனியாக நடப்பட்டுள்ள கற்பலகை.*

**காலம் :** *10.031908*

**செய்தி :** *பென்னாத்தூரைச் சேர்ந்த தருமலிங்க முதலியாரின் மனைவி குள்ளம்மாள் என்பவர் ஸ்ரீ நமனாதீஸ்வரர் சுவாமிக்கு பூசைகள் செய்வதற்காக நிலம் கொடையாக அளிக்கப்பட்டது பற்றி தெரிவிக்கப்பட்டுள்ளது.*

1. பென்னாத்தூரம் தற்ம
2. லிங்கமுதலியார் பாரியாள்குள்
3. ளம்மாள் எழிதிவைய்த்த சா
4. சனம் தற்மகற்த்தாவான மள்
5. ள ஸ்ரீ பாலசந்திர முதலி பேருக்கு
6. ஸ்ரீ நமனாதீஸ்வரர் சுவாமியார் நை
7. வேத்திய கைங்கரியத்திற்காக வெச்ச
8. 13 ச.நெ. தெரு 9 செ நிலமும் கிணறும்
9. தானமாய் பத்திறம் எழுதிகுடுத்திரு
10. க்கு நான் இதில் கண்டபடி அடுத்து
11. வரும் தற்மகற்த்தாக்கள் அநைவ
12. ரும் படியை சுவாமியாருக்கு தவி
13. ருதலின்றி நைவேதியம் நடத்தி
14. கொண்டு வற வேனுமாய் கே
15. ட்டு கொள்ளுகிரேன்
16. இப்படிக்கு

அம்மாள் குள்ளம்மாள்

10.3.1908

## 30:2

**இடம் :** *வேலூர் மாவட்டம், காட்பாடி வட்டம், மேல்காவனூர் ஊரின் நடுவில் உள்ள சிதிலமடைந்த பெருமாள் கோயிலின் மொட்டை கோபுரத்தின் உட்புறச் சுவரில் காணப்படுகிறது*

**காலம் :** *விஜயநகர காலம் [கி.பி. 16ஆம் நூற்றாண்டு]*

**செய்தி :** *கோபுரம் கட்டியமை*

1. தென் பிரும[ம்]
2. பன்நிநவன்
3. நெடுங்குன்ற
4. ம் ஆளுங்கனத்தான்
5. சித்தன் திருசெ[ல்]வ[ன்]

## 30:3

**இடம் :** *வேலூர் மாவட்டம், காட்பாடி வட்டம், மேல்காவனூர் கைலாசநாதர் கோயிலுக்கு வடபகுதியிலுள்ள காவினாட்சம்மன் கோயிலின் கிழக்குப்புற சுற்றுச்சுவரின் வெளிப்புறத்தில் புத்தர் சிற்பத்திற்கு அருகே உள்ளது.*

**காலம் :** *வேலூர் லிங்கம நாயக்கர் காலம் [கி.பி. 16ஆம் நூற்றாண்டு]*

**செய்தி :** *மடம் நிறுவியமை.*

1. தாய பெருமாள் திருவினையா மடம்
2. லிங்கமனாயக்கர் உபயம்

## 30:4

**இடம் :** *காஞ்சிபுரம் மாவட்டம் காஞ்சிபுரம் வட்டம், ஒட்டிவாக்கம் ஏரிக்கரையில் உள்ள சிதிலமடைந்த சிவன் கோயிலின் நுழைவு வாயிலுக்கருகே கீழ்புறச் சுவரில் உள்ளது.*

காலம் : *17ஆம் நூற்றாண்டு]*

செய்தி : *சாமி கோயில் கட்டியமை.*

1. ஏ விளம்பி வருஷம் சித்திரை மீ
2. விருப்புராசம்சூபட்டை ஆயிரவர்
3. சுவிநகரத்தயி[ட்]ட உபயம்
4. சாமி கொவில்

**30:5**

இடம் : *ராஜம்பேட்டை ஊருக்கு மேற்கே காஞ்சிபுரம் சாலையின் வடபகுதியில் உள்ள மண்டபத்தின் கூரையிலும் மேற்குச் சுவரின் மையப் பகுதியிலும்*

காலம் : *1777 தை மாதம் 24-ம் நாள்*

செய்தி : *அகரம்தாங்கியிலுள்ள இம்மண்டபத்தினை தித்தா செட்டி மற்றும் முத்தாசெட்டி ஆகியோர் கட்டிக் கொடுத்தனர் என தெரிவிக்கப்பட்டுள்ளது இக்கல்வெட்டின் வலது புறத்தில் ஆண் மற்றும் பெண்ணின் உருவங்கள் மிக அழகாக செதுக்கப்பட்டுள்ளன இவ்வுருவங்கள் இம்மண்டபத்தைக் கட்டிய செட்டியார் மற்றும் அவரின் மனைவியின் உருவங்களாக இருக்கலாம்.*

1. உ அகரம் தாங்கி செ
2. உ விக்கினேஸ்பரர் துணை
3. சாலிவாகன சகாப்தம்
4. 1699 மேல் செ
5. ல்லாநின்ற ஏ விளம்பி ஹு
6. தையி மீ 24 தித்தாசெ
7. ட்டி முத்தா செட்டி தற்மம் ப
8. ரிபாலனம் சுபமஸ்த்து

**30:6**

இடம் : *ராஜம்பேட்டை ஊருக்கு மேற்கே சாலை ஓரத்தில் நடப்பட்டுள்ள கற்பலகையில் உள்ளது.*

**காலம் :** *சறுவசித்தி வருஷம், வைகாசி மாதம், 22ம் நாள் [17ஆம் நூற்றாண்டு]*

**செய்தி :** குளம் வெட்டியமை.

1. உ
2. சறுவசித்தி ஸ்ரீ
3. வையாசி மீ" உ
4. 12 அகரம்
5. தாங்கி தித்தா
6. செட்டி முத்த
7. ாசெட்டி தற்
8. மம் பரிபாலநம்

# 31. வழுதிலம்பட்டு கல்வெட்டு

சீ. செல்வக்குமார்,
வீ. முத்துக்குமார்,
புதுச்சேரி

**இடம் :** *கடலூர் மாவட்டம், கடலூர் வட்டம், வழுதிலம்பட்டு அம்மன் கோவில் முன் நடப்பட்டுள்ள தூண்*

**காலம் :** *தஞ்சாவூர் நாயக்கர், செய ஆண்டு [1594]*

**குறிப்பு:** *இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் அய்யன் கோவிந்தப்பய்யன் தஞ்சாவூர் நாயக்கர், அச்சுதப்ப நாயக்கர் மற்றும் இரகுநாத நாயக்கர் காலத்தில் அமைச்சராக இருந்தவர். இவரது சிறந்த நிர்வாகத்தின் காரணமாக இன்றும் சோழ மண்டலத்தில் இவர் பெயரில் பல ஊர்கள் கோவிந்தபுரம், கோவிந்தக்குடி மற்றும் அய்யம்பேட்டை போன்ற ஊர்களும், தஞ்சாவூரில் அய்யன்கடை மற்றும் கும்பகோணத்தில் யாகசாலை என்ற தெருவும் உள்ளன. இக்கல்வெட்டு கோவிந்தப்பய்யன் அவர்கள் புண்ணியமாக கயிலப்ப முதலியார்மகன் உள்ளூர்ப்பேட்டையில் புதிதாகக் குடியேறுபவர்களுக்கு சில வரிச்சலுகைகள் கொடுத்தமை பற்றியது.*

1. செய வருஷம் அற்பசியும் ...
2. குரு வாரமும் மேல்னாள் பூராட..................
3. ப ... டங் கொண்டா பட்டில் உள் கிடை....
4. கயிலப்ப முதலியார் புத்திரம் சிதம் ..........ள்
5. பேட்டைக்கு அய்யன் கோவிந்தப் [பய்யன்]
6. அவர்கள் புண்ணியமாக கல்வெ[ட்டின]
7. வாசகம் அந்த ஊரிலே குடி ஏறும்யிடத்தில்
8. பிறவூர் பிறக்கு அரிசை கொள்ளக் கடவோம்
9. மாகவும் ஆளவுமஞ்சி சறுவமானியமாக நட
10. த்தக் கடவோம்மாகவும் வருகறகு[டி]யள் இராத்திரி

11. யிலே வரவும் போறகுடி பட்டப்பகலே போகவும்

12. சந்தராதித்தை வரையும் வினை என்று

13. சொல்லாமல் இருக்கக் கடவோமாகவும்

14. அந்தப் பேட்டைக் குடியைப்பிணைக்கொண்[ட]வன்

15. பெண்டாட்டியை அந்த ஊர் வெட்டியான் ஒழ்ப்பான்

16. கடவோமாகவும் இந்தப்படிக்கு கூலியாள் உள்

18. படத் திருடினவன் உள்பட வந்து சுகத்திலே இ[ரு]க்கவும்

19. இந்தப்படிக்கு நடத்தாதவன் கெங்கைகரை

20. யிலே காரம் பசுவை கொன்ற பாவத்திலே

21. போகக்கடவோமாகவும்

22. கயிலப்பர்

23. தலையாரி வரி சறுவமானியமாக ஆக நடத்தக்கடவோம்

24. ஆகவும்.

# 32. இலங்கை முன்னேஸ்வரம் நடராஜர் மடம் கல்வெட்டு மற்றும் விளக்குப் பொறிப்பு

சு. இராஜகோபால்,
சென்னை

**32:1**

**இடம் :** *இலங்கை வடமேற்கு மாகாணம், புத்தளம் மாவட்டம் சிலாவ் (Chilaw) அடுத்துள்ள முன்னேஸ்வரம் கோயில் சாலை எதிர்ப்புறம் உள்ள மடம்.*

**காலம் :** *சோபகிருது வருடம் கார்த்திகை மாதம் 11ஆம் தேதி 26.11.1903.*

**செய்தி :** *ஸ்ரீ நடராஜர் திருமடம் திருப்பணி பற்றியது.*

**கல்வெட்டு :**

1. உ
2. சிவமயம்
3. வடிவழகியம்மை துணை
4. கொழும்பார் ஸ்ரீ நடராஜர் திருமடம்
5. திருப்பணி இயற்றிய காலம்
6. 1903 ௵ நவம்பர் *மீ* 26தீக்கு சரியான
7. சோபகிருது ௵ கார்த்திகை *மீ* 11 தீ
8. திருப்பதி செய்வித்தோர்கள்
9. ஆ. நாகநாதர்
10. சி. கதிர்வேற் பிள்ளை
11. ம. சிதம்பரம் பிள்ளை

**குறிப்பு :** *கல்வெட்டில் உள்ள திரு. சி கதிர்வேற் பிள்ளை திருவனந்தபுரத்திலிருந்து கொழும்பிற்கு குடிபெயர்ந்த சிவநாத பிள்ளையின் மகனாக இருக்கலாம் என அவரது மகள் வழிப் பேரன் திரு ஸ்ரீஹரி கருதுகிறார்.*

## 32:2

**இடம் :** *இலங்கை வடமேற்கு மாகாணம், புத்தளம் மாவட்டம் சிலாவ் [ஏஉாடையற] அடுத்துள்ள முன்னேஸ்வரம் கோயில் நிலை விளக்குகள் [நாலரை அடி உயரம் உள்ளவை]*

**காலம் :** *கி.பி. 1899*

**கல்வெட்டு**

1. உ 1899 ஆ விகாரி வரு ஆவணி *மீ* 3 உ வெள்ளிக்கிழமை கொளும்பு தட்டாரத் தெருவு தா. கதிர்வேலு பண்டாரம் யாசகம் செய்து முன்னேஸ்பரம் வடிவளகி அம்மனுக்கு உபயம் [சேர்] 120

# 33. சூரைக்குடி செக்குக் கல்வெட்டு

சு. இராஜகோபால்,
சென்னை

**இடம் :** *சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம், சூரைக்குடி ஒற்றைத் தூண் பிள்ளையார் கோயில் அருகில் உள்ள கல் செக்கு.*

**காலம் :** *நன்தன [1832]*

**செய்தி :** *செக்கு செய்து வைத்தமை. [கல்லால் உயரமாகச் செய்யப்பட்ட செக்கு இது]*

**கல்வெட்டு**

1. னந்தன ௵
2. ஆவணி மீ 15உ
3. உடையப்ப தேவர்
4. குமாரந் ராமு
5. சேருவை தாறாள
6. உபயம்

# 34. கோயில் விளக்கு மற்றும் மணிகளில் நன்கொடைக் குறிப்புகள்

சு. இராஜகோபால்,
சென்னை

34:1

இடம் : சிவகங்கை மாவட்டம் காரைக்குடி வட்டம் கோட்டையூர் - வேலங்குடி முட்டாஊரணி காளி - கருப்பர் கோயிலில் காளிமுன் உள்ள இரு நிலை விளக்குகள் [5 அடி உயரம்].

காலம் : 19ஆம் நூற்றாண்டுத் தொடக்கம்

செய்தி : விளக்கு வைத்தமை.

1. உ வேலங்குடி கருப்பற் கோவிலுக்கு சிறுயவல் பெ.அ.ராம. விளக்கு உபயம்

34:2

இடம் : சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர் வட்டம் துலையானூர் பெரிய கருப்பணசாமி கோயில் மணி

காலம் : 1922





செய்தி : தொலையானூரில் உள்ள பெரிய கருப்பணசாமிக்கு புதுவயல் என்ற ஊரைச் சோந்த சித. [பெரியணன்] என்பவர் உபயமாக மணி செய்து கொடுத்த செய்தி. இம்மணி 1992ல் B.V.G.Bochum என்ற நிறுவனத்தில் வார்க்கப்பட்டது. 19ஆம் நூற்றாண்டிலிருந்து இரும்பு மற்றும் பிற உலோக வார்ப்புத் தொழில்களில் ஜெர்மனி நாடு முன்னிலை வகித்தது. 20ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் கப்பல் போக்குவரத்து மற்றும் தரகர்களின் உதவி எளிதாக இருந்தமையால் தாங்கள் விரும்பும் வாசகங்களை மணி வார்ப்பின் போதே சேர்த்துச் செய்வது இயல்பாக இருந்தமையை இம்மணியில் உள்ள வார்ப்பு எழுத்துகள் எளிதாகக் காட்டுகின்றன.

1. B.V.G. Bochum. 1992
2. உ
3. சிவமயம்
4. தொலையானூர். பெரிய கருப்பணசுவாமிக்கு
5. புதுவயல் சித.பெரி.
6. உபயம்

# 35. அடிமை விலைப் பிரமாணம்

அ.கா. பெருமாள்,
தஞ்சாவூர்

*கன்னியாகுமரி மாவட்டம் தோவாளை வட்டம் அழகிய பாண்டியபுரம் பெரிய வீட்டு முதலியாரின் வீட்டிலிருந்து 94 ஆவணங்களை கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை 1915-1920ஆம் ஆண்டுகளில் பிரதி செய்திருக்கிறார். இந்த ஓலை ஆவணங்கள் கி.பி. 13ஆம் நூற்றாண்டிலிருந்து 19ஆம் நூற்றாண்டு வரை உள்ள காலங்களில் எழுதப்பட்டவை. இவற்றில் நாஞ்சில் நாட்டுச் சபையின் தீர்மானம், நீதிமன்றத் தீர்வு, திருவிதாங்கூர் அரசர்களின் உத்தரவு, நாயக்கப் படையெடுப்பின் அழிவு, வரிப்பிரித்த போது ஏற்பட்ட கலவரம், சாதிக் கலவரம், அடிமைகள் விற்பனை செய்யப்பட்ட முறை ஆகிய செய்திகள் உள்ளன.*

**ஓலை கிடைத்த இடம்**

*அழகிய பாண்டியபுரம் [இன்றைய கன்னியாகுமரி மாவட்டம்] பெரிய வீட்டு முதலியார் வீடு இதைப் பிரதி செய்தவர் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை [1915-1920]*

**காலம் :** *மலையாள ஆண்டு 675 [கி.பி. 1500]*

**செய்தி :** *ஓலையின் பெயர் : பறை அடிமை விலைப் பிரமாணம். திருக்குறுங்குடி [திருநெல்வேலி மாவட்டம்] தெலுங்குச் செட்டிகளில் அக்கணன் மகன் அக்கணன் என்பவன் நம்பி வடிவழகிய நம்பி என்பவருக்கு பறை அடிமையை விலைக்குக் கொடுத்த நிகழ்ச்சி. பறையர் குலத்துப் பிறந்த வெள்ளாட்டி இளையவள் என்ற பெண்ணை அழகிய பாண்டியபுரம் ஊர் மன்றின் நடுவில் முன் நிறுத்தி இவ்வடிமையைக் கொள்வார் உளரோ எனக் கூற அழகிய நம்பி நான் கொள்வேன் எனச் சொல்லி விலைக்குப் பெறுகிறார். அடிமையின் விலை 25 கலியுகராமன் பணம் அடிமையை விற்றவரே விலை யாவணச் செலவைக் கொடுக்கிறார்.*

1. **கொல்லம் 675ஆம் வருஷம் வைய்காசி மாதம் 19ஆம் தேதி**

அமரபக்சில்சமும் வெள்ளியாட்சையும் பெற்ற கோலத்தினால் செய்த அடிமை விலைப் பிராமணமாவது புறத்தானாட்டு அன்னநல்லூர் வளத்து வாழ்வித்த நம்பி வடிவழகிய நம்பிக்கு

2. நாட்டாற்றுப் போக்கு வைய்குந்த வளநாட்டுத் திருக்குறுங்குடியில் இருக்கும் தெலுங்குச் செட்டிகளில் அக்கணன் மகன் அக்கணனேன் பற அடிமை விலைப் பிரமாணம் எழுதிக் குடுத்த பரிசாவது நான் விலை கொண்டு

3. உடையோனாய் ஆண்டு அனுபவித்துப் போதுகிற வெள்ளாட்டி இளையாளைக் கொள்வார் ருடையாரோ வென்று நான்முற்கூற இவர் பிற்கூறி கொள்வேன்று வருகையால் நாஞ்சி நாட்டு அதிகனூரான அழகிய பாண்டியபுரத்து மன்றி

4. வெற்றி நடுவர் முன்பாக எம்மில்லிசைந்து விலை நிற்செயித்த அன்றாடு வழங்கும் நென்மேனி கலியுக ராமன் பணம் 25 இப்பணம் இருபத்தஞ்சும் விலை யாவண களத்தே காட்டி ஏற்றிகைச் சிலவற்றைக் கொண்டு பொருளைப் பற்றி விலைக்குறவிற்று விலைப்

5. பண்ணிக் குடுத்தேன் அக்கண்ணன் மகன் அக்கண்ணனே வளத்து வாழ்வித்த நம்பி வடிவழகிய நம்பிக்கு இப்பரிசு விற்ற வெள்ளாட்டி இளையவளுக்கு இது ஏவுதனில் ஆவதாகவும் இதுவல்லது வேறுவிலை ஆவணம் செலவாவணப் பொருள்

6. மாவறுதிப் பொருள் செலவோலை காணவும் காட்டவும் கடவதன்றியை ஒருகாலாவது இரு காலாவது முக்காலாவது ஓலைக்குற்றம் எழுத்துக் குற்றம் சொல் குற்றம் பொருள் குற்றம் மற்றும் எக்குற்றமும் குற்றமன்றியை விற்று விலை

7. பிரமாணம் பண்ணிக்குடுத்தேன் அக்கணன் மகன் அக்கணனேன் வளத்து வாழ்வித்த வடிவழகிய நம்பிக்கு இளையாளை இப்படிக்கு அக்கணன் மகன் அக்கணன் தற்குறிக்குத் தற்குறி மாட்டெறிந்தோறும் இப்படிக்கு

8. விலை ஓலை எழுதினேன் திருவனந்தபுரத்து ராசபுரத்துசந்திரன் பிச்சன் எழுத்து

9. அறிவேன் திருவனந்தபுரத்து நீலன்கோதை எழுத்து

# 36. தஞ்சைக் கல்வெட்டுகள்

புலவர் செ. இராசு,
ஈரோடு

## 36:1

**இடம் :** *தஞ்சாவூர் பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோயில் முன்மண்டபம் தரைப் பாவுகல். தஞ்சையில் 1982 - 1983ஆம் ஆண்டுகளில் மராட்டியர் தொடர்பான கல்வெட்டுகள் படி எடுத்தபோது சில கல்வெட்டுகள் மராட்டியர் தொர்பில்லாததும் படி எடுக்கப்பட்டது. அவற்றில் 9 கல்வெட்டுகள் இங்கே அளிக்கப்பட்டுள்ளன. தஞ்சை, சமய, சமூக வரலாற்றுக்கு இவை பெரிதும் பயன்படும்.*

**காலம்:** *1820*

**செய்தி:** *செங்கல்பட்டு எடுத்துச் செட்டியார் கெருட கம்ப மண்டபம் திருவடி கோவில் அமைத்தமை.*

1. ஸ்ரீ பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோ
2. வில் கெருடகம்ப மண்டபம் திருவடி கோவி
3. லும் செங்கல்பட்டிலிருக்கும் முத்து செட்டி
4. யாற் குமாறர் கும்பினி சுபேதாற் பெருமாள்
5. னாயக்கர் தருமம் சதாசேவை சாலிய வாகனம்
6. 1742.

## 36:2

**இடம் :** *தஞ்சாவூர் வெண்ணாற்றங்கரை தஞ்சபூரீசுவரர் கோயில் முன் மண்டபம்*

**காலம்:** *1 868*

**செய்தி:** *மிறாசு பார்ப்பான் காணி நிலத்திலிருந்து வரும் வருமானத்தில் அர்த்தசாம பள்ளி அறை செலவினங்*

களுக்கு அளித்தமை. இந்நிலம் மன்னார் குடி வட்டத்தில் மூவா கோட்டை கிராமத்தில் உள்ளது.

1. ஸ்ரீ தஞ்சபுரீஜுறர்

2. ஆனந்தவல்லியம்மன்

3. ஸாமி சன்னதி வடபுறம்

4. மண்டபத்தில் நூதனமாக

5. அர்த்தஜாம பள்ளி அறை செ

6. யிவித்த உபயம் நிறுப சாலி

7. யவாகனக் காற்தம் 1790

8. கலியப்தம் 4891 பிர

9. பவ வருஷம் வைகாசி மாதம் 3 தேதி

10. கெபறம துவாதசி 2–9.

11. அஸ்த நக்ஷேத்திரம் 12

12. இந்த சுபதினத்தில் கோட்டை

13. வெளிமேட்டு தெற்கு

14. முறை சூழ்ந்த ... கழை

15. த்து கற்பகுழ்ந்து

16. றை கட்டளைக்காக ஜாப்தா படி

17. க்கு பீதாம்பரம் திருவாபற

18. ணம் வெங்கலம் பித்தளை

19. வகைறா சாமான்ங்களையும்

20. பூஜை நைவேத்தியங்களுக்கு

21. மன்னாற்குடி தாலுகா மூவா

22. கோட்டை கிறாமத்தில் என்பே

23. று மிறாசு பாப்பான் காணி

24. நிலத்தில் கீழக்கடையாயி

25. 500 குழி நிலத்தை மேற்படி அம்

26. மன் பேறால் நான் மிறாசு செ

27. ய்திருப்பதால் வாய்தா போ

28. க மீதி ஐவேசு கொண்டு

29. மேற்படி பூஜை நைவேத்தியம் நட
30. த்திக்கொண்டு ஆச்சநிற்க
31. ப்பாயி அனுபவித்து வரு

**36:3**

**இடம் :** *தஞ்சாவூர் நகரம் ஐயன்குளம் மேற்குப் பகுதியில் சுவரில் பதிந்துள்ள கல்*

**காலம்:** *1879. மே மாதம் 30 ஆம் தேதி*

**செய்தி:** *தரும காரியங்களுக்குக் கொடுக்கப்பட்ட உயில் ஐயங்குளம் மேற்குக் கறவயல் ஓங்கார ஈஸ்வரர் கோயில் அமைத்தமை*

1. உ
2. ஸ்வஸ்திஸ்ரீ கலியு
3. காதி 4980 சாலிவாகன
4. சகாப்தம் 1801 பொதுக்கான்னிய வருஷம்
5. வைகாசி மாதம் 18 தேதிக்கு 1879 வருஷம் மே
6. மாதம் 30 தேதி தஞ்சை நகரம் கோட்டைக்கள் மே
7. ல வீதியிலிருக்கும் கோடீசுரார் ஏற்படுத்து
8. ம் சிலாலிகிதம் அடியில் கண்ட தர்மங்
9. களின் பரிபாலனத்திற்காக வருஷத்துக்கு சு
10. மார் 900 கலம் வரும்படியான பூஸ்திதிகள்
11. என்னால் அர்ஜித்து விடப்பட்டிருக்கிற
12. துமன்றி உயில் எழுதி ரிஜிஸ்தர் செ
13. ய்துமிருக்கிறேன் அவைகள் சரிவர நடக்
14. காவிட்டால் தரும சிந்தையுள்ள யாரு
15. ம் பரிகாரம் தேட சுதந்திரமுளர் [1] மேற்படி மே
16. ல வீதி ஐயங்குள மேல்கரையில்
17. நான் பிரதிஷ்டை செய்திருக்கிற ஸ்ரீ
18. ஓங்காரேஸ்வரஸ்வாமிக்கு

19. தினம் 2 காலமும் [2] கொங்கணே
20. ஸ்வரசுவாமி கோயிலில் நான்
21. பிரதிஷ்டை செய்திருக்கிற ஸ்ரீ
22. மீனாக்ஷிகந்தாரேஸ்வாருக்குத் தி
23. னம் 4 காலமும் பூஜை நெய்வே
24. த்தியஞ்செய்து அந்த நெய்வே
25. தியத்தைக் கொண்டு [3] மேற்படி வீதி கோடி
26. சுரர் சந்தில் 19 நெ சத்திரத்
27. தில் தினம் இரவில் 15 பிராம
28. ணாளுக்கு அன்னம் போடுகிறது மேற்படி தர்மத்துக்கா
29. க தில்லஸ்தானத்தில் 3வேலி நிலம் மா 17 தீபாம்பா
30. ன்புரத்தில் 3 வேலி நிலம் சித்தமல்லி
31. கிராமத்தில் 3 வேலி மா 5 கருப்பட்டிபள்ளம்
32. கறோத்திரியம் மா 15 சூரியதோர் கிராமத்தில்
33. சுறோத்திரியம்மா....

**36:4**

**இடம் :** *தஞ்சாவூர் மேல அலங்கம் பத்திரகாளி அம்மன் கோயில் வடக்குச் சுவர்*

**காலம்:** *1881*

**செய்தி:** *அண்ணாமலைபத்தர் பத்ரகாளியம்மன் கோவிலில் கட்டிய சன்னல் வாசப்படி பற்றிய செய்தி.*

1. ஸ்ரீ ராமஜெயம் பத்தரகாளியம்மன் கோ 2. வில் சன்னதி சன்னல் வாசப்படி 3. யும் கீள்பறம் வாசப்படியும் வெ 4. ள்ளக்கல்ப் படியும் மேற்படி தெருவில் 5. யிருக்கும் சின்னிய பத்தர் குமாறன் அ 6. ண்ணாமலைப் பத்தர் உபயம் 7. 1881

**36:5**

**இடம் :** *தஞ்சாவூர் தெற்கு வீதி விசுவநாதசுவாமி கோயில்*

**காலம்:** *30.4.1896*

**செய்தி:** *விஸ்வானாத சுவாமி கோவிலுக்கு வைத்த கொடை பற்றிய செய்தி:*

1. 1896 வருஷம் ஏப்ரல் மாதம் 30 தேதி தஞ்சாவூர் கோட்
2. டை தெக்கு வீதி ஸ்ரீ விஸ்வானாதசுவாமி கோவி
3. ல் சாயராக்ஷை பூஜைக்கு வருஷம் 365 கல நெல் ஐ
4. வேஜிக்கு தஞ்சாவூர் தாலுக்கா கொண்டாந்திட
5. ல் கிராம 29 நெ பட்டா... யூரில் ஏக;...
6. மேன் மேற்படி கிறாமத்தில் மனையெட்டால் ஏக்க...
7. ...நஞ்சை... 85 செண்டு....

**36:6**

**இடம் :** *தஞ்சாவூர் மகர்நோன்புச் சாவடி, சின்ன அரிசிக்காரத் தெரு முருகன் கோயில்*

**காலம்:** *1903*

**செய்தி:** *ஆடக்காற நாராயண பிள்ளை மனைவி வள்ளியம்மை செய்த கொடை.*

1. ஓம் சறவண பவய நமஹா ஓம் 2. தஞ்சை மகறநவமிச் சாவடி சின் 3. ன அரிசிக்காரத் தெருவிலிருக்கும் 4. தஞ்சை பழனி ஆண்டவருக்கு 5. மேற்படி சக்கரைக்குளம் ஒத்த தெருவிலி 6. ருக்கும் ஆடக்காற நாராயண பி 7. ள்ளை பாறியாள் வள்ளியம்மை யாயி 8. செய்த உபயம் 1903 வருஷயம் பிப்ரவ 9. ரி மாதம் 10 தேதிக்குச் சரியான சுபகிருது வருஷம் 10. தை மாதம் 28 தேதி ரூ 100 இந்த ரூபாய் நூறி 11. ன் வட்டியைக் கொண்டு மானேஜிமெ 12. ண்டாற்களாகிய மேற்படி ஒத்த தெருவிலி 13. ருக்கும் நா. சூரப்பிள்ளையும் மேற்படி அரிசி 14. க்காரத் தெருவிலிருக்கும் வா. சுப்பிரம 15. ணிய பிள்ளையும் மற்று தெரு அனைவோர் 16. களும் ஒரு கால பூசை 17. யும் தீபமும் நடத்திவர வள்ளி 18. யம்மையாயியால் குடுக்கப்பட் 19. ட தருமம் மேற்படி குமாரத்தி மருதாயி

**36:7**

**இடம் :** *இக்கோயில் மடப்பள்ளி*

**காலம்:** *20 ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *ரெங்கநாதபிள்ளை உபயம்*

1. ஸ்ரீ ராம ஜெயம்
2. அய்யாசாமி பிள்ளை
3. குமாரரும்
4. பொன்னுசாமி பிள்ளை
5. சகோதரருமான
6. ரெங்கநாத பிள்ளை
7. உபயம்

**36:8**

**இடம் :** *தஞ்சாவூர் மகர்நோன்புச் சாவடி சின்ன அரிசிக்காரத் தெரு கிருஷ்ணர் மடம்*

**காலம்:** *4.6.1908*

**செய்தி:** *அகிலாண்டம்மாள் என்பவர் கட்டிய கிருஷ்ணசாமி மடம்*

1. ஸ்ரீ ராமஜெயம்
2. தஞ்சாவூர் மானம்புச் சாவ
3. டி யாதவாள் தெரு கொ
4. ண்டக்காற நா. வீறப்பிள்
5. ளையின் ஒயில் பிரகாரம்
6. மேற்படியார் பெண்சாதி அகிலா
7. ண்டாம்மாளால் 4.6.1908க்கு
8. சரியான கீலக வருஷம் வைகாசி.
9. மாதம் 25 தேதியில் கட்டப்பட்ட
10. கிஷ்ணசாமி மடம்.

**36:9**

**இடம் :** *தஞ்சாவூர் கோட்டை தெற்கு வீதி காசி விசுவநாதர் கோயில்*

**காலம்:** *27.12.1921*

**செய்தி:** *கந்தசஸ்டி விழா கொண்டாட அளிக்கப்பட்டக்கொடை*

1. கோவில் சுப்பிரமணிய சுவாமிக்கு
2. கந்த ஸஷ்டி கடசி உற்சவ தினம்
3. பிரதி வருஷமும் நடக்கும்படி கோட்டை
4. மானோஜியப்பா வீதி மருதாயி கள்ளப்
5. பெரம்பூரில் நிலம் வாங்கி 20.12.17ல்
6. உயில் எழுதி என்னாலும் என் மகள் பொ
7. ன்னாயியாலும் மேற்படி உபயம் நடத்த தேவஸ்
8. தானம் டிரஸ்டிகளிடம் ஒப்பவிக்கப்பட்
9. டிருக்கிறது என் ஜீவ திசைக்குப் நடத்த
10. டிரஸ்டியார் மேற்படி தர்மத்தை
11. தவறினால் தருமசிந்தையுள்ளவர்கள்
12. கவனித்து மேற்படி தர்மம் நடத்திவிக்கும்படி
13. கேட்டுக் கொள்ளுகிறேன் மருதாயி.

**36:10**

**இடம் :** *தெற்கு வீதி காளிகோயில் முன் மண்டபத் தூண்*

**காலம்:** *18 ஆம் நூற்றாண்டு*

**செய்தி:** *காளி தேவி அம்மன் கோயில் திருப்பணி குறித்த செய்தி.*

1. ஸ்ரீமது காளிகாதே
2. வி அம்மன் கோவில்
3. திருப்பணி வேலை மின்
4. கோபுரத்தில் நாகவ
5. ரிமுதல் யாளிவரி கொ
6. டுங்கை மட்டும் மடப்ப

7. ளி உள்படி கையிலா

8. ச வாகனம் றிஷப வா

9. கனம் குதிரை வாகன

10. ம் பெரிச்சாளி வாக

11. னம் மயில் வாகனம்

12. சுப்பிரமணிய ஆசாரி

13. குமாரன் வைத்தி முத்தய

14. ன் ஆசாரி உபயம்.

**36:11**

**இடம் :** *கோயிலின் சேகண்டிகை எனப்படும் எறிமணியில் உள்ள பொறிப்பு*

**காலம்:** *1923*

**செய்தி :** *எறிமணி வைத்தமை.*

1. தஞ்சாவூர் தெற்க்கு ராஜ வீதி
2. ஸ்ரீ காளியம்மைக்கு
3. தங்க வகுப்பு நாட்டாமை
4. சா. வீராசாமி பத்தர் வுபயம் 5.8.23
5. ருத்ரோத்காரி.

# 37. ஐரேனிபுரம் கல்வெட்டு

சொ. சாந்தலிங்கம்,
மதுரை

**இடம் :** *கன்னியாகுமரி மாவட்டம். விளவுங்கோடு வட்டம் குன்னத்தூர் கிராமம். மேலங்கலம் தேசம் ஐரேனிபுரம் - பாவோடு என்னுமிடத்தில வைஷ்ணவி கோயிலில் உள்ள தூணில் நான்கு புறமும் எழுதப்பட்டுள்ளது.*

**காலம்:** *கொல்லம் ஆண்டு 727 1552*

**செய்தி:** *மொழி எழுத்து - தமிழ் மலையாளம் சிறிது கலந்துள்ள எழுத்தனமதி. இன்றைய வைஷ்ணவி கோயில் மிக அண்மைக் காலத்தது கி.பி. 14-15 ஆம் நூற்றாண்டில் இவ்விடத்தில் இருந்த கோயில் ஒன்று முற்றிலும் அழிந்தநிலையில் எஞ்சியுள்ள ஒரு தூணில் இக் கல்வெட்டு உள்ளது. பறளி ஆறு குறிக்கப்படுகிறது. அது இக்கோயில் அருகே சிறுவாய்க்காலாக ஓடுகிறது. நிலங்களை ஒத்திக்கு குடுத்து காசுகளும், நெல்லும் பெற்ற செய்தி கூறப்பட்டுள்ளது.*

**முதல் பக்கம்**

1. ஸ்ரீ கொல்லம் 72
2. 7 தை மீ 25 எட்டு
3. க் கல் ஙெட்டு தம்பிரா
4. ன் சரிக்கல் தம்பிரான் வெ
5. தர தானத்தில்னு ஆதித்
6. தம் கொடுத்த வகை யிவ்
7. பறளி ஆறு போக்கில்
8. இடை... தோட்டம்
9. ...தர் வட்டத்து குடுத்து
10. விலை... ந்தோ

11. ட்டவும் எஞ்சுநிலமு
12. ன்னில் பாதியுஞ் கூலத்
13. து பூராமன்னும் ஆகரம்
14. முன்றின்னு கொடுத்த அம்பு
15. சு எய் அபி வடகறை
16. பத்துலத்தினு கீழ்வ
17. ட மேற்கு வணியம
18. காரானமு...

## இரண்டாம் பக்கம்

19. மேற்படி குளத்து
20. கீழ்வள்ளல் தடி
21. ஒன்று நிலம் 4 பணம்
22. ஒற்றிக்கு குடுத்த அச்சு
23. 10– மேற்படி
24. குலத்தின் கீழ்வள்ள
25. ல்புத்தற்கு குடுத்த அச்சு 5
26. நெல்லு 300 கலத்தினும்
27. விலைத்தரம் 10 அச்சு
28. ஆக வகை அச்சு 15
29. ருங்ஙப்பிலியும் பி
30. ரகாலுகட்ட வயலும்
31. ஆகதடி இரண்டி 10
32. னால் உழவின்னுகு
33. டுத்த அச்சு 100
34. பனயறையில் உ
35. ழவின்னு குடுத்த
36. ரூ 207

## மூன்றாம் பக்கம்

37. மேற்படி குளத்தி

38. ன் கிழ் ஆலறையு

39. ம் வள்ளலும் உழ

40. வின்னு கொடுத்

41. த அச்சு 6 மா

42. ங்கோட்டு கோ

43. ணத்து தான்றிக்கு

44. ளத்தின் கீழ் மண

45. லி நிலம் குறுனி இரு

46. நாழியும் காராமை

47. மேற்படி குளத்தின்

48. கீழ் கிளாவறை கீழ்த்

49. தின் முறி ஒற்றிக்கு குடு

50. த்த அச்சு 15 மேற்ப

51. டிகுளத்தின் கிழ்சி

52. லாநதி கண்டம் ஒ

53. ற்றிக்குகுடுத்தன நெல்லு

54. நந...யஉ....இதது

55. க்கு விலைக்க முறி

56. ... கய

நான்காம் பக்கம்

57. மேற்ப்படி குடுத்த

58. ன் கீழ் வெளறை மே

59. க்கின் முறிஒற்றிக்குத்த

60. நெல்லு கலனே து ய அச

61. சு 40 கீழம்புக் கோட்

62. டுக் குழீயிற் ஒற்றியும்புகச

63. டமும் கொடுத்த [உ] ங்க

64. கலம் அச்சு 45 குழி

65. யறைக்கு உழவெனுகொடு

66. த்த அச்சு 2 நெட்டறை

67. க்கு ஒற்றிக்குகுடுத்த அச்சு

68. 3 மேற்புகலி கோட்டுகோ

69. ணத்திவட்டமு புளிக்க

70. ல்க் கடைத்தின்றும் உ

71. ழுவின்னு கொடுத்த அச்சு

72. 15, வொாற...க

73. டிவு வெ... யரு

74. ப₃த்தஷம் 3 வேதகற்வ]

75. ட்டபள்ளி நாடுகன் கே

76. ரன் இக்கல்லுபெ

77. ட்டிய குமரன் மார்தாண்

78. டாசாரி வள நன்றாக.

# 38. காரியாபட்டி - பிட்டுச் சொக்கநாதர் கோயில் கல்வெட்டுகள்

சொ. சாந்தலிங்கம்,
மதுரை

### 38:1

**இடம் :** *விருதுநகர் மாவட்டம் காரியாபட்டி வட்டம் காரியாபட்டி நகரம் பிட்டுச் சொக்கநாதர் கோயில் கருவறை மேற்குச் சுவர்.*

**காலம்:** *1677*

**செய்தி:** *காரியாபட்டி நகரின் காவல் நிலையத்திற்கு அருகில் அமைந்துள்ள இக்கோயில் மிகவும் எளிமையான கலை வேலைப்பாடுகள் எதுவும் இன்றி பிட்டுச் சொக்கபண்டாரம் என்பவரால் கட்டி முடிக்கப்பட்ட செய்தி கூறப்பட்டுள்ளது.*

1. கலியுகம் 4778 மேல் சகாப்தம் 1599 பிங்கள வருசம் சங்கரானந்த தேசியர் பாதம் பெற்ற சங்கர யோகி.
2. பண்ணின சிவபிறதிட்டை மதுரைப் பூவனனாதபண்டாரங் குமாரர் பிட்டுச் சொக்க பண்டாரம் செய்து முடிச்சது சுவாமி
3. பிட்டுச் சொக்க நாதர் அம்மை சிவயோகநாயகி உ.

### 38:2

**இடம் :** மேற்படிக் கோயில் கருவறை தென்சுவர்

**காலம் :** மேற்படி

**செய்தி :** இக்கோயிலுக்கு உம்பளிகையாகக் கொடுக்கப்பட்ட கிராமங்களின் பெயர்களும் அவற்றில் இருந்து பெறப்படும் நெல் விகிதமும் கூறப்பட்டுள்ளது.

1. சுவாமிக்குச் சிவபுரம் உம்ப

2. ளிகை புளியங்குளம், பல்ல

3. நேந்தல், கற்குறிச்சி, கரிக்

4. குளம் மாத்தால குறுணி.

**38:3**

மேற்படிக் கல்லில் உள்ள பெயர் மட்டும்

1. முத்தளகன்.

# 39. திருவிதாங்கோடு செப்பேடு

இம்மானுவேல்,
நாகர்கோயில்

*திருவிதாங்கோடு மன்னன் ஸ்ரீ வீர இரவி பால் மார்த்தாண்ட வர்மனின் அந்தரங்க ஆலோசகரும்: மெய்க்காப்பாளரும் முதன்மைத் தளபதியும் 108 சிலம்பக் களிரிகளுக்கும் திருமுற்றுப் பண்டாரப் பாளையத்திற்கும் தலைவருமான ஸ்ரீ அனந்தபத்மநாபன் திருவடி தேசம் திருப்பாப்பூர் நாடாருக்கு கொடுத்த 24 செம்புப்பட்டயங்களில் இதுவும் ஒன்று. வட்டெழுத்தில் உள்ள இப்பட்டயத்தை பேராசிரியர் இப்ராகிம் குஞ்சு [கேரளா] அவர்கள்* Times of Marthandavarma (Thesis) *என்ற புத்தகத்தில் பிரசுரித்துள்ளார்கள்*

*சொஸ்தி ஸ்ரீ அருளிச் செய்த சகாப்தம் 1670-ல் மேல் செல்லா நின்ற கொல்லம் தொள்ளாயிரத்து இருபத்து மூன்றாமாண்டு பங்குனி மாதம் இருபத்து நாலு என்ற செவ்வாட்சையும் ரோகிணி நட்சத்திரமும் பூர்வபச்சத்து பஞ்சமியும் ஆயூர் நாம நித்திய யோகமும் சிம்ம கர்ணவும் பெற்ற இந்நாளில் திற்பாப்பூர் கீழ்ப்பேரூர் ஸ்ரீ வீர இரவி பால மாத்தாண்டவர்மராய சிரவாயி மூத்தவராய நாம் கண்ணனூர் தேசத்து தச்சன் விளையில் பிரம்மகுல க்ஷத்திரியன் அனந்தபத்மநாபனுக்கு கரமொழிவாக விட்டுக் கொடுத்த பூமியாவது நீ நம்முடைய உற்ற பெந்துவும் வலம் கைய்யுமாகவே ராப்பகல் ஊணும் உறக்கமும் ஒழுஞ்ஞு நம்முடைய குணதோஷங்களில் பங்குகொண்டும் ஒரு மெய்யாய் நின்று சத்துரு நிக்கிரகத்திலும் படையோட்டங்களுக்கும் மனசறிஞ்ஞு சகாயிச்சும் பலப்பொழுதும் நம்முடைய ஜீவனை ரெட்சிச்சு நடந்து வந்திருந்த மகிமையும் தீரதையையும் அடிஸ்தானமாக்கி நமக்குண்டான அதிரற்ற சந்தோஷத்தினால் கரமொழிவாகவிட்டு கொடுக்கிறேன். வடக்கே பத்மநாபபுரத்தில் பேச்சிப்பாறைக்குத் தொட்டு வடக்கே 8000 தண்ணு நீளமும , 8000 தண்ணு வீதியும் 32000 தண்ணு சுற்றளவும் உள்ள வலிய ஏலாவும் அதனைச் சுற்றிச் சூழ்ந்துள்ள நாலு கரையும் கொண்ட தொடலிக்காட்டுவிளையும் உட்பட்ட 1008000 பறைவித்துப்பாடு கொண்டுள்ளன பூமிக்கு எல்கையாவது, வடக்கு பத்மநாபபுரத்தில்*

சேிப்பாறைக்குத் தொட்டு வடக்கு நாலதிரும் அதிர்த்திக்கல் நாட்டியிட்டுள்ள மண்தாரகத்துக்குள்பட்ட வலிய ஏலாவும் அதனைச்சுற்றிச் சூழ்ந்துள்ள தொடலிக்காட்டுவிளையும் மேல்சொல்லப்பட்ட 1008000 பறைவித்துப்பாடு கொண்டுள்ள பூமி முழுவதும் கரம் ஒழிவாக தானமாக அனுபவிச்சும் இந்த பூமிக்கத்துள்ள நிதி நிஷேப ஜெலதருபாஷாந்த அச்சன்னிய ஆகாமியசித்த சாத்தியமென்று சொல்லப்பட்ட அஷ்டபோகனே ஷைமியங்களுக்கும் யோக்கியாளர்களாக அனுபவிச்சு நடந்து கொள்ளுமாறும் நாம் கொள்ளும் கொள்முறையும் எப்பேர்பட்டதும் ஒழிஞ்சு தந்து ஆசந்திரதாரமே பிறவேசமே கரமொழிவு தானமாகவே அனுபவிச்சு கொள்ளுமாறு செய்க. இது தொள்ளாயிரத்து இருபத்து மூன்றாம் ஆண்டு பங்குனி மாதம் இருபத்து நாலாம் தியதி கல்வித்தமைக்கு கல்குளம் பத்மநாபபுரம் கோட்டைக்கத்து கொட்டாரம் ஸ்தலமாக நாம் இருக்க துல்லியம் துல்லியம் மாறிப்பிடிச்சு துல்லியம் [திரு. ஒப்பு]

# 40. கொடைக்கானலில் புதிய தொல்லியல் இடங்கள்

வெ. யோகேஸ்வரன்,
புதுக்கோட்டை

திண்டுக்கல் மாவட்டம், கொடைக்கானல் வட்டம், வெள்ளப்பாறை [கொடைக்கானலில் இருந்து பெருமாள் மலை வழியாகப் பழனி செல்லும் சாலையில் 16 கி.மீ. தொலைவில்]

இவ்வூரின் பூத நாச்சியம்மன் கோயில் மேற்கு திசையில் 8 கல் திட்டைகள் ஒரு சுற்றுச் சுவருக்குள் உள்ளன. இக்கல்திட்டைப் பாறையின் மீது உருவாக்கப்பட்டு இதைச் சுற்றிலும் செவ்வக வடிவில் கற்சுவர்கள் எழுப்பப்பட்டு, இறுதியில் பெரிய பலகைக் கற்களால் மூடப்பட்டுள்ளன. கல்திட்டைகள் சிதைந்து காணப்படுகின்றன. இதனை உள்ளூர் மக்கள் "பாண்டவர் மெத்தை" எனக் குறிப்பிடுகின்றனர்.

திண்டுக்கல் மாவட்டம், கொடைக்கானல் வட்டம் அஞ்சு வீடு [கொடைக்கானலில் இருந்து 20 கி.மீ தொலைவில்] ஊருக்கு மேற்கு திசையில் மலையின் உச்சியில் இரண்டு கல் திட்டையும் மலையின் அடிவாரத்தில் இரண்டு கல் திட்டையும் காணப்படுகின்றன.

இக்கல்திட்டை பாறையின் மீது கிழக்கு இரண்டு பலகைக் கற்களாலும் மேற்கில் இரண்டு பலகைக் கற்களும் வைத்து பெரிய பலகைக் கற்களால் மூடப்பட்டுள்ளன. இவ்விடத்தை உள்ளூர் மக்கள் வெங்கலப் புறைபேத்து எனக் குறிப்பிடுகின்றனர். கல்திட்டைகளை "பாண்டவர் மெத்தை" எனக் குறிப்பிடு கின்றனர்.

# 41. பையம்பள்ளி - கொத்தைமலை மற்றும் பச்சூர் ஓவியங்கள்

கி. குமார்,
சென்னை

### 41:1 பையபள்ளி

*வேலூர் மாவட்டம், திருப்பத்தூர் வட்டத்தில் நாட்றம்பள்ளிக்கு வடமேற்கே சுமார் 6 கி.மீ. தொலைவில் பையம்பள்ளி என்றும் பைனபள்ளி என்றும் அழைக்கப்படும் சிற்றூர் அமைந்துள்ளது. இவ்வூருக்கு வடக்கே சென்னை - பெங்களூர் தேசிய நெடுஞ்சாலைக்கு வடபகுதியில் தலதாப்பு மலை என்றழைக்கப்படும் மிகப்பெரிய மலை உள்ளது. இம்மலையின் தெற்குச் சரிவில் உள்ள பண்டையக்கால வாழ்விடப் பகுதியில் இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறையைச் சேர்ந்த எஸ்.ஆர். இராவ் அவர்களால் 1964-65 மற்றும் 1967-68 ஆகிய ஆண்டுகளில் அகழாய்வுகள் மேற்கொள்ளப்பட்டு புதிய கற்காலம் மற்றும் பெருங்கற்காலம் எனப்படும் இரும்புக்கால பண்பாடுகளைச் சேர்ந்த பல தடயங்கள் வெளிக்கொணரப் பட்டுள்ளன.*

*பையம்பள்ளி தலதாப்பு மலைக்கு வடகிழக்குப் பகுதியில் சொத்தைமலை என்றழைக்கப்படும் மலை அமைந்துள்ளது. இம்மலையின் கிழக்கு அடிவாரத்தில் மேடான பகுதியில் காணப்படும் பெரிய பாறையின் கிழக்குப் பகுதியில் ஒரு சிறிய குகை ஒன்று காணப்படுகிறது. இக்குகையானது சுமார் 10 மீட்டர் அகலமும் 6 மீட்டர் நீளமும் மற்றும் 7 அடி உயரமும் கொண்டதாக அமைந்துள்ளது.*

*இக்குகையின் கூரைப்பகுதி மற்றும் சுவர்களில் செங்காவி மற்றும் வெண்மை நிறங்களில் தீட்டப்பட்ட ஓவியங்கள் பல காணப்படுகின்றன. குகையின் வடக்குப்புற உள் சுவரில் பெரிய அசுரனைப் போன்ற உருவம் ஒன்று கைகளை விரித்தவாறு காணப்படுகிறது. அவற்றுக்கு அருகில் மனித உருவங்கள் இரண்டு கைக்கோர்த்தப்படி நின்றிருப்பதைப் போன்று செங்காவி நிறத்தில் தீட்டப்பட்டுள்ளன. தென்பக்கச் சுவரில் குதிரை, யானை*

போன்ற விலங்குகளைப் போல் தோற்றமளிக்கும் கோட்டுருவங்களும், மனிதர்கள் சுத்தி, வாள் போன்ற கருவிகளை கைகளில் ஏந்திக் கொண்டு குதிரைகளின் மீதமர்ந்து வேட்டைக்கோ அல்லது போருக்கோ செல்வதைப் போன்றும், மனிதர்கள் சிலர் சண்டையில் அடிபட்டுக் கீழே விழுந்து கிடப்பது போன்றும் தீட்டப்பட்டுள்ளன. புற்பூண்டு, செடி போன்ற தாவரயினங்களும் கோட்டுருவங்களாக தீட்டப்பட்டுள்ளன. இவ்வோவியங்களுக்குச் சிறிது கீழ்புறத்தில் சூரியன், நட்சத்திரம் போன்ற குறியீடுகளும், கைப்பிடிகள் கொண்ட பெரிய பாத்திரங்களைப் போன்ற இரண்டு ஓவியங்களும் சிலர் மனிதர்கள் நடந்து செல்வதைப் போன்றும் காணப்படுகின்றன.

குகையின் தென்பகுதியின் கீழ்புறத்தில் ஒரு சிறிய மரத்தைப் போன்றும், அதற்கு மேலே உடுக்கையைப் போன்ற இசைக்கருவியும் வெண்மை நிறத்தில் வரையப்பட்டுள்ளன. மேலும் ஓவியங்கள் பல சிதைந்து மங்கலாக காணப்படுகின்றன. மேற்குறிப்பிட்ட ஓவியங்கள் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட கால மக்களின் வாழ்க்கைத் திறன், கலை, பண்பாடு போன்ற கூறுகளைச் சித்தரிப்பனவாக உள்ளன.

ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ள இக்குகையின் உட்பகுதியிலேயே பெருங்கற்காலம். இரும்புக் காலத்தைச் சேர்ந்த கருப்பு - சிவப்பு, கருப்பு நிற மட்பாண்ட ஓடுகள் காணப்படுகின்றன. இக்குகையினுள் செங்காவி நிறத்தில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள்



புதிய கற்காலத்தையும், வெண்மை நிறத்தில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள் பெருங்கற்காலம் எனப்படும் இரும்புக் காலத்தைச் சேர்ந்தவையாகவும் இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

[மேற்குறிப்பிட்ட ஓவியங்கள், இக்கட்டுரை ஆசிரியரால் 1991ம் ஆண்டில் கண்டுபிடிக்கப்பட்டு தினமணி நாளிதழில் 24.3.1991 அன்று செய்தியாக வெளியிடப்பட்டுள்ளது. ]

## 41:2

திருப்பத்தூர் வட்டத்தில் நாட்ரம்பள்ளி - குப்பம் சாலையில் நாட்ரம்பள்ளிக்கு வடகிழக்கே சுமார் 5 கி.மீ. தொலைவில் பச்சூர் அமைந்துள்ளது இவ்வூருக்கு மேற்கே சுமார் 2½ கி.மீ. தொலைவிலும் தேன்கல்லு மலை என்றும் குண்டலமலை என்றும் அழைக்கப்படும் பெரிய மலை காணப்படுகிறது. இம்மலையின் கிழக்கு அடிவாரத்தில் இயற்கையாக அமைந்த பெரிய குகை ஒன்று கிழக்கு நோக்கியவாறு காணப்படுகிறது இக்குகையில் கருப்பு மற்றும் வெண்மை நிறங்களினால் தீட்டப்பட்ட பாறை ஓவியங்கள் காணப்படுகின்றன. இக்கட்டுரை ஆசிரியரால் 13.11 1990 அன்று இவ்வோவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

### நடனமாடும் பெண்

இக்குகையின் கூரைப்பகுதியில் கருப்பு நிறத்தில் பல ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. ஒரு பெண் தனது கையில் சிறிய கம்பை வைத்துக் கொண்டு சுற்றிச் சுற்றி நடனமாடு வதைப்போன்றும், மூன்று மனிதர்கள் கைகளில் கத்தி மற்றும் கம்புகளை வைத்துக் கொண்டு ஒருவரையொருவர் தாக்கிக் கொள்வதைப் போன்றும், ஒருவர் ஒரு கையில் வளைவான கத்தியினை வைத்துக் கொண்டு வேகமாக நடந்து செல்வதைப் போன்றும் தீட்டப்பட்டுள்ளன இவற்றுக்கருகிலேயே பல குறியீடுகள் தொடர்ச்சியாக வரையப்பட்டுள்ளன.

குகையின் தென்மேற்கில் உள்ள சுவர்ப்பகுதியில் பல கட்டங்களைக் கொண்ட பெரிய வட்டம் போன்ற சின்னம் காணப்படுகிறது. இது அக்காலத்தில் நிலவிய சமயச் சடங்கு சார்ந்த சின்னமாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது. மத்தியப் பிரதேசத்திலுள்ள பிம்பேட்காவிலும் இதேபோன்ற ஓவியம்

காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும்.

## படகு ஓவியம்

மேலும், குகையின் தெற்குச் சுவரின் மையப்பகுதியில் படகு போன்ற ஓவியம் ஒன்று காணப்படுகிறது. அதற்கருகிலேயே ஒரு மீனின் உருவமும் கோட்டுவருமாக வரையப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். மேலும், மூன்று மனிதர்கள் கத்தி போன்ற ஆயுதங்களை ஏந்தியவாறு விலங்குகளின் மீது சவாரி செய்வது போன்றும் தீட்டப்பட்டுள்ளன. இவ்வோவியங்களுக்கு அருகிலேயே சிறிய கட்டடங்களைக் கொண்ட வட்டமான குறியீடும், அவ்வட்டத்திற்கருகே மூன்று மனிதர்கள் நின்று கொண்டிருப்பது போன்றும் காணப்படுகின்றன. மேலும், வட்டமான கூம்பு போன்ற உருவத்திற்கு இரு பக்கங்களிலும் இரண்டு மனிதர்கள் அதனைச் சுற்றி விளையாடுவதைப் போன்றும் தீட்டப்பட்டுள்ளன.

மேற்குறிப்பிட்ட சுவரின் வடபகுதியில் ஒரு பெரிய கம்பு நடப்பட்டு அதன் உச்சியில் நீளமான கொம்பு கட்டப்பட்டு அதன் இரு முனைகளிலும் சதுரவடிவிலான இரண்டு பெட்டிகள் காணப்படுகின்றன. இது வயல்வெளிகளில் தண்ணீர் இறைக்கப் பயன்படுத்தப்படும் ஏற்றத்தைப்போல தோற்றமளிக்கிறது. இவற்றிற்கருகே வாத்தைப் போன்ற இரண்டு பறவைகளும், ஒரு மனிதன் தனது இடது கையில் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு செல்வதைப் போன்றும் தீட்டப்பட்டுள்ளன. இதன் அருகிலேயே மனிதன் சிறிய விலங்கின் மீது ஏறிச் செல்வதைப் போன்றும், ஒரு மனிதன் மற்றொரு கையை தன் இடுப்பில் வைத்துக் கொண்டு நின்றிருப்பதைப் போன்றும் வெண்மை நிறத்தில் தீட்டப்பட்டுள்ளன.



மேலும், இக்குகையின் தெற்குச் சுவரின் கீழ்ப்பகுதியில் கறுப்பு மற்றும் வெண்மை நிறங்களினால் தீட்டப்பட்ட ஒன்பது மனித உருவங்கள் கோட்டுருவங்களாக காணப்படுகின்றன. அவற்றுள், இரண்டு பேர் ஒரே விலங்கின் மீது அமர்ந்திருப்பதைப் போன்று காணப்படுகின்றன. இவ்வோவியங்கள் தவிர, பல குறியீடுகளும் இக்குகையில் வரையப்பட்டுள்ளன.

பாறை ஓவியங்கள் காணப்படும் குகையின் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் இரும்புக் காலத்தைச் சேர்ந்த கருப்பு - சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு நிறப் பானை ஓடுகள் காணப்படுகின்றன. மேலும், இக்குகைக்கு அருகிலேயே இரும்புக்கால வாழ்விடப் பகுதிகள் காணப்படுகிறது. இக்குகைக்கு தென்கிழக்குப் பகுதியில் பல கல்வட்டங்கள் சிதைக்கப்பட்ட நிலையில் காணப்படுகின்றன. எனவே, இக்குகையில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்களும் இரும்புக் காலத்தைச் சார்ந்ததாகக் கருதலாம்.



# 42. அம்புலி ஆற்றுப்பள்ளத்தாக்கில் தொல்லியல் இடங்கள்

த. தங்கதுரை,
பாத்தம்பட்டி தெற்கு

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடி வட்டம் மஞ்சன்விடுதி கண்மாயிலிருந்து தொடங்கி தஞ்சாவூர் மாவட்டம் பேராவூரணி வட்டம் மனோரா அருகே வில்லுனி வயல் என்னும் இடத்தில்



வங்கக் கடலில் அம்புலி ஆறு கலக்கின்றது. இப்பள்ளத்தாக்குப் பகுதியில் மேற்கொண்ட மேற்பரப்பாய்வில் ஆலங்குடி வட்டம், கும்மங்குளம், பாத்தம்பட்டி தெற்கு, கல்லாலங்குடி, சூரன் விடுதி, வடகாடு, மாங்காடு, நெடுவாசல் மேற்கு, ரெங்கநாதபுரம், பேராவூரணி வட்டம், ரெட்ட வயல், ஊமத்தநாடு, விலாங்குளம், அம்மணிச்சத்திரம் ஆகிய தொல்லியல் இடங்கள் கண்டுபிடிக்கப் பட்டன.

இவ்விடங்களில் பரவலாக ஈமப்பேழை, செம்புரான் கற்களாலான கல்வட்டங்களும், கருங்கல்லால் ஆன மூடுகல்லுடன் கூடியத் தாழிகளும், தாழிகளும் உள்ளன. நீர்பிடிப்புப் பகுதியிலும் கழிமுகத்தினை ஒட்டிய பகுதிகளிலும் மட்டுமே அமைந்துள்ளன.



# 43. குளித்தலை வட்டாரத்தில் தொல்லியல் தடயங்கள்

செ. கௌரிசங்கர்,
தஞ்சாவூர்

## பெருங்கற்காலம்

### ஆனகவுண்டனூர்

*குளித்தலையிலிருந்து மணப்பாறை செல்லும் வழியில் சுமார் 12 கி.மீ. தொலைவில் ஐயர்மலை என்னும் ஊருக்கு தெற்கில் 4 கி.மீ. தொலைவில் ஆனகவுண்டனூர் உள்ளது. ஊரின் தென்புறம் பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் உள்ளன. ஈமக்காடானது சுமார் 15 ஏக்கர் பரப்பளவில் இருந்திருக்கலாம். தற்போது சுமார் முப்பதிற்கும் மேற்பட்ட ஈமச்சின்னங்கள் [கல்வட்டம்] அங்கு காணப்படுகின்றன.*

### வேங்காம்பட்டி

*குளித்தலையிலிருந்து தென்மேற்கே 12 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. ஊருக்குத் தென்மேற்கில் 1 கி.மீ. தூரத்தில் பெரிய வாழ்விடப் பகுதி உள்ளது இவ்வாழ்விடப் பகுதியின் மையப் பகுதியில் சாலை செல்கிறது கருப்பு சிவப்பு பானையோடுகள், சங்கு போன்றவை இங்கு தென்படுகின்றன. இவ்வாழ்விடத்திற்கு கிழக்குப் பகுதியில் கல்வட்டம் வகையைச் சேர்ந்த ஈமச்சின்னங்கள் உள்ளன.*

### மலையாண்டிபட்டி

*குளித்தலைக்கு தெற்கே 15 கி.மீ. தொலைவில் கூப்பாச்சிப்பட்டி என்ற ஊர் உள்ளது அவ்வூருக்கு மேற்கே 2 கி.மீ. தொலைவில் மலையாண்டிபட்டி உள்ளது. இவ்வூரின் வடக்கில் பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் காணப்படுகின்றன*

*மேலும் மேட்டுமருதூர், மேட்டுப்பட்டி, புனவாசப்பட்டி, வயலூர், சிவாயம், நல்லூர், இனுங்கூர், வைபுதூர், மலையாண்டிபட்டி, வாகூர் ஆகிய ஊர்களில் நத்தக்காடுகள் கண்டுபிடிக்கப்பட்டன. மேலே குறிப்பிட்ட இடங்களை ஒப்பிட்டுப் பார்க்கும்போது பெருங்கற்காலம் மற்றும் வரலாற்றுக்காலம் என இரண்டு காலக்கட்டங்களில் மக்கள் பரவலாக வாழ்ந்துள்ளனர் எனத் தெரிகிறது*

# 44. காயல்பட்டினத்தில் தொல்லியல் தடயங்கள்

த.த. தவசிமுத்து,
தூத்துக்குடி

தூத்துக்குடி மாவட்டம் திருச்செந்தூர் - கொற்கை ஆகிய பண்டைய ஊர்களுக்கு அருகில் அமைந்துள்ள ஊர் காயல்பட்டினம், சோனகர்பட்டினம், பவித்திரமாணிக்கப் பட்டினம் என்று கல்வெட்டுகளால் அறியப்படும் இவ்வூர் சென்ற நூற்றாண்டிலும் கடல்வழி வணிகத்தில் சிறப்புடன் விளங்கிய ஊராகும். இவ்வூர் கருப்புடையார்பள்ளிப் பகுதி கடற்கரை மணற்பரப்பில் திரு. பிரபு சூல்தான் தொல்லியல் தடயங்கள் சிலவற்றைச் சேகரித்துள்ளார்.

அவை இடைக்கால மண் பானை ஓடுகள், பீங்கான் ஓடுகள், கெண்டி மூக்குகள், சிறு அகல் விளக்குகள், சுடுமண் நீள்மணி, சில்லுவட்டுகள், பிற்காலப் பாண்டியர் காசு ஆகியவையாகும். 4 செ.மீ. நீளமும் நடுப் பகுதியில் 1 செ.மீ. கனமும் உடையதாக உட்துளையுடன் உள்ள சுடுமண் அணிமணி குறிப்பிடத்தக்க தாகும். பானை ஓடுகளில் ஓலைப் பதிவுகள் உள்ளன. கிடைத்துள்ள செப்புக் காசு 1 செ.மீ. விட்டமுடைது. ஒருபுறம் மன்னர் அமர்ந்த நிலையில் மலர் முகரும் தோற்றம். மன்னனின் இடதுபுறம் 'கு' என்ற 13ஆம் நூற்றாண்டு எழுத்து வடிவம் தெரிகிறது. இதைப் பாண்டிய மன்னன் குலசேகரன் காசாகக் கருதலாம். இக்காசின் பின்புறம் உருவத்தின் உடல் பகுதி சிதைந்துள்ளது.







# 45. தென்தமிழகத்தில் புதிய நுண்கற்கால இடங்கள்

வீ. செல்வகுமார்,
தஞ்சாவூர்

'தென் தமிழ்நாட்டின் பழங்கற்கால மற்றும் இடைக்கற்காலப் பண்பாடுகளின் நிலவமைப்புத் தொல்லியல்' மற்றும் 'காவிரி நாட்டின் சங்க கால வாழ்விடங்கள்' என்ற திட்டங்களின் சார்பில் 2009-10ல் தஞ்சை மற்றும் திருநெல்வேலிப் பகுதிகளில் மேற்பரப்புக் கள ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இக்கள ஆய்வுகளின் வழியே தொல்லியல் சின்னங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன.

## நாகப்பட்டினம் மாவட்டம்

### கன்னியாகுடி

கன்னியாகுடி என்ற ஊர் மயிலாடுதுறை - சிதம்பரம் சாலையில் உள்ள வைத்தீஸ்வரன் கோவிலுக்குத் தென்கிழக்கே சுமார் 25 கீ.மீ. தொலைவில் உள்ளது இவ்வூரில் முன்பு செய்தில் ஆய்வாளர் கண்டறிந்த பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் (Rajan et at, 2009) மீளாய்வு செய்யப்பட்டபோது நுண்கற்கருவிகள் இரும்புக்கல் (like ferricrete) போன்ற சரளைக்கற்படிவுகளில் கண்டறியப்பட்டுன. மேலும் இம்மண்படிவுகளுக்குக் கீழே செம்மண்படிவு காணப்பட்டது. இச்செம்மண் படிவிலிருந்து தற்காலக் குயவர்கள் பானைகளுக்குச் சிவப்புச் சாயம் பூச மண்ணை எடுத்துப் பயன்படுத்துகின்றனர். இதுவரை காவிரிப் படுகையில் காரைக்கால் மற்றும் வேட்டைக்காரனிருப்புக்கு இடையே கிடைத்துள்ள இரும்புக்கல் (like ferricrete) போன்ற சரளைக் கற்படிவுகளில் நுண்கற்கருவிகள் கடற்கரையிலிருந்து 3-4 கி.மீ. தொலைவிலேயே கிடைத்துள்ளன. கடற்கரையிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ள இவ்விடத்தில் இக் கருவிகள் கிடைப்பது ஒரு முக்கியமான கண்டுபிடிப்பு எனலாம். இவ்விடம் ஒரு பழைய கடற்கரைப் பகுதியாக [க்ஷநயஉா சுனைபந] இருந்திருக்கலாம். மேலும் இங்கு காணப்படும் செம்மண் படிவுகள் காரைக்கால் மற்றும் வேட்டைக்காரனிருப்புக்கு இடையே உள்ள பகுதிகளில் காணப்படவில்லை. இப்பகுதியில்

உள்ள நுண்கருவிகள் காரைக்கால் பகுதியில் காணப்படும் கருவிகளை விட காலத்தால் முற்பட்டு இருக்கலாம் என ஊகிக்கலாம்.

இக்கண்டுபிடிப்பு காவிரிப்படுகைப் பகுதியில் நுண்கற்கால மக்கள் பரவலாக வாழ்ந்ததை உறுதிப்படுத்துகின்றது. காவிரிப் படுகையில் ஆண்டாண்டுதோறும் ஏற்பட்ட வெள்ளப்பெருக்கி னாலும், விவசாயத்தினாலும் இங்குள்ள கற்கால இடங்களைக் கண்டறிவது மிகவும் கடினமாக உள்ளது.

1 Rajan, K, VP. Yathees Kumar and V. Selvakumar, 2009, A Catalogue of Archaeological Sites in Tamil Nadu. Thanjavur : Heritage India Trust.

## திருநெல்வேலி மாவட்டம்

திருநெல்வேலி மாவட்டத்தில் மேற்கொண்ட கள ஆய்வின்போது பல நுண்கற்கால இடங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. அவையாவன: முத்தூர் மலை, சிவந்துபட்டி, குத்துக்கல் 1, குத்துக்கல் 2, நாசரேத், செய்துங்கநல்லூர், வெட்டியாபந்தி, கங்கைகொண்டான், பருத்திக்குளம், கழுகு மலை, சண்முகநல்லூர், தெற்கு பன வடலி, சத்திரம், வன்னிகோனேந்தல், சுப்பையாபுரம், மானூர். குறிப்பாக சங்கரன்கோவிலிலிருந்து திருநெல்வேலி செல்லும் சாலையில் செம்பாறங்கற் படிவம் (Laterite / ferricrete) செம்மண் படிவுகளும் [தஞ்சை மற்றும் புதுக்கோட்டையில் காணப்படுபவற்றை ஒத்தவை] காணப்படுகின்றன. இப்பகுதியில் சில இடங்களில் உள்ள செம்பாறங்கற் படிவில் புதைந்த நிலையில் பெரிய கற்கருவிகளும், நுண்கற்கருவிகளும் காணப்படுகின்றன. மேலும் திருநெல்வேலிக்குக் கிழக்கே உள்ள குத்துக்கல் என்ற இடத்திலும் இத்தகைய இரும்புச்சத்துள்ள சரளைக் கற்கள் காணப்படுகின்றன. இங்கும் நுண்கருவிகள் கிடைப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இப்பகுதியில் இரண்டு வகையான மலைப்பகுதிகள் காணப்படுகின்றன. இங்குள்ள ஆழ்ந்த சாம்பல் மற்றும் கருப்பு நிற கிரானைட் வகைக் கற்கள் உள்ள இடங்களில் நுண்கற்கருவிகள் அதிக அளவில் கிடைக்கின்றன. ஆனால் சற்று வெள்ளையான கற்கள் காணப்படும் மலைப்பகுதிகளில் நுண்கற்கருவிகள்

காணப்படவில்லை. இதற்கு காரணம் கற்கருவிகள் செய்யக்கூடிய குவார்ட்ஸ் வகைக் கற்கள் கிரானைட் வகைக் கற்கள் உள்ள மலைப்பகுதிகளில் கிடைப்பதாக இருக்கலாம்.

## நடுஇருப்பு (தஞ்சை மாவட்டம்)

நடுஇருப்பு கும்பகோணத்திற்கு கிழக்கே சிவபுரத்திற்கு அருகே உள்ளது இவ்வூரில் வீடு கட்ட குழி தோண்டியபோது முது மக்கட் தாழிகள் கிடைத்தன. தற்போது இங்கு பானை ஓடுகள் எதுவும் இல்லை. இப்பகுதியில் இத்தகைய தாழிகள் புதைந்து காணப்படுவதாக உள்ளூர் மக்கள் கூறுகின்றனர்.

## முடிவு

இக்கள ஆய்வுகள் நுண் கற்காலத் தொல்லியல் இடங்கள் தமிழகத்தில் பரவலாகக் காணப்படுவதை உறுதிப்படுத்துகின்றன தமிழகத்தில் இதுவரை பழங்காலச் சான்றுகள் சென்னைப் பகுதியிலேயே அதிக அளவில் கிடைத்துள்ளன. செம்பாறாங்கற் படிவுகள் தமிழகத்தின் தென்பகுதியில் பரவலாகக் காணப்படுகின்றன. சில இடங்களில் பெரிய அளவிலான கற்கருவிகளும் கிடைக்கின்றன. எனவே தமிழகத்தில் தொல்பழங்காலஇடம் மாநிலத்தில் தமிழகத்தில் பரவலாகக் காணப்படும் வரலாற்றிற்கு முந்தைய கால இடங்களைக் குறித்துக் கூடுதல் ஆய்வின்மூலம் நன்கு அறிய முடியும்.

# 46. தமிழ்ப்பல்கலை வளாகத்தில் அகழாய்வு

வீ. செல்வகுமார்,
தஞ்சாவூர்

*தஞ்சாவூருக்கே மேற்கே, பிள்ளையார்பட்டி ஊர் எல்லைக்குள் அமைந்துள்ள தமிழ்ப் பல்கலைக் கழக வளாகத்தின் உள்ளே 2010 சனவரி மாதம் அகழாய்வுகள் நடத்தப் பெற்றன இங்கு 2009ம் ஆண்டு இடப்பட்ட ஒரு குழியும், 2010ம் ஆண்டு சனவரி மாதம் இரண்டு குழிகளும் அகழப்பட்டன.*

## அகழாய்வுக் குழி (09–2)

*2009ம் ஆண்டு தொடங்கப்பட்ட இக்குழி மேலும் அகழப்பட்ட போது கடந்த ஆண்டு கிடைத்ததைப்போல் பழங்கற்காலத்தின் பிந்தைய நிலையைச் சார்ந்த கருவிகள் 17 சதுர மீட்டர் பரப்பளவில் கடினமான செம்பாறகற்படிவில்;* (laterite / ferricrete) *60 சென்டிமீட்டரிலிருந்து 75 சென்டிமீட்டர் ஆழம் வரை கிடைத்தன. இவற்றில் சுரண்டிகள், கூர்முனைகள், செதில்கள் மற்றும் கருக்கற்கள் போன்றவை காணப்பட்டன. இதன் வாயிலாகப் பிந்தைய பழங்கற்கால மக்கள் இப்பகுதியில் வாழ்ந்துள்ளமை உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இந்தியாவின் பிற பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள சான்றுகளின் அடிப்படையில் இப்பண்பாடு சுமார் 50,000 ஆண்டுகளுக்கு முன்பிலிருந்து சுமார் 10,000 ஆண்டுகள் வரை நிலவியிருந்திருக்கலாம் என்று கருதலாம். 75 சென்டிமீட்டருக்குக் கீழே செம்பாறாங்கற்படிவில் எதுவும் கிடைக்கவில்லை.*

## அகழாய்வுக் குழி (10–3)

*இக்குழி 5 மீ x 5 மீ. அளவில் சென்ற ஆண்டு தோண்டப்பட்ட குழியான 09-ற்கு வடகிழக்கே அகழப்பட்டது. முதற் குழியில் கண்டுபிடிக்கப்பட்ட நீரோடை போன்ற பகுதியின் தொடர்ச்சியை அறிய இக்குழி அகழப்பட்டது. இதில் இரண்டு பண்பாட்டு நிலைகள் கண்டறியப்பட்டன. சுமார் 70 செ.மீ கனமுள்ள முதலாம் மண்ணடுக்கில் இரும்புக்கால - வரலாற்று ஆரம்பகாலப் பண்பாடும் அதற்குக் கீழே உள்ள சரளைக்கல்*

அடுக்கில் இடைக்கற்கால அல்லது நுண்கற்காலப் பண்பாடும் காணப்பட்டன. மேலும் இங்கு இடைக்கற்காலப் பண்பாட்டு நிலையில் ஒரு சிறிய நீரோடையும், அதன் குறுக்கே நீர் தேக்கி வைப்பதற்காகத் தோண்டப்பட்ட ஒரு சிறிய குட்டையும் இருந்ததற்கான சான்றுகள் தென்பட்டன. இந்தக் குட்டையில் இரண்டு திசைகளிலிருந்து நீர் வந்து தேங்கியிருந்ததாகத் தெரிகின்றது. இங்கு நீர் நிலைகளில் வாழும் நத்தையின் ஓடு ஒன்றும் கிடைத்துள்ளது. இந்தக் குட்டை சுமார் 2 மீ. நீளம், 1 மீ அகலம் மற்றும் சுற்றுப்பரப்பிலிருந்து 50 செ.மீ. ஆழத்துடன் காணப்படுகின்றது. இதன் அமைப்பை நோக்கும்போது இது இயற்கையாக உருவானது போல் தோன்றவில்லை மேலும் இங்கு விலங்குகளின் கால் தடம் எதுவும் காணப்படவில்லை இக் குட்டையின் அருகாமையில் வேட்டையாடி உணவு சேகரித்து வாழ்ந்து வந்த நுண்கற்கால மக்கள், கருவிகள் செய்ததற்கான சான்றுகள் காணப்படுவதால் இதை இவர்கள் குடிநீருக்காகப் பயன்படுத்தியிருக்கலாம் என்று கருத வாய்ப்புள்ளது. இப்பகுதியில் நுண்கற்காலப் பண்பாடு இன்றிலிருந்து சுமார் 3,000 முதல் 10,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை நிலவியிருந்திருக்கலாம்.

இரும்புக்காலம் - வரலாற்று ஆரம்ப காலத்தைச் [பெருங்கற்காலத்தைச்] சேர்ந்த செம்மண்ணடுக்கில் சில கருப்பு - சிவப்பு பானை ஓட்டுத் துண்டுகளும், மெருகேற்றப்பட்ட சிறு கோடரி ஒன்றும் [50 செ.மீ. ஆழத்தில்] கிடைத்தன. இக்கோடரி 7.2 செ.மீ. நீளமும், 4.9 செ.மீ அகலமும், 4 செ.மீ. கனமும் உடையது. இந்த முக்கோண வடிவக் கோடரி இரும்புக்காலம் வரலாற்று ஆரம்ப காலத்தில் பயன்படுத்தப்பட்டிருந்ததாகத் தெரிகின்றது இரும்புக்காலம் - வரலாற்று ஆரம்ப காலத்தில் இப்பகுதியில் மக்கள் அதிக அளவிலோ, நிரந்தரமாகவே வாழவில்லை. இந்த இடத்திலிருந்து சுமார் ஒரு கி.மீ. தொலைவில் உள்ள வல்லத்தில் இக்கால மக்களின் வாழ்விடப் பகுதி தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறையினரால் 1980களில் அகழப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும். மேலும் பிள்ளையார்பட்டிக்கு அருகே இரும்புக்கால வரலாற்று ஆரம்ப காலத்தைச் சேர்ந்த ஈமத்தாழிகள் காணப்படுகின்றன. எனவே வல்லம் பகுதியில் வாழ்ந்த மக்கள் இப்பகுதியில் வேட்டையாடுவதற்கோ அல்லது ஆடு - மாடு மேய்ப்பதற்கோ

வந்தபோது இப்பொருட்களை விட்டுச் சென்றிருக்கலாம். தமிழகத்தின் பிற பகுதிகளில் கிடைத்த தடயங்களின் அடிப்படையில் இக்காலம் இன்றிலிருந்து சுமார் 3000 - 3500 ஆண்டுகளுக்கு முன்பு வரை நிலவியிருந்தது என்று கருதலாம்.

## அகழாய்வுக் குழி (10–4)

அகழாய்வுக் குழி நான்கு குழி இரண்டிற்கு மேற்கே கிழக்கே - மேற்காக 5 மீ. மற்றும் தெற்கு - வடக்காக 10 மீ அளவில் இடப்பட்டது. இந்த இடத்தில் இப்பகுதியில் மழை நீரை எடுத்துச் செல்லும் ஓடை செல்கின்றது. இது ஊற்று ஓடை என்ற பெயருடன் காவிரி வடிநிலப்பகுதிக்குச் சென்று புது ஆற்றில் சென்று கலக்கின்றது. இங்கு பளிங்குக்கல்லால் ஆன கற்கருவிகளும், செதில்களும் காணப்படுகின்றன.

இங்கு கூழாங்கல்லால் ஆன சுத்தியல் அல்லது பட்டடைக்கல் கண்டுபிடிக்கப்பட்டது. இது ஏறக்குறைய நீள்வட்ட வடிவத்தில் 6.4 செமீ நீளமும், 4 6 செ.மீ. அகலமும், 17 செ.மீ. கனமும், 87 கிராம் எடையும் உள்ளது. இக்கல்லின் இருபுறங்களிலும் விளிம்புகளில் கூர்மையான கருவி கொண்டு உருவாக்கப்பட்ட புள்ளிகளுடைய வேலைப்பாடு மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

# 47. மதுரைப் பகுதியில் சில புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள்

எம்.எஸ்.ராம்ஜி,
கொளத்தூர்

## 1. கொங்கர் புலியங்குளம் பாறை ஓவியம்

மதுரை மாவட்டம் திருமங்கலம் வட்டத்தில் மதுரை-தேனி நெடுஞ்சாலையில் கொங்கர் புலியங்குளம் உள்ளது. இவ்வூரில் வடபுறத்தில் அமைந்துள்ள மலையில் வரலாற்றுத் துவக்ககால பழந்தமிழ்க் கல்வெட்டுக்கள் அமைந்துள்ள குகையின் மேல் விதானப் பகுதியில் பாறை ஓவியங்கள் நான்கு இடங்களில் காணப்படுகிறது.

இப்பாறை ஓவியம் தமிழ் பிராமிக் கல்வெட்டுக்கள் உள்ள பகுதியின் வலது புறத்தில் உள்ள குகைத்தளங்களில் மூன்று இடங்களிலும், தமிழ் பிராமிக் கல்வெட்டுக்கள் உள்ள இடத்திலிருந்து 100 மீ. தூரத்தில் கிழக்கே அமைந்துள்ள மாயன் கோயில் குகைத்தளத்தில் வெள்ளை மற்றும் சிவப்பு வண்ணத்தில் காணப்படுகிறது. மனிதன், விலங்கு, விலங்கின் மீது அமர்ந்த மனிதன், 12 வெளிக்கோடுகளை கொண்ட வட்டம், ஏணி, போன்ற உருவங்கள் காணப்படுகின்றன.



இம்மலையடிவாரப்பகுதியில் பளிங்குக் கல்லால் உருவாக்கப்பட்ட நுண்கற்காலச் கற்கருவிகள் காணப்படுகின்றன. மேலும் கருப்பு சிவப்பு மண்பாண்ட சில்லுகள் சொரசொரப்பான மண்பான்ட சில்லுகள் போன்றவை கிடைக்கின்றன.

**அழகர் மலை**

அழகர் மலை உள்ளது. இங்குள்ள பழந்தமிழ்பிராமிக் கல்வெட்டுக்கு சுந்தராசன் பட்டி வழியாக செல்லும் இடத்தில் குவார்ட்ஸ், செர்ட், போன்ற கற்களினால் உருவாக்கப்பட்ட செதில் கற்கருவிகள் காணப்படுகின்றன. மேலும் இப்பகுதியில் கருப்பு சிவப்பு மண்பாண்ட ஓடுகளும் காணப்படுகின்றன...



# 48. மயிலாடுதுறை வட்டார புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள்

இரா. செந்தில்,
தஞ்சாவூர்

*நாகப்பட்டினம் மாவட்டத்தில் மயிலாடுதுறை மற்றும் சீர்காழி வட்டங்களில் தொல்லியல் கள ஆய்வுகளில் பெருமங்கலம், மண்ணிப்பள்ளம், புத்தாகரம், கொருக்கை, கள்ளிகாடு, இடைக்கியம், நத்த மேடு, கன்னியாகுடி, சித்தர்காடு, கோமல் போன்ற ஊர்களில் தொல்லியல் தடயங்கள் பல கண்டுபிடிக்கப் பட்டன.*

## பெருமங்கலம்

*வைத்தீஸ்வரன் கோயிலிலிருந்து மூன்று கி.மீ வடக்கில் அமைந்துள்ள பெருமங்கலம்த்தின் தென்மேற்கு பகுதியில் தற்கால சுடுகாட்டிற்கு அருகில் காணப்படுகின்ற மேட்டில் ஈமத்தாழிகள் பல மண் அரிப்பினால் வெளிப்பட்டுள்ளன ஈமத்தாழி 1.30 மீட்டர் உயரமும் 1.10 மீட்டர் சுற்றளவு [மையப்பகுதியில்] கொண்டுள்ளன. கருப்பு சிவப்பு, மட்கலக் கிண்ணங்கள் காணப்பட்டன மேட்டுப்பகுதியில் கருப்புசிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு நிற மட்கல ஓடுகளும் பரவிக்கிடக்கின்றன*

## புத்தாகரம்

*வைத்தீஸ்வரன் கோவிலிலிருந்து மேற்கே மணல்மேடு செல்லும் சாலையில் 7 கீ.மீ. தொலைவில் புத்தாகரம் உள்ளது இவ்வூரின் சாலையின் வடபுறத்தில் மண் தோண்டியபோது தாழியின் உடைந்த துண்டுகள் மற்றும் கருப்பு சிவப்பு பானை ஓடுகள், சிவப்பு நிறப் பானை ஓடுகள் மற்றும் கருப்பு நிறப் பானை ஓடுகள் காணப்படுகின்றன.*

## கொருக்கை

*நாகப்பட்டினம் மாவட்டம் மயிலாடுதுறை வட்டம் பாலக்குடியிலிருந்து மேற்கே 5 கி.மீ. தொலைவில் இவ்வூர்*

அமைந்துள்ளது. இவ்வூரில் தெற்கே காலனி என்ற பகுதி உள்ளது. இவ்வூரின் அய்யாவையானாறு ஆற்றங்கரையில் தென்கரையில் பெருங்கற்கால ஈமத்தழிகள் உடைந்த நிலையில் காணப்படுகின்றன. இங்கு கருப்பு மற்றும் சிவப்பு நிற பானையோடுகள் காணப்படுகின்றன. மேலும் முழுமையான சிப்பு நிறம் இரண்டு ஒன்றில் பெரிய பானைகளும், சிறிய கிண்ணங்களும் காணப்பட்டன.

### கன்னியாகுடி

மணல்மேடு செல்லும் சாலையில் சுமார் 5.கீ.மீ. தொலைவில் உள்ள திருப்புன்கூரிலிருந்து தெற்கே 2 சீ.மீ தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரின் கிழக்கே பெருங்கற்காலத்தைச் சார்ந்த வாழ்விடப் பகுதி சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் மண் மேட்டில் கறுப்பு-சிவப்பு, கருப்பு நிற பானையோடுகள் மற்றும் மூடியின் கைப்பிடி உடைந்த கிண்ணங்கள், காணப்படுகின்றன உறை கிணறு ஒன்றும் உள்ளது. மேலும் இவ்விடத்திலிருந்து மேற்கு திசையில் 1 கீ.மீ. தொலைவில் முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றது. முதுமக்கள் தாழிகளுடன் எலும்புத் துண்டுகளும் காணப்பட்டன

### சேந்தங்குடி

மயிலாடுதுறை வட்டம், மயிலாடுதுறையிலிருந்து வடக்கே சீர்காழி செல்லும் சாலையில் 5 கீ.மீ தொலைவில் சேந்தங்குடி உள்ளது இங்குள்ள எம்.ஜி.ஆர் நகர் அருகே உள்ள திடலில் பெருங்கற்கால ஈமத்தமிழிகள் மற்றும் கருப்பு-சிவப்ப மட்பாண்ட ஓடுகள் மற்றும் சிவப்பு நிற மட்பாண்ட ஓடுகள் ஆகியவை காணப்படுகின்றன. மேலும் வரலாற்றுக் கால வாழ்விட பகுதியும் காணப்படுகின்றன.

### நத்தமேடு

தஞ்சை மாவட்டம், திருவிடைமருதூர் வட்டம், மயிலாடுதுறையிலிருந்து வடக்கே 12 கி.மீ. தொலைவில் காளி என்ற ஊர் உள்ளது. அதிலிருந்து மேற்கே 4 கி.மீ. தொலைவில் மொழியூர் என்ற ஊர் உள்ளது. இங்குள்ள நத்தமேடு என்னும்

இடத்தில் பெருங்கற்கால ஈமத்தாழிகளும், கருப்பு-சிவப்பு, சிவப்பு-கருப்பு பானை ஓடுகளும் உடைந்த நிலையில் காணப்படுகின்றன.

## சித்தர்காடு

*மயிலாடுதுறையிலிருந்து மேற்கே கும்பகோணம் செல்லும் சாலையில் 3 கி.மீ தொலைவில் இவ்வூர் உள்ளது. இவ்வூரின் தெற்கே 6 கி.மீ. தொலைவில் காடக்குடி திடலில் பெருங்கற்கால ஈமத்தாழிகள் கருப்பு-சிவப்பு, கருப்பு, சிவப்பு நிற மட்பாண்ட ஓடுகள், கிண்ணங்கள் போன்றவைகள் உடைந்த நிலையில் காணப்படுகின்ன. விவசாயத்தால் இவ்விடம் அழிந்த நிலையில் உள்ளது.*

# 49. தருமபுரி மாவட்டத்தில் புதிய தொல்லியல் கண்டுபிழப்புகள்

இரா. ரமேஷ்,
சென்னை

இம்மாவட்டத்தில் தொல்லியல் அறிஞர்கள் பலர் கள ஆய்வுகளையும் அகளாய்வுகளையும் மேற்கொண்டு பல அரிய தகவல்களை வெளிக்கொணர்ந்துள்ளனர். இதன் மூலம் இம்மாவட்டத்தில் பழையகற்காலம் தொடங்கி மக்கள் வாழ்ந்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. தற்போது இம்மாவட்டத்தில் மேற்கொண்ட கள ஆய்வில் சில புதிய தொல்லியல் இடங்கள் கண்டறியப்பட்டுள்ளன. அவற்றைப்பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

## புதிய கற்காலம்

வத்தல் மலைப்பகுதியில் ஏற்கனவே பல புதிய கற்காலக் கருவிகளை கண்டறிந்துள்ளனர் ஆனாலும் தற்போது மேற்கொண்ட கள ஆய்வின் போது சுமார் 50 க்கும் மேற்பட்ட பளபளப்பான கற்கருவிகள் கண்டறியப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்றிக்காடு என்ற இடத்தில் மட்டும் சுமார் 40 க்கும் மேற்பட்ட கற்கருவிகள் குவித்துவைக்கப்பட்டு தற்போது அவை வழிபாட்டுப் பொருளாக மாற்றப்பட்டுள்ளன. பளபளப்பான கற்கருவிகளை வழிபடும் வழக்கமானது ஈரோடு, சேலம் போன்ற மாவட்டங்களிலும் காணப்படுவது குறிப்பிடத்தக்கதாகும். ஒன்றிக்கரடு கருவிகள் சுமார் 3 செமீ முதல் 10 செமீ. அளவுகளை கொண்டு காணப்படுகிறது மேலும் இவ்வூருக்கு வடக்கே பால்சிலம்பு என்ற இடத்தில சாம்பல் நிறப் பானை ஓடுகளும் அதிப அளவில் கிடைக்கின்றன.

பெரியூர் என்ற இடத்தில் 10க்கும் மேற்பட்ட பளபளப்பான கற்கருவிகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இவை சுமார் 5 செமீ முதல் 12 செமீ வரையிலான அளவுகளைக் கொண்டுள்ளன.

### சித்தேரி மலை

*சித்தேரி மலை என்ற ஊர் தேனாண்ட மலை என்ற மலையின் உச்சியில் அமைந்துள்ளது இவ்வூரில் உள்ள ஒரு சிறிய மரத்தின் அருகில் ஒரு பளபளப்பான கற்கருவி வைக்கப்பட்டு வழிபடப்பட்டு வருகிறது.*

### இரும்புக்காலம்

### கொண்டகறஹள்ளி

*தருமபுரி வட்டத்தில் பொம்மிடியிலிருந்து மேற்கே 5. கி.மீ. தொலைவில் வத்தல் மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு மேற்கே மலையடிவாரத்தில் சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் இரும்புக்கால ஈமச்சின்னங்களான கற்குவைகள் 10க்கும் மேற்பட்டவை கண்டறியப்பட்டுள்ளன அவற்றில் சில சிதைக்கப்பட்டு தற்போது விவசாயநிலமாக மாற்றப்பட்டுள்ளது. கற்குவைகள் சுமார் 5 மீ முதல் 12 மீ வரையிலான விட்டஅளவுகளை கொண்டுள்ளன சில சிதைக்கப்பட்டுள்ள ஈமச்சின்னங்களில் மூடுகற்கள் தெரிகின்றன.*

### சந்தனூர் மேடு

*தருமபுரி வட்டத்தில் பொம்மிடியிலிருந்து தென்மேற்கே 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூருக்கு மேற்கே கொல்லுக்குட்டை என்ற இடத்தில் இரும்புக்கால ஈமச்சின்னங்களான கற்குவைகள் சுமார் 10க்கும் மேற்பட்டவை கண்டறியப்பட்டுள்ளன. அவற்றில் சில சிதைக்கப்பட்டு காணப்படுகின்றன.*

### பசுபபுரம்

*பசுபபுரம் எனும் ஊர் பொம்மிடிக்கு மேற்கே 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூரிலுள்ள காளியம்மன் கோவிலுக்கு பின்புறம் சுமார் 2 ஏக்கர் பரப்பளவில் இரும்புக்கால ஈமச்சின்னமான கற்குவைகள், கற்பதுக்கை மற்றும் நெடுங்கல் போன்றவை சிதைக்கப்பட்ட நிலையில் கண்டறியப்பட்டுள்ளன. தற்போது சுமார் 1.5மீ உயரம் கொண்ட ஒரு நெடுங்கல் மட்டும்*

எஞ்சியுள்ளது. சிதைக்கப்பட்ட ஈமச்சின்னங்களில் கருப்பு சிவப்பு, கருப்பு பளபளப்பான சிவப்பு நிற பானை ஓடுகள் பெருமளவில் சிதறிக்கிடக்கின்றன.

## சக்கம்பட்டி

அரூர் வட்டத்தில் தேனாண்ட மலையில் அமைந்துள்ள மலைக்கிராமம் ஆகும். சக்கம்பட்டி சித்தேரி மலை என்னும் ஊரிலிருந்து மேற்கே 10 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. கற்பதுக்கை, கற்குவை மற்றும் கற்திட்டை போன்றவை ஊருக்கு வடக்கே 2 கி.மீ. தொலைவில் வனப்பகுதியில் உள்ள யானக்கல் பாறை என்ற இடத்தில் அமைந்துள்ளன. கற்திட்டைகள் சிதைக்கப்பட்ட நிலையில் உள்ளன. பாறையின் கீழ் மற்றும் மூடு மூடிகல்லுடன் கூடிய கற்பதுக்கைகளும் சுமார் 20 க்கும் மேற் பட்டவை காணப்டுகின்றன. கல்வட்டமானது பலகைக்கற்களைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளன. இவ்விடத்தை பாண்டியவர் வீடு என்று அழைக்கின்றனர்.

# 50. மணவெளி (புதுச்சேரி) அகழாய்வு

மோ. பிரசன்னா,
இரா. ரமேஷ்,
சென்னை

*பாண்டிச்சேரிக்குத் தெற்கே கடலூர் செல்லும் சாலையில் அரியாங்குப்பம் காவல்நிலையத்தில் இருந்து கிழக்கே 2 கிலோமீட்டர் தொலைவில் மணவெளி என்னும் ஊர் அமைந்துள்ளது. மனவெளியின் வடக்கே அரியாங்குப்பத்தாறும் தெற்கே சுண்ணாம்பாறும் பாய்கின்றன. புகழ் பெற்ற அரிக்கமேடு என்ற தொல்லியல் இடம் இவ்வூருக்கு வடகிழக்கே 2 கிமீ தொலைவில் அமைந்துள்ளது. இம்மாதிரி அகழாய்வு மணவெளியில் உள்ள கடலை வீதியின் வடக்குப் பகுதியில் மனை எண் சுளு.சூடி. 138/8 ல் நடைபெற்றது.*

*இவ்விடத்தில் புதிதாக வீடுகட்ட தோண்டப்பட்ட குழியில் இரும்புக்காலப் பண்பாட்டு எச்சங்கள் வெளிப்பட்டன. எனவே இவ்விடத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்த பாண்டிச்சேரி வட்டாட்சியர் இந்தியத் தொல்லியல் துறையினை அணுகி, அகழாய்வு செய்து தொல்லியல் எச்சங்களை மீட்டுத்தருமாறு கேட்டுக் கொண்டதின் விளைவாக திருமதி. சத்தியபாமா பத்ரிநாத் அவர்களின் வழிகாட்டுதலில் திரு. கே.பி மோகன்தாஸ் அவர்களின் தலைமையில் மோ. பிரசன்னா, இரா. ரமேஷ் மற்றும் பாண்டிச்சேரி பல்கலைக்கழக வரலாற்றுத் துறை மாணவர்கள் உதவியுடன் மாதிரி அகழாய்வு பிப்ரவரி மாதம் 2010 ல் நடத்தப்பட்டது.*

*அகழாய்வுக்குழியானது ஏற்கனவே வீடு கட்டுவதற்காக வடக்குத் தெற்காக சுமார் 3 1.5மீ x 70செ. மீ ஆழம் தோண்டப்பட்டிருந்தது. எனவே அதனை மையமாக வைத்து 4 x 4 மீ அளவிற்கு அகழாய்வு குழி போடப்பட்டது. அகழாய்வு இடம் கடல் மண்ணாகும். அகழாய்வுக் குழியில் முதல் 50 செ.மீ அளவில் தற்போதைய கழிவுகள் ஆங்காங்கே கலந்து காணப்பட்டது. அகழாய்வுக்குழியில் கிழக்குப்பகுதியில் இருந்து 150 செ.மீ. தொலைவில் 58 செ.மீ ஆழத்தில் முதுமக்கள் தாழி*

தென்பட்டது. மேலும் தாழியின் வடக்கே 98 செ.மீ. தூரத்தில் ஒரு சிவப்பு நிற பானை 90 செ.மீ. ஆழத்தில் காணப்பட்டது. அந்த உடைந்த மட்பாண்டத்தின் உள்ளே இரண்டு குடுவைகளும் மிகவும் சிதைந்த நிலையில் எலும்புத்தூள்களும் காணப்பட்டன இம்மட்பாண்டத்தின் மேற்கே சிவப்பு நிற மட்பாண்டமும் மூடியும் கிடைத்தன. அகழாய்வுக்குழியின் கிழக்கிலிருந்து மேற்கே சுமார் 140 செ.மீ தொலைவில் 110 செ.மீ ஆழத்தில் கிழக்கு மேற்காக வைக்கப்பட்ட மூடியுடன் கூடிய ஈமம்பேழை தென்பட்டது. அந்த ஈமப்பேழையானது 160 செ மீ. நீளமும், 60 செ.மீ அகலமும் கொண்டு காணப்பட்டது. ஈமப்பேழையும் முதுமக்கள் தாழியும் ஒட்டியவாறு வைக்கப்பட்டிருந்தது. நன்கு வேகவைக்கப்படாமல் காணப்படும் இப்பேழைக்கு இரண்டு வரிசையில் மொத்தம் 16 கால்கள் இருந்தன. இப்பேழையின் கீழ் இரண்டு கால் வரிசையின் நடுவில் மூன்று கருப்பு சிவப்பு நிற கிண்ணங்கள் ஒன்றாக சேர்த்து வைக்கப்பட்டிருந்தது. இதன் அருகில் ஒரு கருப்பு நிற கிண்ணமும் வைக்கப்பட்டிருந்தது. பேழையில் மேல் சங்கிலி தொடர் போன்று அலங்கரிக்கப்பட்டிருந்தது. பேழையில் இருந்த கால்கள் ஒவ்வொன்றுக்கும் இடையே இடைவெளியானது 20 செ மீ. ஆகும். அனைத்து கால்பகுதியின் நடுவிலும் சிறு துளைகள் காணப்பட்டன. 16 கால்களில் ஒரு காலில் மட்டும் வலையம் போன்று காணப்பட்டது. மேலும் பேழையும் தாழியும் இணையும் இடத்தில் சிவப்பு நிறமட்கலம் ஒன்று உடைந்த நிலையில் காணப்பட்டது.

அகழாாய்வுகுழியானது 175 செ.மீ. ஆழம் தோண்டப்பட்டு தாழி முழுவதும் வெளிப்படுத்தப்பட்டது. முதுமக்கள் தாழியானது ஒரு தட்டின் மேல் வைக்கப்பட்டிருந்தது. பின்னர் தாழியின் உள்ளே இருந்த மண் அகற்றப்பட்டது. தாழியினுள் ஈரம் அதிகமாக இருந்ததால் எலும்புத்துண்டுகள் உடைந்த நிலையிலும் அதன் அருகே ஒரு குடுவை, சிவப்பு நிற சிறிய பானை மற்றும் நீண்ட கழுத்து அமைப்புடைய பானை போன்றவை காணப்பட்டன முதுமக்கள் தாழி 125 செ.மீ. உயரமும் நடுப்பகுதியில் 290 செ.மீ. சுற்றளவுடனும் அடிப்பகுதி தட்டையாகவும் காணப்பட்டது. தாழியின் கழுத்துப்பகுதிக்கு 5 செ.மீ. கீழே 3 செ.மீ. அளவுடைய சாய்வான கோடுகள் தாழியை சுற்றிலும் காணப்பட்டது.

முதுமக்கள் தாழி, 16 கல்களுடன் கூடிய ஈமப்பேழை, கருப்பு மற்றும் சிவப்பு நிற கிண்ணங்கள், குடுவை, பளபளப்பான கருப்பு நிற கிண்ணம் -மற்றும் சிவப்பு நிற பானைகள் போன்றவை இவ்வகழாய்வில் கிடைத்தன. இங்கு கிடைத்த பொருட்களை வைத்து இதன் காலம் கி.மு 2 முதல் கி.பி. 2 ஆம் நூற்றாண்டாக இருக்கலாம் அல்லது அருகில் உள்ள அரிக்கமேட்டின் சமகாலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம். இங்கு கிடைத்த அனைத்து பொருட்களும் புதுச்சேரி அரசு அருங்காட்சியகத்தில் ஒப்படைக்கப்பட்டது

# 51. மேல்சித்தாமூர் அகழாய்வு

ப.தெ. பாலாஜி,
சென்னை

*விழுப்புரம் மாவட்டத்தில் திண்டிவனம் வட்டத்தில் 16 கி.மீ. தொலைவல் மேல்சித்தாமூர் [12 16' கிழக்கு 79 16' வடக்கு] அமைந்துள்ளது. திருவண்ணாமலை திண்டிவனம் சாலையில் வல்லம் என்னும் ஊருக்கு 2 கி.மீ வடக்காக அமைந்துள்ள இவ்வூரைச் சுற்றி வரலாறு மற்றம் தொல்லியல் புகழ் பெற்ற தொண்டூர், அகலூர், செஞ்சி, திருநாதர் குன்று, சிங்கவரம், நெகனூர்பட்டி, பெருமுகை, விழுக்கம் ஆகிய ஊர்கள் உள்ளன*

**வரலாற்றுச் சிறப்புகள்**

*மேல்சித்தாமூரின் வரலாறு இரும்புக் காலத்தில் இருந்து தொடங்குகிறது எனலாம். இவ்வூரின் அருகில் அமைந்துள்ள மணப்பாக்கம் என்னும் ஊரில் பெருங்கற்கால ஈமச் சின்னங்கள் பல கண்டுபிடிக்கப்பட்டன இவ்வூர் சமணக் கோயிலும் மடமும் பெற்ற ஊராகும். வரலாற்றுக் காலத்தில் சிங்கபுர நாட்டின் ஒரு பகுதியாக விளங்கிய இவ்வூரில் திகம்பரப் பிரிவின் மடம் ஒன்று உள்ளது. இவ்வூரில் உள்ள சமணக் கோயில்களான மலை நாதர் மற்றும் பார்சுவ நாதர் கோயில்கள் வரலாற்றுப் புகழ்பெற்ற கோயில்களாகும். மலை நாதர் கோயில் கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இக்கோயிலில் உள்ள பாகுபலி, பார்சுவ நாதர், ஆதி நாதர், மகாவீரர், அம்பிகை யக்ஷி போன்ற சிற்பங்கள் சோழர் கால சிற்பங்களாகும். இவ்வூரில் உள்ள பார்சுவ நாதர் கோயில் 12 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.*

*சமணத்தின் ஒரு பிரிவான திகம்பரப் பிரிவின் மடம் ஒன்று இவ்வூரில் செயல்பட்டு வருகின்றது. பார்சுவ நாதர் கோயிலின் அருகில் அமைந்துள்ள இம்மடம் ஜீன காஞ்சி மடம் எனப் படுகிறது இம்மடத்தை 19 ஆம் நூற்றாண்டில் புணரமைப்பு செய்துள்ளனர். இம்மட்டத்தின் தலைவராக ஸ்வஸ்தி ஸ்ரீ இலட்சுமி சேன பண்டாரக பட்டாச்சார்யர் உள்ளார்.*

இவ்வூரின் தொடக்க கால வரலாற்றைத் தொல்லியல் அகழாய்வுகள் மூலம் கண்டறிவதற்காக சென்னைப் பல்கலைக் கழகத்தின்-பண்டைய வரலாறு மற்றும் தொல்லியல் துறை 2006 முதல் 2010 வரை 5 பருவங்களில் அகழாய்வுகள் மேற்கொண்டது. முதல் மூன்று பருவங்கள் துறையின் தலைவர் பேராசிரியர் ஏ ஏகம்பர நாதன் தலைமையிலும் அடுத்து இரண்டு பருவங்கள் துறைத்தலைவரும் இக்கட்டுரை ஆசிரியருமான பேராசிரியர் பாலாஜி தலைமையிலும் நடைபெற்றன.

## அகழாய்வுக் குழிகள்

இவ்வூரில் மொத்தம் 11 அகழாய்வுக் குழிகள் இடப்பட்டன இவ்வூரின் தென் கிழக்கில் அமைந்துள்ள நத்தமேடு என்னும் பகுதியில் 5 குழிகளும் [மேல்சித்தாமூர் 1,3,9,10,11] பிற குழிகள் மேட்டின் மேற்கு மற்றும் வடக்கு விளிம்புப் பகுதியில் மேற்கொள்ளப்பட்டன. முதல் ஐந்து குழிகளின் பண்பாட்டு மண்ணடுக்குகளின் கனம் 76 செ மீ ஆகும். இப்பகுதியில் கறுப்பு சிவப்பு, கறுப்பு, சிவப்பு மற்றும் சொரசொரப்பான சிவப்பு மட்கலன்கள் காணப்பட்டன. மேற்கு மற்றும் வடக்குப் பகுதியில் அகழாய்வுக் குழிகளில் பண்பாட்டு மண்ணடுக்குகள் 1.4 மீ. வரை இருந்தது.

## கட்டிடச் சிதைவுகள்

மேல் சித்தாமூர் எண் - 2 என்ற அகழாய்வுக் குழியில் 17 செ.மீ. ஆழத்தில் கருங்கல் அடித்தளம் கொண்ட செங்கற்சுவர் ஒன்றின் எச்சம் கண்டுபிடிக்கப்பட்டது. 6 வரிசையில் அமைக்கப்பட்டுள்ள கருங்கல் அடித்தளத்தின் மீது 4 வரிசையில் செங்கல் சுவர் எழுப்பப்பட்டுள்ளது. அதன் மேலுள்ள வரிசைகள் அழிந்துள்ளன. இச்சுவரை களிமண் குழைத்து அமைத்துள்ளனர். இக்கட்டிடப் பகுதி இவ்வூரில் இருந்த சமண மடமாக இருக்கலாம் என ஊரில் உள்ளோர் தெரிவித்தனர். இக்கட்டிடத்தின் தென் பகுதியில் முற்றம் இருந்ததற்கான தடயங்களும் கிடைத்தன.

மேல் சித்தாமூர் எண்-6 என்ற அகழாய்வுக் குழியில் களி மண்ணால் கட்டப்பட்ட சுவர் பகுதி ஒன்றும் கண்டுபிடிக்கப்

பட்டது. களிமண்ணுடன் சரளைக்கற்களை சேர்த்து இச்சுவர் கட்டியுள்ளனர். இச்சுவர் பகுதியும் இங்கிருந்த சமண மடத்தின் ஒரு பகுதியாக இருக்கலாம். இக்கட்டிடப் பகுதி 200 ஆண்டுகளக்கு முற்பட்டதாக இருக்கக் கூடும்.

மேல் சித்தாமூர் எண் - 11 அகழாய்வுக் குழியில் 48 செமீ ஆழத்தில் சதுர அமைப்பில் சுவர் பகுதி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது இக்கட்டிடத்தின் செங்கல் 36X18X7 செமீ அளவுடையது. களிமண்ணைக் குழைத்து செங்கல்லை அடுக்கிக் கட்டியுள்ளனர். செங்கற்கல் யாவும் ளையில் இடப்பட்டவையாகும். இக்கட்டிடச் சிதைவு பல்லவர் காலத்திற்கு முற்பட்டது என்பது இக்கட்டிடத்துடன் கிடைத்த பிற பொருள்களை வைத்து கணிக்கப்பட்டது.

மேல் சித்தாமூர் எண் 4 குழியில் 42 செ.மீ ஆழத்தில் இயற்கைப் பாறையில் அமர்வு மேடை போன்று செதுக்கியுள்ளமை கண்டுபிடிக்கப்பட்டது. இம்மேடை கிரியைகளுக்காகப் பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும் சமண சமயத்தில் சல்லேகனம் எனச் சொல்லக்கூடிய உண்ணா நோண்பிருந்து உயிரை விடுதல் என்னும் செல் வழக்கமாக உள்ளது. இப்பாறை மேடையில் இது போன்று செயல் நடைபெற்றிருத்தல் வேண்டும்

மேல்சித்தாமூர் எண் - 1 அகழாய்வுக் குழியில் விலங்கு ஒன்றின் எலும்புகள் கிடைத்தன. இது எருமை அல்லது எருதின் எலும்புகளாக இருக்கலாம்

இவ்வகழாய்வில் சுடுமண்ணால் செய்யப்பட்ட எழுபதுக்கும் மேற்பட்ட பொருள்கள் கிடைத்தன. இவற்றுள் மனித உருவங் களும் அடங்கும். இவற்றுடன் முத்திரைகள், புகைபிடிக்கும் குழல்கள் விளக்குகள் ஆகியவை அடங்கும். சுடுமண்ணால் ஆன ஆணின் தலைப்பகுதி ஒன்றில் விசிறித் தலைப்பாகை அமைப்பில் கரண்ட மகுடத்துடன் காணப்படுகிறது. இவ்வுருவத்தின் கண்கள் உருண்டு காணப்படுகிறது இவ்வுருவம் கடவுள் அல்லது தலைவனாக இருக்கலாம்

மேல்சித்தாமூர் எண் 2 அகழாய்வுக் குழியில் சுடுமண்ணால் ஆன பெண் உருவம் ஒன்று கிடைத்தது. இது சிந்துவெளியில்

கிடைத்த தாய்த் தெய்வத்தின் உருவ அமைப்பை உடையது.

இவ்வகழாய்வில் பல்வேறு வகை மணிகளும் கிடைத்துள்ளன. இரும்பினால் ஆன கத்தி , குறுவாள், குதிரை இலாடம், வெட்டுக்கத்தி, அம்பு முனைக்கருவி மற்றும் செம்பினாலான மயில் பொம்மை ஒன்றும் கிடைத்தன. அழகும் வனப்பும் மிக்க இம்மயில் பொம்மை இரும்புக் காலத்தைச் சார்ந்ததாக இருக்கலாம்.

**மட்கலன்கள்**

மேல் சித்தாமூர் அகழாய்வில் கறுப்பு சிவப்பு, சிவப்பு, கறுப்பு, சொரசொரப்பான சிவப்பு மட்கல ஓடுகள் பல கண்டுபிடிக்கப்பட்டன. இவற்றுள் சிலவற்றில் கீறல் குறியீடுகளும் உள்ளன. மட்கலன்களில் சிறிய மற்றும் பெரிய அளவுடைய பாணைகளும் அடங்கும்.



# 52. திருமயம் - இராமநாதபுரம் வட்டங்களில் தொல்லியல் தடயங்கள்

ஆ. ராஜா,
தஞ்சாவூர்

புதுக்கோட்டை மாவட்டம் பொன்னமராவதி மற்றும் திருமயம் வட்டாரத்தில் நடத்க பெற்ற கள ஆய்வுகளில் இரும்புக்காலப் பண்பாட்டுச் சின்னங்கள் பல கண்டறியப்பட்டுள்ளன.

## கொள்ளுப்பட்டி

பெருங்கற்கால கற்குவை (Cairns) வகையைச் சார்ந்த ஈமக்காடு சுமார் இரண்டு ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றது. அது மட்டுமன்றி கருப்பு சிவப்புநிற மட்பாண்ட ஓடுகள், கருப்பு நிற மட்பாண்ட ஓடுகள் மற்றும் இரும்புக் கழிவுப் பொருட்களும் காணப்படுகின்றன.

## செவலூர்

இவ்வூர் புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டத்தில் உள்ளது. பொன்னமராவதிக்கு வடக்கே கொன்னையூர், தேரடிமலம்பட்டி வழியாக புதுக்கோட்டைச் சாலையில் 12கிமீ தொலைவில் செவலூர் அமைந்துள்ளது. இவ்வூரின் மேற்கு புறத்தில் அரை கிலோ மீட்டர் தொலைவில் உள்ள செவலூர் கண்மாய்க்கருகே இரும்புக்காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு நிற மட்பாண்ட ஓடுகள் உடைந்த நிலையில் சுமார் 1 ஏக்கர் நிலப்பரப்பில் காணப்படுகின்றன

## நெடுகல் (Menhir)

செவலூர் கண்மாய்க்கருகில் பெருங்கற்காலத்தைச் சார்ந்த [இரும்புக்காலம்] நெடுகள் (Menhir) ஒன்று உள்ளது. இக்கல் தரைக்குமேல் 21/4 மீட்டர் உயரத்தையும், 90 செ.மீ அகலத்தையும், 25 செ.மீ. தடிமத்தையும் கொண்டுள்ளது. நெடுகல்லின்

அடிப்பகுதி விரிந்தும், மேல்பகுதி சற்று குறுகிய நிலையிலும் உள்ளது.

### கருப்புக்குடிப்பட்டி

புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டம் பொன்னமராவதியிலிருந்து தெற்கே சிங்கம்புணரிச் சாலையில் 10கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரில் உள்ளது "நத்தம்" என்ற இடத்தில் இரும்புக்காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு மட்பாண்ட ஓடுகள் பரவலாகக் காணப்படுகிறது. இவ்வூரின் கிழக்குப்புறத்தில் கண்டனிக்கண்மாய் உள்ளது இக்கண்மாய்க்கருகில் ஈமத்தாழிகள் (Urns) உடைந்து சிதைவுற்ற நிலையில் காணப்படுகின்றன.

### பிச்சக்காலன்பட்டி

புதுக்கோட்டை மாவட்ம் திருமயம் வட்டம், வார்பட்டுவிலிருந்து மேற்கே 4 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இவ்வூரில் உள்ள தொடக்கப்பள்ளிக்கு கிழக்குப்புறத்தில் இரும்புக் காலத்தைச் சார்ந்த ஈமத்தாழிகள் காணப்படுகின்றன. உடைந்த நிலையிலுள்ள ஈமத்தாழியினுள் கருப்பு சிவப்பு மட்பாண்டங்கள், கிண்ணங்கள் மற்றும் எலும்புத் துண்டுகள் காணப்படுகின்றன இவற்றை இவ்வூர் மக்கள் மதமதக்கத்தாழி என்று கூறுகின்றனர்.

### வேந்தன்பட்டி

பொன்னமராவதியிலிருந்து மேற்கே பிரான்மலைச் செல்லும் சாலையில் 7.கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. இவ்வூரின் மேற்கே ஏரிக்கரைக்கருகே இரும்புக்காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு நிற மட்பாண்ட ஓடுகள் , தாங்கிகள் மற்றும் தாழிகளின் உடைந்த துண்டுகள் சுமார் 1 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றன.

### ராராபுரம் காலனி

புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டம், குளமங்கலத்திற்கு வடக்கே 2. கி.மீ. தொலைவில் இவ்வூர்

அமைந்துள்ளது. இவ்வூரின் கிழக்குப்புறத்தில் இரும்புக்கால ஈமக்காடு காணப்படுகிறது இங்கு கல்வட்டம் (Stone Cricles) ஒன்றும் ஈமத்தாழிகள் உடைந்த நிலையிலும் காணப்படுகின்றன இதற்கு அருகே நிலம் விவசாயத்திற்காக பண்படுத்தியபோது 25க்கும் மேற்பட்ட மூடுகற்கள் தோண்டி எடுக்கப்பட்டுள்ளன. அதுமட்டுமல்லாமல் 2 ஏக்கர் பரப்பளவில் இரும்புக் காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு நிற மட்பாண்ட ஓடுகள், கிண்ணங்கள், ஈமத்தாழிகளின் உடைந்த துண்டுகளும் காணப்படுகின்றன.

**பாரிநகர்**

புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டத்தில் வேந்தன் பட்டியிலிருந்து வடமேற்கே பிரான் மலை செல்லும் சாலையில் இவ்வூர் உள்ளது. இங்குள்ள கொங்கர்குன்று அருகே ஒரு முருகன் கோயில் உள்ளது. இவ்வூருக்கு கிழக்கே நாட்டுக்கல் காடு என்றப் பகுதியில் கருப்புசிவப்பு நிறப் பாணையோடுகள் சுமார் 2 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றன.

இவ்வூரின் மேற்குப்பகுதியில் உள்ள செங்கடங்கு என்ற இடத்தில் கற்குவை (Cairns) வகையைச் சார்ந்த ஈமக்காடு சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகிறது இக்கற்குவைகளில் சில அழிந்த நிலையில் காணப்படுகின்றன. ஒரு சில மட்டும் அழியாத நிலையில் கற்கள் குவிக்கப்பட்ட நிலையில் இருக்கின்றன ஈமத்தாழிகள் உடைந்த நிலையில் இருக்கின்றன. இவை தரைக்குக்கீழ் காணப்படுகின்றன. மழையால் ஏற்பட்ட மண்ணரிப்பால் அரிக்கப்பட்டு ½ அடி தரைக்கு மேல் தெரிகின்றது இங்கு முதலில் தாழியை தரைக்குக் கீழ் புதைத்து அதற்கு மேல் சிறு சிறு கற்களைக் கொண்டு குவித்து வைத்துள்ளனர். இந்த அமைப்பிலான ஈமச்சின்ன அமைப்பு முறையை இங்கு நேரடியாக பக்கவாட்டுத் தோற்றத்தில் காணமுடிகிறது.

இங்கு ஒரு கல்வட்டம் உள்ளது. அந்த கல்வட்டமானது 91/2 மீ. விட்டத்தைக் கொண்டு காணப்படுகிறது இக்கல்வட்டம் கருங்கற்களால் வட்டவடிவில் புதைக்கப்பட்டுள்ளது.

**கூடலூர்**

புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டத்தில் சித்தூரிலிருந்து தெற்கே 3 கி.மீ. தொலைவில் கூடலூர்

அமைந்துள்ளது. இவ்வூரின் கண்மாய் அருகே இரும்புக்காலத்தைச் சேர்ந்த உடைந்த ஈமத்தாழிகள் மற்றும் கருப்புநிற மட்பாண்ட ஓடுகள் சுமார் 1 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றன.

### திருக்களம்பூர்

புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டம், பொன்னமராவதியிலிருந்து தெற்கே வேந்தன்பட்டி வழியாக சிங்கம்புணரி செல்லும் 12 கிமீ தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. ஊரின் மேற்குப் புறத்தில் செவக்காடு ஏரி உள்ளது இதன் அருகே பெரிய மருந்தவயல் என்ற வயலில் இரும்புக்கால ஈத்தாழியின் உடைந்த பாகங்கள் மற்றும் கருப்பு சிவப்பு நிற பானையோடுகள், கருப்புநிற பானையோடுகள், கிண்ணங்களின் உடைந்த பாகங்கள் ஆகியவை காணப்படுகின்றன. இவற்றை இவ்வூர் மக்கள் "மதமதக்கத்தாழி" என்று கூறுகின்றனர்.

### வளையப்பள்ளம்

சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம் பொன்னமராவதிக்கு கிழக்கே 12 கி.மீ. தொலைவில் சூரமலை அடிவாரத்தில் அமைந்துள்ளது. ஊரின் மேற்கே 1 கி.மீ. தொலைவில் சுடலைக்காடு என்ற இடத்தில் சுமார் 5 ஏக்கர் பரப்பளவில் இரும்புக்காலத்தைச் சேர்ந்த கருப்பு சிவப்பு நிற பானையோடுகள் மற்றும் கருப்பு நிற பானையோடுகள் காணப்படுகின்றன. இவை இரும்புக்காலத்தைச் சார்ந்த வாழ்விடப் பகுதியாக இருக்கலாம்.

### வேலங்குடி

சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம் பொன்னமராவதியிலிருந்து தென்கிழக்கே, பூலாங்குறிச்சி வழியாகத் திருப்பத்தூர் செல்லும் சாலையில் 16 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது. ஊரின் தெற்கே 1. கி.மீ. தொலைவில் வேலங்காடு ஏரி உள்ளது. இதற்கருகே இரும்புக் காலத்தைச் சேர்ந்த கருப்பு சிவப்பு நிற பானையோடுகள், சிவப்பு நிற பானையோடுகள் மற்றும் ஈமத்தாழியின் உடைந்த பாகங்களும் காணப்படுகின்றன.

| வ.எண் | இடம் | மாவட்டம் | வட்டம் | தொல்பொருட்கள் |
|---|---|---|---|---|
| 1 | செவலூர் | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புகால நெடுகல், கருப்பு சிவப்பநில, கருபயநிற பானையோடுகள பளபளபபுடன் |
| 2. | கருப்புக்குடிப்பட்டி | புதுக்கோட்டை | திருமயம் | இரும்பக்கால ஈமத்தழி, கருப்பு சிவப்ப நிறப் பானையோடுகள் |
| 3. | பிச்சக்காலன்பட்டி | புதுக்கோட்டை | திருமயம் | இரும்பக்கால ஈமத்தாழி கருப்பு சிவப்பநிறப் பானையோடுகள், கிண்ணங்கள் மற்றும் எலும்புத் துண்டுகள். |
| 4. | வேந்தன்பட்டி | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால கருப்பு, சிவப்பு நிறப்பானை யோடுகள், தாங்கிகள், ஈமத்தாழியின உடைந்த பாகங்கள். |
| 5, | ராராபுரம் | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால கல்வட்டம், ஈமத்தாழிகள், மூடுகற்கள், கறுப்பு சிவப்புநிறப் பானையோடுகள், கிண்ணங்கள் |
| 6, | பாரி நகர் | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால கல்வட்டகம் கற்குவைகள், ஈமத்தாழிகள், கருப்பு சிவப்பு நிறப் பானையோடுகள் |
| 7, | கூடலூர் | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால ஈமத்தாழிகள், கருப்பு சிவப்பு நிறப், பானையோடுகள் |

| | | | | |
|---|---|---|---|---|
| 8, | திருக்களம்பூர் | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால ஈமத்தாழிகள், கருப்பு சிவப்பு நிற, கருப்பு நிறப் பானையோடுகள், கிண்ணங்கள், |
| 9. | ஏனாதி | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால கருப்பு கிண்ணங்கள், இரும்புக்கால கருப்பு சிவப்புநிற, கருப்புநிற பானையோடுகள். |
| 10, | நல்லூர் | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால கருப்பு சிவப்புநிறப் பானையோடுகள் |
| 11, | குழிபிறை | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால கருப்பு சிவப்பு நிறப் பானையோடுகள் |
| 12. | கீழக்குறிச்சி | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால ஈமத்தாழிகள், கருப்பு சிவப்புநிறப் பானையோடுகள். |
| 13. | மூலங்குடி | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால கல்வட்டங்கள், கற்குவைகள், நெடுகற்கள், கருப்பு சிவப்புநிற, கருப்பு நிறப் பானையோடுகள் மற்றும் கிண்ணங்கள் |
| 14. | கண்டியநத்தம் | புதுக்கோட்டை | திருமயம் | இரும்புக்கால கருப்பு சிவப்புநிறப் பானையோடுகள் |
| 15. | உரத்துப்பட்டி | சிவகங்கை | திருப்பத்தூர் | இரும்புக்கால ஈமத்தாழிகள், கருப்பு சிவப்புநிற, கருப்புநிற பானையோடுகள் மற்றும் எலும்புத்துண்டுகள். |

| 16. | கல்லங்காளப்பட்டி | சிவகங்கை | திருப்பத்தூர் | இரும்புக்கால ஈமத்தாழிகள், கருப்பு சிபப்புநிற, கருப்புநிறப் பானையோடுகள். |
|---|---|---|---|---|
| 17. | செவ்வூர் | சிவகங்கை | திருப்பத்தூர் | இரும்புக்கால நெடுகல், கருப்பு சிவப்புநிற, கருப்பு நிற பானையோடுகள், கிண்ணங்கள் |
| 18. | வளையப்பள்ளம் | சிவகங்கை | திருப்பத்தூர் | இரும்புக்கால கருப்புசிவப்பு நிறப் பானையோடுகள் |
| 19. | வேலங்குடி | சிவகங்கை | திருப்பத்தூர் | இரும்புக்கால ஈமத்தாழிகள், கருப்பு சிவப்புநிற, சிவப்புநிற பானையோடுகள். |
| 20. | கண்டராயன்பட்டி | சிவகங்கை | திருப்பத்தூர் | இரும்புக்கால கருப்பு சிவப்புநிற, சிவப்பு நிற பானையோடுகள். |
| 21. | புது வளைவு | சிவகங்கை | திருப்பத்தூர் | இரும்புக்கால கருப்பு சிவப்புநிற பானையோடுகள். |
| 22. | காரையூர் | சிவகங்கை | திருப்பத்தூர் | இரும்புக்கால ஈமத்தாழிகள், கருப்பு சிவப்புநிற, கருப்புநிற பானையோடுகள் |

## இராமநாதபுரம் வட்டம்

### நுண்கற்கால இடங்கள்

இராமநாதபுரம் வட்டத்தில் நூண்கற்காலத்தைச்சார்ந்த ஆய்விடங்கள் 12 கண்டறியப்பட்டுள்ளன, இப்பண்பாட்டிடங் களின் நிலவியல் தன்மையை ஒப்பிட்டு பார்க்கும்போது இதற்கு முன்பு இம்மாவட்டத்தின் கமுதி, முதுகுளத்தூர், சாயல்குடி, வட்டங்களில் முனைவர் வி. செல்வகுமார் கண்டறிந்த நுண்கற்கால பண்பாட்டிடங்களை இவை ஒத்துள்ளன அதாவது நுண்கற்கால பண்பாட்டுச்சான்றுகள் செம்மன் படிவுகளிலும் வண்டல் மண் படிவுகளிலும் காணப்படுகின்றன. இராமநாதபுர வட்டத்தில் தற்போது மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வுகளிலும் தெற்கு தரவை என்ற ஊரில் காணப்பட்ட செம்மண் தேரிப் பகுதியில் மண் சுமார் 3 மீட்டர் ஆழத்திற்கு தோண்டி எடுக்கப் பட்டுள்ளது. அத்தகைய 3 மீட்டர் ஆழத்தில் நுண்கற்கால குவார்ட்ஸ் செதில்கள் மற்றும் செட்குவார்ட்ஸ் வகை செதில்கள் பரவலாக காணப்படுகின்றன.

மேலும் 11 இடங்களில் வண்டல் மண் படிவுகளில் நுண் கற்காலச் செதில்கள் காணப்படுகின்றன தரை மேற்பரப்பில் காணப்பட்ட வண்டல் படிவுகளில் தேவிப்பட்டினம் பிரபுக்களூர் ஆகிய இடங்களில் காணப்பட்ட நுண்கற்கால செதில்களோடு துளையிடும் கருவி கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கது மேலும் இவ்வட்டத்தில் அம்மன் கோவில், வண்ணாங்குண்டு, களரி, பழஞ்சிறை, கோனேரி தென்னவனூர் ஆகிய ஊர்களிலும், பரமக்குடி வட்டத்தில் சிறுவயல், அரசனூர் ஆகிய ஊர்களிலும் காணப்படும். நுண்கற்கால பண்பட்டிடங்களில் சுமார் 2 மீ ஆழத்தில் தோண்டப்பட்ட மண்ணில் நுண்கற்கால செதில்கள் காணப்பட்டன.

### இரும்புக்கால இடங்கள்

### தெற்குத் தரவை

இராமநாதபுரம் மாவட்டம், இராமநாதபுரம் வட்டத்தில் இராமநாதபுரத்திலிருந்து தென்கிழக்கு சுமார் 6. கி.மீ. தொலைவில்

இவ்வூர் அமைந்துள்ளது. ஊரின் கிழக்கே செம்மண் தேரி மேடாக உள்ளது. இங்கு இரும்புக் காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு நிற பானையோடுகள் காணப்படுகின்றன. எனவே இவ்விடம் இரும்புக் காலத்தைச் சார்ந்த வாழ்விடப்பகுதியாகும்

### கீழச்சீத்தை

இராமநாதபுரத்திலிருந்து உதிரகோசமங்கை செல்லும் சாலையில் சுமார் 2. கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது இவ்வூரின் கிழக்கே சாலை ஓரத்தில் வாய்க்கால் தோண்டப்பட்டுள்ளது. அவற்றில் இரும்புக் கற்காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழியின் உடைந்த துண்டுகள். கருப்பு - சிவப்பு நிற பானையேடுகள் காணப்பட்டன. ஊடைந்த தாழியின் ஓடானது கருப்பு நிறத்தில் காணப்படுகிறது. இவற்றைத்தவிர உடைந்த தட்டு ஓடு குடுவை ஓடுகள் எலும்புத் துண்டுகளும் காணப்படுகின்றன.

### இரா. காவனூர்

இராமநாதபுரத்திலுந்த வடமேற்கே சுமார் 10 கி.மீ தொலைவில் இவ்வூர் உள்ளது. இங்குள்ள வயல்வெளிப்பகுதியில் விவசாயத்திற்காக நிலத்தைப் பண்படுத்தியபொழுது முதுமக்கள் தாழியும் அதனுள் பானைகள் மற்றும் கிண்ணங்களும் இருந்ததாக இவ்வூர் மக்கள் கூறுகின்றனர். இப்பொழுது மேற்பரப்பில் ஒரு சில கருப்பு - சிவப்பு மற்றும் கருப்பு நிற பானையேடுகள் தென்படுவதை காணமுடிகின்றது.

### இலந்தகூட்டம்

தேவிப்பட்டினத்திலிருந்து சித்தர் கோட்டை செல்லும் சாலையில் சுமார் 4 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள இக்கிராமத்தில் ஊரின் தெற்கே சாலைக்கு அருகில் வாய்க்கால் தோண்டப்பட்டுள்ளது. அதில் இரும்புக்காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழியின் ஓடுகள், கருப்பு - சிவப்பு நிற, கருப்பு மற்றும் சிவப்பு நிற பானையோடுகள் உடைந்த கிண்ணங்களும் காணப்படுகின்றன.

## வன்னிக்குடி

இராமநாதபுரத்திலிருந்து தெற்கே சுமார் 8 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. ஊரின் கிழக்கே நீர் வடிகால் பகுதி உள்ளது. இப்பகுதியில் முதுமக்கள் தாழியின் உடைந்த துண்டுகள் கருப்பு - சிவப்பு நிற, கருப்பு நிற மற்றும் சிவப்பு நிறப் பானையோடுகள் சுமார் 3 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றன. இவ்விடம் இரும்புக் காலத்தை சார்ந்தவையாகும்.

## உத்திரகோசமங்கை

இராமநாதபுரத்திலிருந்து சுமார் 15 கி.மீ தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது இங்கு மங்கள நாதர் கோவில் உள்ளது. இக்கோவிலின் வளாகத்திற்குள் இரும்புக்காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு நிற, கருப்பு நிற மற்றும் சிவப்பு நிற பானையோடுகள் காணப்படுகின்றன, எனவே இவ்விடமானது வாழ்விடப்பகுதியாக இருந்திருக்கலாம் என்று தெரிகிறது.

## நல்லிருக்கை

இராமநாதபுரத்திலிருந்து மட்டியாரேந்தல் செல்லும் சாலையில் சுமார் 24 கி.மீ. தொலைவில் இவ்வூர் அமைந்துள்ளது ஊரின் வடக்குப் புறத்தில் வயற்பகுதியில் இரும்புக்காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழியின் ஓடுகள் கிண்ணங்கள், கருப்பு - சிவப்பு நிற பானையேடுகள் மற்றும் கருப்பு நிற பானையோடுகள் அதிகளவில் காணப்படுகின்றன.

## லாந்தை

இராமநாதபுரத்திலிருந்து பரமக்குடி செல்லும் சாலையில் சுமார் 8. கி.மீ தொலைவில் இவ்வூர் உள்ளது ஊரின் மேற்கு புறத்தில் கண்மாய் உள்ளது. இக்கண்மாய்க்கு அருகில் கருப்பு - சிவப்பு நிறப் பானையோடுகள், கருப்பு நிறப் பானையோடுகள் மற்றும் இரும்பு உருக்குக் கழிவுகள் உடைந்த கிண்ணங்கள் ஆகியவைப் பரவலாக சுமார் 15 ஏக்கர் பரப்பளவில் காணப் படுகின்றன. இது இரும்புக்காலத்தைச் சார்ந்த வாழ்விடப் பகுதியாகும். தற்பொழுது வாழ்விடப்பகுதியானது சற்று மேடாக உள்ளது.

### அ. புத்தூர்

இராமநாதபுரத்திலிருந்து பரமக்குடி செல்லும் சாலையில் சத்திரக்குடி தெற்கே இவ்வூர் அமைந்துள்ளது. இவ்வூரின் வடமேற்கே வயல்பகுதியில் இரும்புக்காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழியின் ஓடுகள், கருப்பு - சிவப்பு நிற, கருப்பு நிற மற்றும் சிவப்பு நிறப் பானையோடுகள் காணப்படுகின்றன இவ்விடம் சுமார் 3 ஏக்கர் பரப்பளவை கொண்டுள்ளமையாக இருக்கின்றது.

### பெருங்களூர்

இராமநாதபுர மாவட்டம், பரமக்குடி வட்டத்திலுள்ள இவ்வூர் இராமநாதபுரத்திலிருந்து வடக்கே அரியங்கோட்டை வழியாக சாலையில் சுமார் 13 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது இவ்வூரிலுள்ள பெருங்களூர் ஊரணி தோண்டும் பொழுது அதிலிருந்து முதுமக்கள் தாழிகள் கருப்பு - சிவப்பு நிறப் பானையோடுகள் மற்றும் சிவப்பு நிறப் பானையோடுகள் எடுக்கப்பட்டதாக இவ்வூர் மக்கள் கூறுகின்றனர்.

### சிறுவயல்

பரமக்குடி வட்டத்திலுள்ள சிறுவயல் இராமநாதபுரத்தி லிருந்து சுமார் 17 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. ஊரின் மேலக்குடியிருப்பில் உள்ள குளத்தில் இரும்புகாலத்தைச்சார்ந்த தாழிகளின் ஓடுகள் , கருப்பு - சிவப்பு நிற கருப்பு நிற மற்றும் சிவப்பு நிற பாணையோடுகள் காணப்படுகின்றன, கருப்பு - சிவப்பு நிற பானையோடு ஒன்றில் குறியீடு உள்ளன.

### சேமனூர்

பரமக்குடி வட்டத்தில் இராமநாதபுரத்தில்லிருந்து பரமக்குடி செல்லும் சாலையில் சுமார் 27 கி.மீ தொலைவில் சேமனூர் உள்ளது. ஊருக்கு வடகிழக்கே புதிதாகக் குளம் தோண்டப் பட்டுள்ளது. சுமார் 2 மீட்டர் ஆழம் வரை தோண்டப்பட்டுள்ள அக்குளத்தில் இரும்புக்காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழிகளின் ஓடுகள், தட்டுகள் கிண்ணங்கள், கருப்பு சிவப்பு நிற

பானையோடுகள் வெளிக்கொணரப் பட்டுள்ளன. மட்கிய எழும்புத்துண்டுகளும் பாணப்பட்டன.

### சத்திரக்குடி

பரமக்குடி வட்டத்திலுள்ள சத்திரக்குடி இராமநாதபுரத்திலிருந்து பரமக்குடி செல்லும் சாலையில் சுமார் 22 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது. ஊரின் மேற்கே திடல் என்ற இடத்திற்கு அருகே சமத்துவபுரம் கட்டுவதற்காக மண் தோண்டப்பட்டுள்ளது அதில் இரும்புக் காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழிகளின் ஓடுகள் கருப்பு - சிவப்பு நிறப் பானையோடுகள் மற்றும் எலும்புத் துண்டுகளும் காணப்பட்டன

### தீயனூர்

பரமக்குடி வட்டத்திலுள்ள இவ்வூரானது இராமநாதபுரத்திலிருந்து சுமார் 18 கி.மீ. தொலைவில் உள்ளது. தற்பொழுது மக்கள் வசித்துவரும் இந்த ஊரிருக்கையில் இரும்புக்காலத்தைச் சார்ந்த கருப்பு - சிவப்பு நிற பாணையோடுகள் மற்றும் கிண்ணங்கள் ஓடுகள் ஆகியவை பரவாலாகக் காணப்படுகின்றன இரும்புக் காலத்தைச் சார்ந்த வாழ்விடப்பகுதியாகும் வாழ்விடப்பகுதியானது 1 மீட்டர் உயரமுள்ளவையாக உள்ளது

### தென்னவனூர்

பரமக்குடி வட்டத்தில் இராமநாதபுரத்திலிருந்து பரமக்குடி செல்லும் சாலையில் சுமார் 15 கி.மீ தொலைவில் இவ்வூர் உள்ளது ஊரின் கிழக்கே திடல் என்ற இடத்தில் கருப்பு - சிவப்பு நிற பானையோடுகள் கருப்பு நிறப் பானையோடுகள்- சிவப்பு வண்ணம் தீட்டப்பட்ட பானையோடுகள், கிண்ணங்கள், தட்டுகள் போன்றவை சுமார் 15 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகின்றன, இது இரும்புக் காலத்தைச் சார்ந்த வாழ்விடப்பகுதியாகும், வாழ்விடப்பகுதி யானது சற்று மேடாகவும், கருவை மரம் நிறைந்த பகுதியாகும் உள்ளது

### வைரவனேந்தல்

பரமக்குடி வட்டத்தில் இராமநாதபுரத்திலிருந்து சுமார் 18 கி.மீ தொலைவில் வைரவனேந்தல் உள்ளது ஊரின் மேற்குப்புறத்தில்

பார்ப்பான் குளம் என்ற இடத்தில் முதுமக்கள் தாழிகள் மற்றும் கருப்பு - சிவப்பு நிறப் பானையோடுகள் காணப்படுகின்றன இப்பகுதியில் கறுவைக் காடுகள் அதிகமாக உள்ளதால் இடத்தை முழுமையாகக் காணமுடியவில்லை

## பெருஞ்சையூர்

திருவாடனை வட்டத்தில் இவ்வூரானது திருவாடனையிலிருந்து இராமநாதபுரம் செல்லம் சாலையில் சுமார் 4 கி மீ தொலைவில் இவ்வூர் உள்ளது இவ்வூரின் வடக்குப் புறத்தில் குளம் உள்ளது இக்குளத்தைத் தூர் வாரும் பொழுது இரும்புக் காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள், கருப்பு - சிவப்பு நிறப் பானையோடுகள் எலும்புத் துண்டுகளும் வெளிக்கொணரப் பட்டுள்ளன குளமானது சுமார் 1 மீ ஆழம் தோண்டப்பட்டுள்ளமையால் மண் அடுக்கில் உள்ள பானையோடுகளை காணமுடிந்தது

# அட்டவணை

## நுண்கற்கால இடங்கள்

| வ.எண் | இடம் | மாவட்டம் | வட்டம் | தொல்பொருட்கள் |
|---|---|---|---|---|
| 1 | தெற்குதரவை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 2. | தேவிப்பட்டினம் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 3. | அம்மன் கோவில் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 4. | வண்ணாங்குண்டு | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 5. | குளரி | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 6. | பழஞ்சிறை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 7 | கோனேரி | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 8. | தென்னவனூர் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 9 | செலுவை | இராமநாதபுரம் | திருவாடனை | நுண்கற்கருவிகள் |
| 10 | சிறுவயல் | இராமநாதபுரம் | பரமக்குடி | நுண்கற்கருவிகள் |
| 11. | அரசனூர் | இராமநாதபுரம் | பரமக்குடி | நுண்கற்கருவிகள் |
| 12 | பிரபுக்களூர் | இராமநாதபுரம் | முதுகுளத்தூர் | நுண்கற்கருவிகள் |

## இரும்புக்கால இடங்கள்

| வ.எண் | இடம் | மாவட்டம் | வட்டம் | தொல்பொருட்கள் |
|---|---|---|---|---|
| 1 | கீழச்சீத்தை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 2. | இரா. காவனூர் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 3 | தெற்குத்தரவை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 4. | இலந்துக்கூட்டம் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 5. | வன்னிக்குடி | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 6. | உத்திரகோச மங்கை | இராமநாதபுரம் இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் | இராமநாதபுரம் | |

| 7. | நல்லிருக்கை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால வாழ்விடம் மற்றும் இரும்பு உருக்கு தொழிற்கூடம் |
|---|---|---|---|---|
| 8. | லாந்தை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 9. | அபுத்தூர் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 10. | பெருங்களூர் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 11. | சிறுவயல் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 12. | சேமனூர் | இராமநாதபுரம் | பரமக்குடி | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 13. | சத்திரக்குடி. | இராமநாதபுரம் | பரமக்குடி | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 14. | தீயனூர் | இராமநாதபுரம் | பரமக்குடி | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 15. | தென்னவனூர் | இராமநாதபுரம் | பரமக்குடி | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 16. | வைரனேந்தல் | இராமநாதபுரம் | முதுகுளத்தூர் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 17. | பெருஞ்சையூர் | இராமநாதபுரம் | திருவாடனை | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |
| 18. | கொழுந்துறை | இராமநாதபுரம் | முதுகுளத்தூர் | இரும்புக்கால முதுமக்கள் தாழிகள் |

## வரலாற்று ஆரம்பக்காலம் மற்றும் இடைக்கால இடங்கள்

| வ.எண் | இடம் | மாவட்டம் | வட்டம் | தொல்பொருட்கள் |
|---|---|---|---|---|
| 1 | தெய்வேந்திர நல்லூர் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | வரலாற்று ஆரம்பகால வாழ்விடம் |
| 2 | அனுமநேரி | இராமநாதபுரம் | பரமக்குடி | வரலாற்று ஆரம்பகால வாழ்விடம் |
| 3. | பெருஞ்சையூர் | இராமநாதபுரம் | திருவாடனை | இடைக்காலம் |
| 4 | கற்காகுடி | இராமநாதபுரம் | திருவாடனை | இடைக்கால வாழ்விடம் |
| 5. | அம்மன் கோவில் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 6 | உத்தரவை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 7. | பள்ளச்சேரி | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 8. | கிருஷ்ணபுரம் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 9. | வண்ணாங்குண்டு | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 10. | வழுதூர் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 11. | பொக்கனாரேந்தல் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 12 | ஆனைக்குடி | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 13. | களரி | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 14 | சுமைதாங்கி | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 15. | மேமடை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 16 | பழஞ்சிறை | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 17 | முதுநாள் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 18 | வன்னிவயல் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 19 | வன்னிகுடி | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 20 | வித்தனூர் | இராமநாதபுரம் | இராமநாதபுரம் | இடைக்கால வாழ்விடம் |
| 21 | கன்னங்குடி | இராமநாதபுரம் | பரமக்குடி | இடைக்கால வாழ்விடம் |
| 22 | வயலூர் | இராமநாதபுரம் | பரமக்குடி | இடைக்கால வாழ்விடம் |
| 23 | எட்டிவயல் | இராமநாதபுரம் | பரமக்குடி | இடைக்கால வாழ்விடம் மற்றும் சீன நாட்டுப் பானை ஓடுகள், இரும்பு உருக்கு தொழிற்கூடம் |
| 24 | வீரவனூர் | இராமநாதபுரம் | பரமக்குடி | இடைக்கால வாழ்விடம் மற்றும் சீன நாட்டுப் பானை ஓடுகள் |
| 25. | பி. முத்துசெல்லாபுரம் | | இராமநாதபுரம் | பரமக்குடி இடைக்கால வாழ்விடம் மற்றும் சீன நாட்டுப் பானை ஓடுகள் |
| 26. | பிரபுக்களூர் | இராமநாதபுரம் | முதுகுளத்தூர் | இடைக்கால வாழ்விடம் மற்றும் சீன நாட்டுப் பானை ஓடுகள் |

# 53. சம்புவராயரின் அரிய தமிழ்க்காசு

ஆறுமுக சீதாராமன்,
தஞ்சாவூர்

சம்புவாயர்கள் கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் தனித்து அரசு ஆளும் தகுதியைப் பெற்றுவிட்டனர் 14-ஆம் நூற்றாண்டு இறுதிவரை சம்புவராயர் காசுகள் புழக்கத்தில் விட்டனர். மன்னன் பெயரோடு சம்புவராயர் உள்ள காசுகள் கண்டுபிடிக்கப்படவில்லை சில காசுகளில் உள்ள உருவங்கள் சம்புவராயர் அரசுச் சின்னத்துடன் ஒத்து உள்ளதால் சம்புவராயர்கள் வெளியிட்டதாக அவை கருதப்படுகிறது ஆனால் இப்பொழுது மன்னன் பெயரோடு கிடைத்துள்ளது

காசின் முன்பக்கத்தில் இடதுபக்கம் நோக்கி நிற்கும் காளையும், காளையின்மேல் சூரியன், சந்திரன் உருவங்களும் காணப்படுகின்றன பின்பக்கத்தில் 'ணாாயண' [நாராயனா] என்று இரண்டு வரிகளில் தமிழ் எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது

கிடைத்த இடம் திருக்கோவிலூர், உலோகம்: செட்டி, எடை: 1.5 கிராம், பெயரின் நடுவே செங்குத்தாக பெரிய குத்துவாள் ஒன்று உள்ளது குத்துவாளிற்கு மாலை போடப்பட்டுள்ளது 'ாா' என்ற எழுத்துகள் கூட்டெழுத்தில் உள்ளது இக்காசு [கி.பி 1356-1379] மூன்றாம் இராசநாராயண சம்புவராயர் வெளியிட்டதாகக் கருதலாம்

சம்புவராயர்களின் அரச சின்னம், கொடி காளை சின்னமாகும் சம்புவராயர்களின் பல கல்வெட்டுகளில் 'இராசனாராயன' என்றே மன்னரின் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது திண்டிவனம் வட்டம், புலயனூரில் மூன்றாம் இராச நாராயன சம்புவராயர் 4-வது ஆண்டுக் கல்வெட்டு ஆறடி உயரமுடைய பெரிய கற்பலைகையில் எழுதி நடப்பட்டுள்ளது இப்பலகையில் காளை மாட்டின் உருவம் பெரியதாகச் செதுக்கப்பட்டு இருபுறமும் சுந்திர, சூரியரும் பொறிக்கப்பட்டுள்ளது இதன் கீழ் கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது

கற்பலகையில் உள்ள காளை மாட்டின் உருவத்தையும் கல்வெட்டையும், காசில் உள்ள காளை மாட்டின் உருவத்தையும் மன்னரின் பெயரையும் ஒப்பிட்டுப் பார்க்கலாம்

# 54. மாபூஸ்கானின் வெள்ளிக்காசு

ப. வெங்கடேசன்,
காவேரிப்பாக்கம்

ஆர்க்காட்டு நவாப் அன்வருதீன்கானின் மூத்த மகன் 'மாபூசுகான்', இளைய மகன் 'முகம்மது அலி' ஆவார். அன்வருதீன்கான் தன் மகன் மாபூசுகானைத் துணை நவாபாக்கி காஞ்சிபுரத்தின் நிர்வாகத்தைக் கவனிக்க நியமித்தார். மற்றொரு மகன் முகம்மது அலியை திருவதிகை மற்றும் புவனகிரியின் ஆளுநராக்கினார். மாபூசுகான் ஆர்க்காட்டிலிருந்து காஞ்சிபுரம் பகுதிகளை ஆண்ட காலத்தில் 1752இல் ஆர்க்காட்டில் அச்சடித்தப் பல வெள்ளிக் காசுகளை வெளியிட்டுள்ளார். அவற்றில் ஒரு வெள்ளிக் காசு, கிருஷ்ணகிரி மாவட்டம், உப்பாரப்பட்டி என்னும் ஊரில் 'சாந்தி தனஞ்செயன்' என்பவரின் நிலத்தில் மேற்பரப்பு ஆய்வில் கண்டெடுக்கப்பட்டது.

இக்காசின் முன் பக்கத்தில் 1173, முகம்மத் சீராஜுத்தீன், ஆலம், பிதாயே பாதுஷாயே காஜ், சாலஹ் முபார் என்று பார்சி மொழியில் பொறிக்கப்பட்டுள்ளது.

காசின் பின் பக்கத்தில் மாபூஸ், பன்த், லஹ் ஜுலூஸ், ஜர்ப் ஆர்க்காட் என பார்சி மொழியில் பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வெள்ளிக் காசு இஸ்லாமியரின் ஹிஜ்ரி ஆண்டு 1173-ல் அதாவது கி.பி. 1752ல் ஆர்க்காட்டிலிருந்து வெளியிடப் பட்டுள்ளது. இக் காசின் எடை 11.450 கிராம் ஆகும்.



# 55. தமிழகச் சிற்பக் கலையின் பன்முகப் பரிமாணங்கள்

## (கோயிலூர் அதினம் அறக்கட்டளைச் சொற்பொழிவு)

ஏ. ஏகாம்பரநாதன்,
சென்னை

இந்தியாவில் சிற்பக்கலை பெரிதும் சமயச் சார்புடையதாகவே இருப்பதைக் காணலாம் இந்த மண்ணில் தோன்றிய சமயங்கள் அனைத்திலும் திருவுருவ வழிபாடு பெரிதும் போற்றப்பட்டு வந்திருப்பதே இதற்குரிய முதன்மையான காரணம் எனலாம் இத்திருவுருவங்களின் வாயிலாகச் சமயங்களின் வரலாறு, அதன் வளர்ச்சி, அதில் ஏற்பட்ட மாறுதல்கள், இறைவடிவங்களை வழிபட்ட மக்களின் பண்பாட்டுக் கூறுகள் ஆகியவற்றை அறிய இயலும் மனிதனின் ஆன்மீக உணர்வுகளை வலிமைபெறச் செய்வதற்கும், சமுதாய ஒருமைப்பாட்டினை நிலைபெறச் செய்வதற்கும் இந்த இறைத்திருவுருவங்களின் பங்களிப்பு இன்றியமையாததாகும்.

வரலாற்று அறிஞர்கள் சிற்பங்களின் தோற்றம், வளர்ச்சி, அவற்றில் காலப்போக்கில் ஏற்படுத்தப்படும் மாற்றங்கள் சிற்பங்களின் காலவரையறை போன்றவற்றை வரலாற்று அடிப்படையில் தெளிவுபடுத்துவர் பொறியியல் வல்லுநர்கள் அக்கலைப் பெட்டகங்களின் மூலப் பொருட்கள், தொழில் நுட்பங்கள் செய்முறை, அளவுமுறை போன்றவற்றை விளக்க இயலும் தத்துவப் புலமை பெற்றோர் அச்சிற்பங்கள் சார்ந்த சமயங்களின் அடிப்படைக் கருத்துகள், சிற்பங்களில் உறைந்துள்ள தத்துவங்கள் போன்றவற்றை வெளிக்கொணர்வர் கலைவரலாற்றறிஞர்கள் அவற்றின் கலைப்பாணி, கலை நுட்பங்கள், அவற்றின் தனித்தன்மை, வெவ்வேறு கால கட்டங்களில் அவை உணர்த்தும் செய்திகள் ஆகியவற்றைப் படம்பிடித்துக் காட்ட இயலும் இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவில் கலைவரலாற்று அடிப்படையில் தனித்தன்மை, எளிமையான அமைப்பு, கலையழகு, அமைதியான வடிவம், உயிரோட்டம் முதலிய பல்வேறு குணநலன்களையுடைய

கிபி 7-9 ஆம் நூற்றாண்டைய தமிழகச் சிற்பங்களுள், குறிப்பாக சோமாஸ்கந்தமூர்த்தி, சண்டேச அனுக்கிரகமூர்த்தி, பிச்சாடன மூர்த்தி ஆகிய வடிவங்கள் அறிவுறுத்தும் சில கருத்துக்கள் மட்டிலும் இடம் பெறுகின்றன.

## சோமாஸ்கந்தமூர்த்தி

சோமாஸ்கந்தமூர்த்தி என்பது சிவனும். உமையும் அமர்ந்த கோலத்தில் வீற்றிருக்க, அவர்களுக்கு நடுவில் கந்தன் அமர்ந்தவாறு அல்லது நின்றவண்ணம் காட்சிதரும் வடிவமாகும் இந்தத் திருவுருவ அமைப்பு பற்றியக் குறிப்பு முதன் முதலாவதாக கிபி. 7 ஆம் நூற்றாண்டைய திருநாவுக்கரசர் தேவாரத் திருப்பதிகம் ஒன்றில் மறைமுகமாக "செல்வியைப் பாகம் கொண்டார், சேந்தனை மகனாய் கொண்டார்"[1] எனக் கூறப்பட்டிருக்கிறது அக்காலத்தைச் சார்ந்த வடமொழி நூலாகிய அவந்திசுந்தரிகதாசாரத்தில், முதலாம் பரமேஸ்வர பல்லவ மன்னனின் பட்டத்தரசி சிவனுக்கும் உமையவளுக்கும் இடையில் வீற்றிருக்கும் கந்தனைப் போன்று ஒரு குழந்தை பிறக்க வேண்டுமென விரும்பிய செய்தி இடம்பெற்றுள்ளது[2] மேற்கூறப்பட்ட இரு இலக்கியக் குறிப்புகளைத் தவிர கிபி9 ஆம் நூற்றாண்டு வரையிலுள்ள எந்த இலக்கியங்களிலும் சோமாஸ்கந்தர் பற்றிய செய்திகள் காணப்பெறவில்லை இதற்கு மாறாக கிபி 7-9 ஆம் நூற்றாண்டுகளில் பல்லவர்களால் தோற்றுவிக்கப்பட்ட குடைவரைகள் சிலவற்றிலும் கட்டடக் கோயில்கள் பலவற்றிலும், பாண்டியர்களது திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலிலும் இச்சிற்பவடிவம் இடம் பெற்றிருத்தலைக் காணலாம்

தமிழகத்திலுள்ள சோமாஸ்கந்த வடிவங்களுள் மாமல்லை தர்மராஜரதத்தின் இரண்டாவது தளத்திலுள்ள கருவறையில் செதுக்கப்பட்டிருக்கும் கிபி 7 ஆம் நூற்றாண்டுச் சிற்பமே காலத்தால் முந்தியது எனக் கருதப்படுகிறது[3] இதில் சிவனும், உமையும் சுகாசன நிலையில் வீற்றிருக்க, கந்தன் உமையவளின் மடியில் அமர்ந்திருப்பதாக வடிக்கப் பெற்றிருக்கிறான் இச்சிற்பத் தொகுதியின் இருமருங்கிலும் நான்முகனும் திருமாலும் தங்களது ஒரு கையை மேல்தூக்கி வழிபடும் நிலையில் நிற்கின்றனர் ஏறத்தாழ இதனை ஒத்த அமைப்புடைய சிற்பத்தொகுதி ஒன்று

மாமல்லையிலுள்ள இராமானுஜ மண்டபத்தின் கருவறையை முன்பு அலங்கரித்திருக்கிறது பிற்காலத்தில் இது முற்றிலுமாகச் சிதைக்கப்பட்டிருந்தபோதிலும் அச்சிற்பத்தின் புறக்கோட்டு வடிவம் இன்னமும் தெரிவதைக் காணலாம்.

பரமேஸ்வரனது மைந்தனாகிய இராஜசிம்மன் காலத்தில் [கிபி 700-728] கட்டப்பெற்ற காஞ்சி ஐராவதேஸ்வரர் பிறவாதேஸ்வரர் இறவாதேஸ்வரர் திரிபுராந்தகேஸ்வரர் கைலாசநாதர் கோயில்களிலும், மாமல்லையிலுள்ள ஓலக்கணேஸ்வரர், முகுந்த நாயனார் கடற்கரைக் கோயில்கள் ஆகியவற்றிலும், பனமலை தாலகிரீஸ்வரர் கோயிலிலும், இராஜசிம்மனுக்குப் பின்னர் கட்டப்பட்ட காஞ்சி முத்தீஸ்வரர் மாதங்கேஸ்வரர் முதலிய கோயில்களிலும், இராஜசிம்மன் காலத்திய சாளுவன் குப்பம் குடைவரைக் கோயிலிலும் மகிடமர்த்தினிக் குடைவரையின் கருவறையிலும் சோமாஸ்கந்தர் சிற்பங்கள் காணப்படுகின்றன காஞ்சி கைலாசநாதர் கோயிலில் முதன்மையாக கருவறையில் மட்டுமின்றி, திருச்சுற்றிலுள்ள சிறிய கருவறைகளிலும் இச்சிற்பங்கள் அதிக அளவில் இடம்பெற்றிருக்கின்றன மேலும் சில சிறிய கருவறைகளில் ஓவியங்களாகவும் வடிக்கப்பட்டிருக்கின்ற மேற்கூறப்பட்ட கட்டடக் கோயில்களில் கருவறையின் உட்சுவரில் சோமாஸ்கந்தர் சிற்பமும், அதற்கு முன்னருள்ள தரைப்பகுதியில் பட்டை தீட்டப்பட்ட தாரலிங்கமும் ஒரே சமயத்தில் மூலவர்களாக வழிபடப்பட்டிருப்பதைக் காணலாம் பொதுவாக கி.பி9 ஆம் நூற்றாண்டிலிருந்து சிவன் கோயில்களில் சோமாஸ்கந்தர் மூலவர் சிற்பமாக இடம்பெறவில்லை மாறாக இலிங்கம் மட்டிலும் மூலவராக வழிபடப்பட்டு வந்திருக்கிறது ஆனால் சோமாஸ்கந்த வடிவம் உலோகத்திருமேனியாக வடிக்கப்பட்டு, உற்சவமூர்த்தி யாகக் கருதப்பட்டு வந்திருக்கிறது

பல்லவர்காலச் சோமாஸ்கந்தர் சிற்பங்களுள் மிகுதியானவற்றில் சிவன் நான்கு கரங்களை உடையவராய் மேலிருகரங்கள் பாம்பு அல்லது அக்கமாலை, ஞானமுத்திரை ஆகியவற்றைப் பெற்றும், கீழ் வலது கை சின்முத்திரையுடனும் கீழ் இடதுகை அர்த்தத் தியான முத்திரையுடனும் காட்சித் தருகிறார் சில சிற்பங்களில் இவ்மைப்புகளில் சிறிது மாறுபாடு களும் காணப்படுவதுண்டு சிவனுக்குப் பின்பகுதிகளில் சில

மாறுபாடுகளும் காணப்படுவதுண்டு சிவனுக்குப் பின்பகுதியில் நாண்முகனும், திருமாலும் நான்கு கைகளுடன் இருப்பர் சோமாஸ்கந்தரை வழிபடும் நிலையில் அர்த்த தியான முத்திரையில் இவர்கள் காணப்படுகின்றனர். இந்த அமைப்புகளிலும் சிறுசிறு வேறுபாடுகள் இடம்பெறுவதுண்டு கிபி 9 ஆம் நூற்றாண்டிலிருந்து உருவாக்கப்பட்ட உலோகத் திருமேனிகளில் பொதுவாக சிவனது மேலிருக்கைகளில் பரசு, மான் ஆகியவையும், கீழிரு கைகள் அபய, பரத முத்திரைகளைக் குறிப்பதாகவும் காணப்படுகின்றன இத்தொகுதியில் நாண்முகன் திருமால் ஆகியோர் இடம் பெறுவதில்லை

பல்லவர்காலச் சோமாஸ்கந்தர் சிற்பங்களைப் பற்றி ஆய்வு செய்த அறிஞர் பெருமக்கள் அவற்றின் தோற்றம், அவை கருவறையில் இடம் பெற்றமைக்கான காரணம் ஆகியவை குறித்து வெவ்வேறு விளக்கங்களை அளித்துள்ளனர் லாக்வுட், கிப்ட்சிரோன்மணி ஆகியோர் கி.பி 7-8 ஆம் நூற்றாண்டுகளில் சிவன், உமை, முருகன் ஆகிய தெய்வங்களை ஒருங்கிணைக்கும் வகையில் பல்லவ மன்னர்களால் இச்சிற்பவடிவம் ஒரு குடும்பமாகக் கருவறையில் நிறுவப்பட்டதெனக் கூறுவர்[4] இவர்களது இக் கருத்தினை ஏற்றுக்கொள்வதற்கில்லை ஏனெனில்பல்லவர்களுக்கு முன்பே சிவன், உமை, கந்தன் ஆகியோரது குடும்ப உறவு தமிழகத்தில் நிலைபெற்றிருந்தமையை முந்தைய தமிழிலக்கியங்களான கலித்தொகை பரிபாடல், திருமுருகாற்றுப்படை, சிலப்பதிகாரம் ஆகியவை குறிப்பிடு கின்றன[5] பல்லவர்களது கோயில்களில் சிவனது குடும்பம் என்பதை அறிவுறுத்தும் வகையில் சிற்பவடிவம் தோற்று விக்கப்பட்டிருந்தால், விநாயகரையும் இணைத்துக் காட்டியிருக்க வேண்டும் மேலும், இச்சிற்பத் தொகுதியில் நான்முகன் , திருமால் புகுத்த வேண்டிய தேவையும் இல்லை கி.பி 3-4ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பெத்தமுடியம், ஆனூர் போன்ற இடங்களிலுள்ள புடைப்புச் சிற்பங்களிலேயே சிவன், பார்வதி, முருகன், கணேசர் நான்முகன் திருமால் நரசிம்மர் முதலிய தெய்வங்கள் ஒருங்கிணைக்கப்பட்டிருப்பதுடன், சிவனது குடும்பத்தினரும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்[6]

சோமாஸ்கந்தர் சிற்பத் தொகுதியில் சிவன், நான்முகன் திருமால் ஆகியோரது திருவுருவங்கள் உள்ளமையாலும்,

பல்லவர்காலக் கோயில்களின் கருவறைகளில் பிரம்மபாகம், விஷ்ணுபாகம், உருத்ரபாகம் ஆகியவற்றைக் கொண்ட அரூப வடிவமான இலிங்கம் காணப்பெறுவதாலும், இது மும்மூர்த்தி தத்துவத்தை உருவ, அருவ வடிவங்களாகக் குறிக்கிறதென இராஜசேகாளிதாஸ் அவர்கள் கருதுகிறார்[7] இக்கருத்தும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இல்லை ஏனெனில் மும்மூர்த்தி தத்துவத்தில் அல்லது சிற்பவடிவில் உமையவளுக்கும், கந்தனுக்கும் எந்தவிதமான பங்களிப்பும் இல்லை மும்மூர்த்தி வடிவமாகப் பல்லவ மன்னர்கள் காட்ட விழைந்திருந்தால் சிவன், நான்முகன் , திருமால் ஆகியோரை மூன்று உருவங்களாக அடுத்தடுத்து நின்றவாறோ அல்லது மூன்று தலைகளுடன் ஒருடல் கொண்ட மும்மூர்த்தியாகவோ தோற்றுவித்து இருக்கக்கூடும் மேலும் சோமாஸ்கந்தர் சிற்பம் இடம் பெற்றுள்ளவை சிவன் கோயில்களேயன்றி மும்மூர்த்தி [திரிமூர்த்தி] கோயில்களல்ல என்பதையும் நினைவிற்கொள்ள வேண்டும்

அண்மைக் காலத்தில் ஆர் சம்பகலட்சுமி அவர்கள் சோமாஸ்கந்தமூர்த்தம் சங்ககால முருகன், கொற்றவை ஆகிய தெய்வங்களை பிராமணியக் கோட்பாட்டு வழிவந்த துர்க்கை, ஸ்கந்தன் ஆகியோருடன் ஒன்றுபடுத்தி சிவனுடன் இணைத்து வழிபட்டதைக் காட்டும் வகையில் உருவாக்கப்பட்டிருக்க வேண்டுமெனக் குறியுள்ளார் மேலும், இந்த மூர்த்தம் பற்றிய கருத்தாக்கம் சோழர்கள் எழுச்சி பெறுவதற்கு முன்பு, அவர்கள் சிற்றரசாக இருந்த காலத்திலேயே திருவாரூரை மையமாகக் கொண்டு [முசுகுந்தசக்கரவர்த்தி கதையடிப்படையில்] தோன்றி இருக்கவேண்டும் எனவும், பிற்காலத்தில் இது 'விடங்கர்' என்னும் சிறப்பு பெற்றுத் திகழலாயிற்று என்றும் கருத்து தெரிவித்துள்ளார்.[8] இக்கருத்தினையும் முழுமையாக ஏற்றுக்காள்வதற்கில்லை ஏனெனில் முன்பு கூறியது போன்று சங்க காலத்திலேயே முருகன் ஸ்கந்தன், கொற்றவை துர்க்கை இணைப்பும், அவர்கள் சிவ வழிபாட்டுடன் இணைக்கப் பெற்றதும் இலக்கியங்கள் வாயிலாக அறியப் பெறுகிறோம் இந்த மூன்று தெய்வங்களின் ஒருங்கிணைப்பை முதன்முதலாகச் சிற்ப வடிவில் பல்லவர்கள் தோற்றுவித்தார்கள் என்று கூறுவது ஏற்புடையது போலத் தோன்றலாம் அவ்வாறாயின் இச்சிற்பத் தொகுதியில் நான்முகன் திருமால் இடம்பெறவேண்டிய தேவை என்ன? கருவறையில்

இதற்கு முன்பாக இலிங்க வடிவம் நிறுவப்பட வேண்டிய அவசியம் என்ன? என்பன போன்ற வினாக்களுக்கு விடைகூற இயலாமல் போகும் [பல்லவர் காலத்தில் இலிங்க வழிபாடு இல்லை எனவும் அவர்களது கோயில்களில் இலிங்கங்கள் பிற்காலத்தில் புகுத்தப்பட்டன என்ற கருத்துக்கள் முன்பே மறுத்துரைக்கப்பட்டிருக்கின்றன

சிசிவராமமூர்த்தி அவர்கள் பல்லவர் காலச் சோமாஸ்கந்தர் சிற்பங்களுக்கு முன்னோடியாக ஆந்திர மாநிலத்தை ஆட்சிபுரிந்த விஷ்ணுகுண்டினியர் காலத்திய சிற்பம் ஒன்றினைக் கூறுவார் கிபி 5-6 ஆம் நூற்றாண்டின் கலைப்பாணியுடைய இச்சிற்பத்தில் சிவன் கந்தன், உமையவள் ஆகியோர் இருப்பதைக் காணலாம்" [இது கந்தனை உடைய உமாமகேஸ்வரர் சிற்பமாகும்] தொடக்க காலத்தில் பல்லவர்கள் ஆந்திர நாட்டின் ஒரு பகுதியை சாதவாகனர்களுக்கு அடங்கி ஆட்சிபுரிந்து பின்னர் தொண்டை மண்டலத்தில் தங்களது தனியாட்சியை நிறுவனர் எனவே, விஷ்ணு குண்டினியர் பல்லவர் தொடர்பால் சோமாஸ்கந்த வடிவம் பல்லவர்களது கோயில்களில் இடம்பெற்றிருக்கக்கூடும் எனக் கருதுகிறார்

சோமாஸ்கந்தமூர்த்தி வடிவத் தோற்றம் பற்றி மேற்கூறப்பெற்ற காரணங்கள் பலவாயினும் பல்லவர்களது கோயில்களில் அச்சிற்பம் நிறுவப் பெற்றமைக்கு வேறுபல காரணங்களையும், விளக்கங்களையம் அளிக்க இயலும் எனக் கருதுகிறேன் முதலாவதாக, இச்சிற்பவடிவம் தமிழகத்தில் இலிங்கவழிபாட்டை நிலைபெறச் செய்வதற்கு உறுதுணையாகத் திகழ்ந்திருக்கிறது எனலாம் பல்லவர்களது ஆட்சிக்கு முன்பு தமிழகத்தில் இலிங்க வழிபாடு இருந்ததற்கான இலக்கிய, தொல்லியல் சான்றுகள் எவையும் இதுவரை கிடைக்கவில்லை கிபி. 7 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தேவாரப் பாடல்களினாலும் திருச்சி குடைவரை கல்வெட்டினாலும், பல்லவர்களது கோயில்களாலும், பாண்டியர் குடைவரைகளாலும் இலிங்க வழிபாடு நமக்குத் தெரிய வருகிறது

ஆண்குறி வடிவ அமைப்பில் எழுந்த இலிங்க வடிவினைத் தமிழ் மக்கள் ஏற்றுக் கொள்வதில் தயக்கம் இருந்திருக்க வேண்டும் இதனைப் போக்கும் வகையில் சைவ நாயன்மார்கள் தங்களது

தேவாரப் பாடல்களில் சிவபிரானை இலிங்கம். சோதி, வைரத்தூண், குறி, தாபரம், ஏகம்பன் எனப் பலவாறாகப் போற்றிப் பரவியிருப்பதைக் காணலாம். இலிங்கத்திற்கு பூக்கள் படைத்தல், விழுநீராட்டுதல், அருச்சனை செய்தல் போன்ற வழிபாட்டு முறைகளும் கூறப்பட்டுள்ளன.[10] அதாவது இலிங்கம் சிவபெருமானது அருப வடிவம் என்பதைப் பாடல்களின் வாயிலாகத் தேவார மூவரும் உறுதிபடக் கூறியுள்ளனர் இவர்களது சமகாலத்தில் ஆட்சிபுரிந்த பல்லவ மன்னர்கள் இதனையே தங்களது கோயில்களில் இலிங்கத்தை ஆண்குறிவடிவில்லாமல் பட்டைத் தீட்டிய தூண்போன்றும் [தாரலிங்கமாகவும்] கருவறைச் சுவரில் சிவனையும், அவரது துணைவியுடன் குழந்தையையும் மானிட வடிவத்திலும் புகுத்தியுள்ளனர் இலிங்கம் என்பது புருஷன், பிரகிருதி என்ற ஆண், பெண் இணைப்பையும், அதனால் பிறக்கின்ற குழந்தையையும் ஒருசேரக் கொண்டதால், இங்கு சிவன் சோமாஸ்கந்தமூர்த்தியாகப் புகுத்தப்பட்டுள்ளார் பல்லவர்களது கோயில்களில் சோமாஸ்கந்தரும் இலிங்கமும் ஒரே சமயத்தில் மூலவர்களாக வழிபடப் பெற்றிருப்பதற்கு இதுவே முதன்மையான காரணம் எனலாம் தமிழக மக்கள் இலிங்க வழிபாட்டினை முழுமையாக ஏற்றுக் கொண்டபின்னர் கருவறைச் சுவரில் சோமாஸ்கந்தர் சிற்பத்தை நிறுவவேண்டிய தேவை இல்லாமற் போயிற்று. எனவே, கி.பி 9 ஆம் நூற்றாண்டிலிருந்து கட்டப்பட்ட சிவன் கோயில்களில் இலிங்கம் மட்டிலும் கருவறையில் மூலவராகவும், சோமாஸ்கந்தர் உலோகத்தினால் செய்யப்பட்ட உற்சவமூர்த்தியாகவும் திகழலாயிற்று.

இரண்டாவதாக, பக்தி மார்க்க வாயிலாக சைவமும், வைணவமும் அதிவேக எழுச்சியுற்றபோது சிவனை முழுமுதற் கடவுளராகப் போற்றிப் பரவலாயினர் இந்தப் போட்டி மனப்பான்மையின் விளைவாகச் சைவத்தின்பால் மிகுந்த பற்றுடைய முதலாம் பரமேஸ்வரன், இராஜசிம்மன் போன்ற மன்னர்கள் கட்டிய சிவன்கோயில்களில் சோமாஸ்கந்தர் சிற்பத் தொகுதியில் திருமாலும் நான்முகனும் வழிபட்ட நிலையில் நிற்பதாகக் காட்டப்பட்டுள்ளனர் அதாவது சிவனே முழு முதற்கடவுள் எனவும், திருமாலும் நான்முகனும் சிவனுக்குக் கீழானவர்கள் எனக் கருதும் வகையில் சிற்பங்கள்

தோற்விக்கப்பட்டிருக்கின்றன. எனவே, சிவபிரானை நான்முகன் திருமால் ஆகியோரைவிட மிகுந்த வல்லமை படைத்தவர் எனக் காட்டும் முயற்சிக்கு சோமாஸ்கந்த வடிவம் துணைபுரியும் வண்ணம் படைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்

இந்துசமயக்கடவுளர் மட்டுமின்றி சமணசமயத் தீர்த்தங்கரர்கள், புத்தர் ஆகியோரை விடவும் சிவபெருமான் மிக உயர்ந்த கடவுள் எனக் கூறுவதற்கும் சோமாஸ்கந்த வடிவம் உகந்ததாகத் திகழ்ந்திருக்கிறது சமணமும், பௌத்தமும் துறவறம், யோகநெறி ஆகியவற்றிற்கு முதன்மை அளித்துள்ளன. தமிழகத்தில் பல்லவர் ஆட்சிக்கு முன்பே சமணசமயம் செல்வாக்குற்ற நிலையில் இருந்தது அதன் செல்வாக்கைக் குன்றச் செய்யும் வகையில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் சமணசமயத்தை மட்டுமின்றி பௌத்த சமயத்தையும் கடுமையாகத் தங்களது பாடல்களில் சாடியுள்ளனர்" பல்லவ மன்னர்களும் தங்களது கோயில்களில் சோமாஸ்கந்த வடிவத்தின் மூலம் சிவபெருமான் தீர்த்தங்கரர், புத்தர் ஆகியோரைவிடவும் மிகவும் உயர்ந்தவர் என்பதைக் காட்டியுள்ளனர் பொதுவாக புத்தர், தீர்த்தங்கரர் சிற்பங்கள் யோகவடிவிலேயே செதுக்கப்படுவது மரபாகும் இதற்கு மாறாக சோமாஸ்கந்த மூர்த்தி சின்முத்திரை ஞானமுத்திரை, அர்த்த தியான முத்திரை ஆகிய கையமைப்புகளைக் கொண்ட யோகியாகவும், அதே சமயத்தில் உமையவள், முருகன் ஆகியோரைப் பெற்ற போகியாகவும் காட்சித் தருகிறார் அதாவது யோகநெறிமட்டு மின்றி, போகநெறியாகிய இல்லறநெறிக்கும் சிவபிரானே தலையானவன் என்பதைப் பறைசாற்றும் வகையில் சோமாஸ்கந்த வடிவம் அமைக்கப்பட்டுள்ளது

சோமாஸ்கந்தர் சிற்பம் தாய், தந்தை, மைந்தன் ஆகியோரைக் கொண்ட சிறந்த குடும்ப அமைப்பினை பக்தர்களது மனதில் நிறைபெறச் செய்யும் வகையில் அமைந்துள்ளது எனலாம் அதாவது இந்த வடிவத்தைப் பக்தியுடன் வழிபட்டால் கந்தனைப் போன்ற அழகிய குழந்தையைப் பெற்று நிறைந்த குடும்ப வாழ்வினை எய்தலாம் என்ற கருத்திலும் இச்சிற்பம் கருவறையில் மூலவராக நிறுவப் பெற்றிருக்க வேண்டும் இக்கருத்தினைப் பல்லவ மன்னனது பட்டத்தரசியே சிவனுக்கு, உமையவளுக்கும் அழகிய கந்தன் பிறந்தது போன்று தமக்கும் ஆண்மகவு பிறக்க

வேண்டுமென விரும்பியதாகக் கூறியதிலிருந்து தெரிய வருகிறது[12] எனவே, சோமாஸ்கந்தர் சிற்பம் இலிங்க வழிபாட்டைத் தமிழகத்தில் நிலைபெறச் செய்வதற்கும், சிவபிரானை நான்முகன், திருமால், புத்தர், தீர்த்தங்கரர் ஆகியோரைவிடவும் மிக உயர்ந்தவர் எனக் காட்டுவதற்கும், சமண, பௌத்த சமயங்களின் செல்வாக்கைக் குறைப்பதற்கும், நல்ல குடும்ப அமைப்பின் பெருமையை வலியுறுத்துவதற்கும் ஏற்றதொரு வடிவமாகக் கருதி பல்லவ மன்னர்கள் கோயில் கருவறையில் நிறுவியிருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை

## சண்டேச அனுக்கிரகமூர்த்தி

சைவசமயத் திருவுருவ இயலுக்குத் தமிழகத்தின் மாபெரும் பங்களிப்பாகத் திகழ்வது சண்டேசஅனுக்கிரகமூர்த்தி வடிவம் என்றால் அது மிகையாகாது தமிழகத்தில் தோன்றி, தமிழ் மண்ணிலேயே விரிவாக்கம் பெற்று, பிற பகுதிகளுக்கும் பரவிய கருத்தோவியம் இதுவாகும்.

சண்டேசர் தொடர்பான சில செய்திகள் முதன்முதலாகத் தேவாரப் பாடல்களில் குறிப்பிடப்படுகின்றன இவற்றில் சண்டேசரை சண்டி, சண்டீசன், சண்டன், சண்டநாயகன், தண்டி எனப்பலவாறாகக் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம்[13] சண்டேசன் மணலால் இலிங்கம் அமைத்து, அதற்கு பாலாபிடேகம் செய்து, மலர்தூவி, அர்ச்சனை செய்ததைக் கண்ணுற்ற அவனது தந்தை, பால்வைத்திருந்த பாத்திரத்தைக் காலால் இடற, அதனால் சினமுற்ற சிறுவன் கைக்கோடரியினால் அவரது கால்களைத் துண்டித்தான் சிவன் மீது கொண்ட அளவற்ற பக்தியினால் தனது வழிபாட்டிற்கு இடையூறு செய்தவரைத் தந்தையென்றும் பாராமல் அவரது கால்களைத் துண்டித்தான் அச்சிறுவனது ஆழ்ந்த பக்தியைக் கண்ணுற்று, சிவபிரான் அவனுக்குத் தன் அடியவர்களுள் தலைமைப் பதவி அளித்தும், மக்கள் அனைவரும் அவனை வழிபடுவதற்குரியவனாக்கி அருள்புரிந்தார் எனவும் கூறப்பட்டு உள்ளது சில பாடல்களில் அவனது தலையில் கங்கை நீரைத் தெளித்ததாகவும், தமது முடியை அலங்கரித்த மாலையொன்றை எடுத்து அவனுக்குச் சூடியதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. கிபி 12ஆம் நூற்றாண்டில் சேக்கிழாரால் புனையப் பெற்ற பெரியபுராணம்

சண்டேசனது வாழ்க்கை வரலாற்றை விரிவுபடக் கூறி, அவரை அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவராகப் போற்றுவதைக் காணலாம்.

சண்டேசுவரை வரலாற்று நாயகராக எடுத்துக் கொள்வோமானால், அவர் அப்பர், சம்பந்தர் ஆகியோருக்கு முந்திய கிபி 5 அல்லது 6 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று கூறலாம் பக்தி அடிப்படையில் சைவ சமயத்தை எழுச்சிபெறச் செய்த மேற்கூறிய நாயன்மார்கள் சண்டேசர், கண்ணப்பர் போன்றவர்களுக்கு சிவன் அருள் வழங்கிய கதைகளைத் தங்களது பாடல்களின் வாயிலாக அறிமுகப்படுத்தி மக்கள் மனதில் சிவபக்தியை ஆழமாக வேரூன்றச் செய்துள்ளனர் இந்த காலக்கட்டத்தில் பல்லவ மன்னர்கள் தாங்கள் எடுப்பித்த கோயில்கள் பலவற்றிலும் இந்த வட்டாரக் கதைக்கு சிற்ப வடிவம் கொடுத்து மக்கள் கண்டுகளிப்பதற்கு வழிவகை செய்துள்ளனர் இவர்களைப் போல முற்காலப் பாண்டியர்களும் தங்களது குடைவரைக் கோயில்கள் பலவற்றிலும் சண்டேசருக்குத் தனியிடம் அளித்துள்ளனர்.

மாமல்லையிலுள்ள தர்மராஜர் குடைவரைக் கோயில் முதன் முதலாக [கிபி 7 ஆம் நூற்றாண்டு] சண்டேச அனுக்கிரகர் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது இங்கு சிவம் நின்ற கோலத்தில் ஒரு கையை சண்டேசனது தோள்மீது போட்டவாறும், சண்டேசன் கைகட்டி, வாய்புதைத்து நின்றவாறும் காட்டப்பட்டுள்ளது இதே காலக்கட்டத்தில் திருக்கழுக்குன்றத்திற்கு அன்மையிலுள்ள ஆனூரில் கரண்டமகுடம் தரித்து, கையில் பரசினைக் கொண்டு, கணத்தை ஒத்த குறுகிய உடல்வாகுடன் சண்டேசர் புடைப்புச் சிற்பம் ஒன்று உருவாக்கப்பட்டிருக்கிறது குன்றக்குடி, மலையடிப்பட்டி, குன்னாண்டார் கோயில் முதலிய இடங்களிலுள்ள கிபி 8 ஆம் நூற்றாண்டைய பாண்டியர்களது குடைவரைக் கோயில்களிலும் சண்டேசரின் சிற்பங்கள் இடம்பெற்றிருக்கின்றன. காஞ்சி கைலாசநாதர் கோயிலில் நின்ற கோலத்திலுள்ள சண்டேச அனுக்கிரக சிற்பம் மட்டுமின்றி, அக்கோயில் திருச்சுற்றுச் சுவரின் வடகிழக்கு மூலையில் தனியாகச் சண்டேசர் புடைப்புச் சிற்பமும் வடிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். முற்காலச் சோழர்களது கோயில்கள் சிலவற்றில் சண்டேசரை எட்டு பரிகார தெய்வங்களுள் ஒன்றாகக்

கருதி சிறிய கருவறையுள் அவரது திருவுருவம் நிறுவப்பெற்று வழிபடப்படலாயிற்று மாமன்னன் இராசராசனது ஆட்சியிலிருந்து சிவன்கோயில் கருவறையிலுள்ள கோமுகிக்கு அருகில் தனிக்கோயில் அல்லது கருவறை எழுப்பப்பட்டு அதில் சண்டேசர் சிற்பம் நிறுவப்பட்டிருப்பதைக் காணலாம் அக்காலத்தில் சண்டேசர் சிவபெருமானது முதன்மையான அடியவராகவும், சிவன்கோயில் சொத்துக்களைக் கண்காணிக்கும் பொறுப்புடையவராகவும் கருதப்பட்டு வந்துள்ளார். சிவனுக்குப் படைக்கப்பட்ட பொருட்களில் ஒரு பகுதியை சண்டேசருக்கும் படைத்து வழிபடும் வழக்கமும் அப்போதிருந்து ஏற்படலாயிற்று[15] இராசராசனின் மைந்தனாகிய முதலாம் இராசேந்திரன் கங்கைகொண்ட சோழபுரக் கோயிலில் ஒப்பற்ற சண்டேச அனுக்கிரகமூர்த்தி சிற்பம் ஒன்றை நிறுவி இந்திய சிற்பக்கலை வரலாற்றில் அதற்குத் தனிப்பெரும் சிறப்பளித்துற்றார் இத்தகைய தனித்தன்மை வாய்ந்த சண்டேச அனுக்கிரக மூர்த்தி சிற்பவடிவம் சைவ சமய வரலாற்றில் பல்வேறு பரிமாணங்களை அறிவுறுத்தும் வண்ணம் திகழ்வதைக் காணலாம்

தமிழகத்தில் பக்திமார்க்க வாயிலாகச் சைவசமயம் அதிவேக வளர்ச்சி பெறுவதற்குப் புராணக் கதைகள் ஒருபுறமும், வட்டாரக் கதைகள் மறுபுறமும் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன அவ்வகையில் சண்டேசர், கண்ணப்பர், தண்டியடிகள், நமிநந்தியடிகள் போன்றவர்களைப் பற்றிய கதைகள் தேவார மூவரால் போற்றிப் புகழப்பட்டிருப்பதைக் காணலாம் எனவே, சைவசமயத்தை நிலைபெறச் செய்வதற்கு சண்டேசருக்கு அருள் வழங்குவது போன்ற வட்டாரக் கதைகள் தேவைப்பட்டிருக்கிறது இதுமட்டும் இன்றி இலிங்க வழிபாட்டினைத் தமிழகத்தில் நன்கு பரவச் செய்வதற்கும், அதனை மக்கள் ஏற்றுக் கொள்வதற்கும் சண்டேசர் கதையும், அக்காலத்திய சிற்பவடிவங்களும் பெரிதும் துணை நின்றிருக்கின்றன

புத்தம், சமணம் போன்ற சமயங்களைத் தாழ்வாகக் கருதுவதற்கும் இந்த சண்டேசர் கதையும், சிற்பங்களும் பயன்படுபவையாக இருந்திருக்கின்றன. புத்தரும், தீர்த்தங்கரர்களும் உலக பந்தங்களிலிருந்து முற்றிலும் விடுபட்டவர்களாதலால், அவர்களால் பக்தர்களுக்கு அருள்வழங்கவோ அல்லது அதை மறுக்கவோ இயலாது. எனவே, அவர்களைக் காட்டிலும் ஆழ்ந்த

பக்தியினால் வழிபாடும் பக்தர்களுக்கு அருள் வழங்கும் சிவபிரானே உயர்ந்தவர் எனக் கூறும் வகையில் சண்டேச அனுக்கிரகச் சிறப்பங்கள் அமைந்திருக்கின்றன.

சண்டேச அனுக்கிரகக் கதையின் வாயிலாக அக்காலச் சமுதாயத்தில் பிராமணர்கள் பெற்றிருந்த உயர்ந்த நிலையை எடுத்தியம்பும் வகையிலும் இது அமைந்திருக்கிறது எனலாம் பிராமணச் சிறுவனாகிய சண்டேசனுக்கு சிவனே உடனடியாக நேரில் வந்து அருள் வழங்கியது, மாலை சூடியது, தன்னை ஒத்த உருவம் அளித்தது, பிறரால் வழிபடப் பெறும் நிலை வழங்கியது போன்று அறுபத்து மூன்று நாயன்மாருள் வேறு எந்த பிரிவையும் சார்ந்த ஒருவருக்கும் அருள் வழங்கியதில்லை என்பதிலிருந்து பிராமணர்கள் பெற்றிருந்த சமூக அந்தஸ்து நிலைநிறுத்தப் பெறுகிறது.

சண்டேச அனுக்கிரகக் கதையில் வரும் பல நிகழ்ச்சிகள் சைவ சமயத்தில் சிவதீட்சை அளிக்கும் வழக்கத்தில் உள்ளவையாகும் அதாவது சைவ சமயக்குரு தமது சீடனுக்கு தீட்சை அளிக்கும்போது, அவனை அவரது காலடியில் நிற்க அல்லது அமரச் செய்து, தலையில் கங்கை நீரைத் தெளித்து, சிவமந்திரங்கள் ஓதி, பூக்களைச் சொரிந்து, தனது கையை சீடனுடைய தலையில் வைத்து, வழிபாடுகள் செய்து, தீட்சைப் பெயரளித்து பின்னர் சீடனாக ஏற்றுக் கொள்வது மரபாகும். சண்டேச அனுக்கிரகக் கதையிலும், சிற்ப வடிவங்களிலும் சிவபெருமானே குருவாக இருந்து அருள் வழங்கியிருப்பது சிவதீட்சை அளிப்பதற்கு ஒத்ததாகும்

திருமூலர் தமது திருமந்திரத்தில் சிவன் சண்டேசருக்கு அருள் வழங்கியதற்கு தத்துவ ரீதியில் விளக்கம் ஒன்றை அளித்திருப்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும் அதாவது தண்டீஸ்வரர் தனது ஐம்புலன்களையும் அடக்கியாண்டு ஆழ்ந்த தியானத்தில் சிவனோடு ஒன்றியிருந்தபோது, உலக பந்தங்களாகிய மாயையால் கட்டுண்ட அவன் தந்தை அவனது தியானத்திற்கு இடையூறு விளைவிக்கலானார். ஆனால், சண்டேசர் அந்த இடையூறினைத் தனது மூலாதாரத்திலிருந்து எழுந்த கைக்கோடரியின் கூர்மையை ஒத்த குண்டலினி சக்தியால் வெற்றிகண்டு, என்றும் சிவனது அருகிலேயே இருக்கும் நிலையைப் பெற்றார் என்பதாகும்[17]

அதாவது சிவன் மீதுள்ள ஆழ்ந்த பக்தியால், ஐம்புலன்களும் அடங்கப்பெற்று, தன்னுள்ளே இருக்கும் குண்டலினி சக்தியை எழச்செய்து, இறைவனோடு ஒன்றி மீண்டும் பிறவாநிலையை எய்தலாம் என விளக்கம் அளித்துள்ளார்

சண்டேசர் வாழ்ந்த காலத்தில் அவருடைய வடிவம் எவ்வாறிருந்தது என்பது பற்றித் தெரிந்து கொள்ளும் வாய்ப்பில்லை ஆனால் அவருக்கு நாம் கோயில்களில் காண்பது போன்ற வடிவ அமைப்பை ஏற்படுத்துவதற்குப் பாசுபத சைவ சமயம் ஒரு முக்கியமான காரணமாகத் திகழ்ந்திருக்கிறதெனலாம் பாசுபத சைவ சமயத்தை நெறிப்படுத்திய இலகுலீசர் சிற்பங்களுக்கும், சண்டேசர் சிற்பங்களுக்கும் மிகுந்த ஒற்றுமைகள் காணப்படுகின்றன இதற்கு பேரூரிலுள்ள தனிச் சிற்பமும், அரிட்டாபட்டி, தேவர்மலை போன்ற குடைவரைகளிலுள்ள கி.பி 7,8 ஆம் நூற்றாண்டைய லகுலீசர் சிற்பங்களும் சிறந்த எடுத்துக்காட்டுகளாகும்[18] இந்தச் சிற்பங்கள் வீற்றிருக்கும் கோலம் [சுகாசனநிலை] , தடித்த உடல்வாகு, சடாபார முடியமைப்பு, கையிலுள்ள தண்டு [பரசு போன்ற அமைப்பு] கழுத்திலுள்ள உருத்திராட்ச மாலை, காதிலுள்ள பத்ர குண்டலங்கள் முதலியவை சண்டேசருக்கும் பொருந்தி வருபவையாகும் இருவருமே தண்டீசர், தண்டி என்னும் பொதுப்பெயர் கொண்டவர்கள் தேவார மூவர்களது காலத்தில் திருவாரூர், திருவானைக்கா, சண்பை முதலிய சைவத் தலங்களில் பாசுபத சமயத்தவர் வாழ்ந்தமையும், அவர்கள் அங்குள்ள கோயில்களின் வழிபாட்டு நிகழ்ச்சிகளில் பங்கேற்றமையும் தேவாரப் பாடல்களிலேயே குறிப்பிடப் பட்டுள்ளன[19] எனவே, பாசுபத சமயத்தின் தாக்கத்தால் இலகுலீசர் சிற்பங்களை ஒத்ததாக சண்டேசர் சிற்பங்கள் உருவாக்கப் பட்டிருக்கின்றன என்பதை மறுப்பதற்கில்லை பாசுவத சைவமும் மேற்கு தக்காணப் பகுதியிலிருந்து ஆந்திரப் பகுதி வழியாக நெடுங்காலத்திற்கு முன்பே தமிழகம் வந்ததாக வரலாற்றறிஞர்கள் கூறுவதும் இக்கருத்திற்கு மேலும் வலிமையூட்டுவதாக அமைந்துள்ளது

**பிச்சாடனமூர்த்தி**

சிவபெருமான் பிரம்மனது தலையொன்றினை அரிந்தமையால் பிரம்மகபாலம் அவரது கையிலே ஒட்டிக்கொள்ள, அந்தப்

பாவத்தைப் போக்க அவர் திருமாலிடம் ஓர் வழிதேடிச் செல்கிறார் அப்போது திருமாலின் வாயிற் காவலனாகிய விஷ்வகசேனன் அவருக்கு அனுமதி மறுக்கவே, சிவபிரான் அவனையும் கொன்று மேலும் பாவச் செயலுக்குட்படலானார் இறுதியாக திருமாலின் அறிவுரைப் படி பன்னிரண்டு ஆண்டுகள் சிவன் பிரம்ம கபாலத்தில் பிச்சை ஏற்று வாழ்ந்து பின்னர் காசி மாநகரில் கபாலவிமோசனம் அடைந்ததாகப் புராணங்கள் கூறும் இலிங்கபுராணத்தில் சிவன் ஆடையற்றகோலமாய் தாருகாவனத்திலுள்ள முனிபத்தினியரிடம் பிச்சையேற்கச் செல்லுங்கால், அவர்கள் சிவனது அழகில் மயங்கியதாகவும், அதனால் சினமுற்ற முனிவர்கள் யாகம் செய்து, அதிலிருந்து தோன்றி யானை, புலி, பரசு போன்றவற்றை சிவன்மீது ஏவிவிட்டதாகவும், அவற்றையெல்லாம் முறியடித்து சிவன் வெற்றிசூடியதாகவும் விரிவுபடக் கூறுகிறது [20]

இப்புராணக் கதைகள் எதுவும் சங்க இலக்கியங்களில் இடம் பெறவில்லை ஆனால் கலித்தொகையில் மட்டிலும் சிவன் கொன்றை மாலையணிந்தும், புலத்தோலை ஆடையாகத் தரித்தும், கையில் கபாலத்தைக் கொண்டும் கபால நடனம் ஆடியதாகக் குறிப்பிடுகிறது [21] தேவாரப் பாடல்கள் பலவற்றிலும் சிவன் பிச்சாடனராகக் கையில் கபாலம் ஏந்தி, கணங்கள் புடைசூழ பிச்சை ஏற்றதாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம் இப்பாடல்களில் சிவன் தாருகாவனத்தில் முனிபத்தினியரிடம் பிச்சையேற்றதாகவோ, முனிவர்களின் கோபத்திற்குள்ளான தாகவோ, ஆடையின்றி அலைந்ததாகவோ குறிப்புகளில்லை மாறாக அவர் கோவண ஆடையை அணிந்தும், கால்களில் பாதக்குறடுகள் அணிந்தும், சூலம், கபாலம் முதலியவற்றைக் கையில் கொண்டும், விஷ்வக்சேனனது சடலத்தைத் தோள்மீது சுமந்தும் மக்களிடம் பிச்சையேற்றதாகக் கூறப்பட்டிருக்கின்றது [22] இந்தக் குறிப்புகள் பிச்சாடன கங்காள வடிவத்திற்கு ஏற்றதாக இருப்பதைக் காணலாம்

பல்லவர்கள் ஆட்சியின்போது தோற்றுவிக்கப்பட்ட மாமல்லை தருமராச ரதத்தின் ஆதிதளத்திலுள்ள வடமேற்கு மாடத்தில் செதுக்கப்பட்டுள்ள சிவனது சிற்பமே காலத்தால் முந்திய பிச்சாடனர் ஆகும். சிற்பங்களிலிருந்து சற்று மாறுபட்டு, இது சடாபாரத் தலையலங்காரத்துடன், இருகரங்களை

உடையதாய், வலது கையில் பாம்பு ஒன்றினைப் பிடித்தும், இடது கையினைத் தொடைப்பகுதியில் வைத்தும், கோவண ஆடை அணிந்தும் காணப்படுகிறது பாண்டியர்களது குடைவரைக் கோயில்களிலோ அல்லது கழுகுமலை ஒற்றை கற்கோயிலிலோ பிச்சாடன மூர்த்தி சிற்பங்கள் எவையும் வடிக்கப்பெறவில்லை

பல்லவர்களது கட்டடக் கோயில்களுள் காஞ்சி கைலாசநாதர் கோயிலில் மட்டும் ஐந்து சிற்பங்கள் கங்காள - பிச்சாடன மூர்த்தியாகப் படைக்கப்பட்டிருப்பது சிறப்பிற்குரியதாகும். இவற்றுள் கைலாச நாதர் கோயிலும், இதற்கு முன்பாக உள்ள மகேந்திரனால் எழுப்பப்பட்ட கோயிலிலும் பெரிய அளவிலான சிற்பங்கள் காணப்படுகின்றன இச்சிற்பங்கள் பரந்து விரிந்த, சுருள் சுருளாலான சடைமுடிகள் தோளின் இருமருங்கிலும் புரள, இடது தோளின் மீது கங்காள தண்டத்தினைச் சாய்த்து வைத்த வண்ணம், பாதக்குறடுகள் அணிந்து முன்னோக்கி நடந்து செல்வதாகக் காட்டப்பட்டிருக்கின்றன இதன் இடது கை மேலாகத்தூக்கப்பெற்று முகத்தைச் சற்று மறைப்பது போன்று காணப்படுகிறது அரையிலே கோவண ஆடை அணிந்து முன்னோக்கிச் செல்லும் இவரது காலடியில், உமையவள் முழந்தாழிட்டு தன்னிரு கரங்களால் மலர் தூவி வழிபடுவதுபோல [புஷ்பபுடாஞ்சலி] சிற்பக் கலைஞர் வடித்திருப்பது ஒரு தனித்தன்மையாகும்

பல்லவர்காலச் சிற்பங்கள் அனைத்திலும் பிச்சாடனமூர்த்தி ஆடையற்றவராகக் காட்டப்படவில்லையென்பது குறிப்பிடத் தக்கதாகும் கி.பி. 7,8ஆம் நூற்றாண்டுகளில் சைவ-சமண சமயக் காழ்ப்புணர்வுகள் மிகுந்திருந்தமையால் சமண சமயத் தீர்த்தங்கரர்களைப் போன்றோ அல்லது ஆடையற்ற நிர்கிரந்த முனிவர்களைப் பேன்றோ சைவ சமயக் கடவுளாகிய பிச்சாடனாரை ஆடையற்றவராகக் காட்டவிரும்பவில்லை என்பது இதனால் புலனாகிறது தேவாரப் படல்களிலும் ஆடையற்ற சமணத்துறவியர் கடுமையாகத் தூற்றப் பட்டிருப்பதைக் காணலாம் எனவேதான் அப்பாடல்களில் பிச்சைத்தேவர் அரைக்கோவண ஆடையணிந்து பிச்சை ஏற்றதாகவே குறிப்பிடப்பட்டிருக்கிறது சைவ நாயன்மார்களது பாடல்களுக்கு ஏற்ப, அக்காலச் சிற்பக் கலைஞனும் பிச்சாடன வடிவங்களை 'அம்மணராக' வடிக்கவில்லை என்பது

தெளிவாகிறது எனவே, சமயக்காழ்ப்பின் பின்னணியில் சிவபிரான் கோவண ஆடையணிந்த பிச்சைத் தேவராய், ஆடையற்ற தீர்த்தங்கரர்களை விடவும் அல்லது ஆடை எதுவுமின்றித் தமது கைகளிலேயே பிச்சையேற்று உண்ணும் சமணத் துறவியரைக் காட்டிலும் மேலானவர் எனக்காட்டும் முயற்சியின் விளைவே இந்தச் சிற்ப படிவங்கள் என்பது புலனாகும் மேலும், கி.பி 9 ஆம் நூற்றாண்டில் சமண-பிராமணிய சமயக் காழ்ப்புணர்வுகள் குறைந்த பின்னர் உருவாக்கப்பட்ட பிச்சாடனர் திருவுருவங்கள் பல்லவர் சிற்பங்களைப் போலல்லாமல், ஆடையற்றவராகவே படைக்கப்பட்டிருப்பதால் இக்கருத்து வலிமை பெறுகிறது பிற்காலச் சிற்பங்கள் அனைத்தும் ஆடையற்றவராய், நாற்கரங்களுடன் அவற்றில் மான், மழு, சூலம், உடுக்கை, கபாலம், உணவு போன்றவற்றைப்பெற்று, பலிபாத்திரம் சுமக்கும் கணம் பின்தொடர [சிலவற்றில் முன்கால்களைத் தூக்கி நிற்கும் மான் ஒன்று வலப்புறம் உள்ளவாறும்] முன்னோக்கிச் செல்வதாகப் படைக்கப்பட்டி ருக்கின்றன சிலசமயம் முனிபத்தினியின் சிற்றுருவமும் இடம்பெறுவது உண்டு

பல்லவர்காலக் கங்காள - பிச்சாடனார் சிற்பங்களில் சிவனது காலருகில் மலைமகள் முழந்தாளிட்டு மலர் தூவி வழபடுவதற்கும், சிவன் தனது இடது கையை மேலாகத்தூக்கி முகத்தை மறைப்பது போலக் காட்சியளிப்பதற்கும் ஒரு காரணம் இருப்பது புலனாகிறது இத்தகைய சிற்பங்கள் காஞ்சிபுரத்தைத் தவிர வேறு இடங்களில் இல்லை காஞ்சி மாநகரின் முதன்மைத் தெய்வமாகத் திகழ்வது காமகோடியாகிய காமாட்சியாகும் இந்தக் காமாட்சி அருளாட்சி புரியும் காஞ்சிமாநகரில் தமது கணவனாகிய சிவன் பிச்சையேற்றுச் செல்வதைத் தவிர்க்கும் வகையில், மலைமகளே அவரது காலடியில் மலர்தூவி வழிபடுவது போல அல்லது மன்றாடி வேண்டுவது போலச் சிற்பக் கலைஞன் படைத்திருப்பது சிறப்பிற்குரியதாகும். மேலும் தாம் செய்த பாவங்களுக்குப் பரிகாரமாகப் பன்னிரண்டு ஆண்டுகள் பிச்சை ஏற்று உணவளிக்கும் பெண்டிருக்குப் பதிலாக இங்கு தமது தேவியை எதிர்பாராத வகையில் கண்ணுற்றமையால் வெட்கப்பட்டு தனது இடது கையால் முகத்தை மறைப்பது போன்ற பாவனையில் நிற்பதும், வெட்கத்தின் வெளிப்பாடாகக் கண்களை மூடி,

முகத்தில் புன்முறுவலுடன் சற்று தலை சாய்த்து இருப்பதுவும் சிற்ப வல்லுநரின் ஒப்பற்ற கைவண்ணமாகும் ஒருவேளை இந்தச் சிற்பங்கள் கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் சுந்தரமூர்த்தி நாயனார் தமது தேவாரப் பாடலில் சிவனைநோக்கி வேண்டுவதற்கேற்ப உருவாக்கப்பட்டிருந்தாலும் வியப்படைவதற்கில்லை. அதாவது, உலகத்தையே புரந்து காத்தருளும் தேவியாகிய காமகோடி காஞ்சிமாநகரில் கொலுவிருக்க, சிவபெருமான் எதற்காக ஊர்மக்கள் இடும் பிச்சைக்காக அலைந்து திரியவேண்டும் எனவும், எனவே பலியேற்றுண்ணும் வாழ்க்கையை அவர் விட்டொழிக்க வேண்டும் எனவும் நெஞ்சுருக விண்ணப்பம் செய்துள்ளமையைக் காணலாம்[23] எனவே, மேற்கூறப்பட்ட சிவனது திருவுருவங்கள் குறிப்பிட்ட சில காரணங்களுக்காக சில தனித்தன்மைகளுடன் உருவாக்கப்பட்டு இருக்கின்றன என்பது தெள்ளிதின் விளங்கும்.

## அடிக்குறிப்புகள்

1. *திருவாநவுக்கரசர் தேவாரம் 114:8*
2. *Avantisunkarikathasara,* /II: 37-38
3. Lockwood, Gift Siromani and Dayanandan, *Mahabalipuram Studies,* p.19.
4. Ibid., p.20
5. *கலித்தொகை, 82:14, பரிபாடல், 8:127-128,*
6. *ப. தொ பாலாஜி, ஆனூர் சிற்பம், ஆவணம், எண்,8, 1997, பக் 158-160,*

   C. Sivaramamurti, Early andhra art and Iconography, fig. 11.
7. Raju Kalidass, Lecture delivered at the Institute of Traditional Cultures, Chennai, March, 1994.
8. R. Chambakalakshmi, "Dynamics of Change-Perspectives of Religion, Society and Polity in South India", K A. Nilakanta Sastri Endowment Lectures, University of Madras, Sep 1997, pp.14-15

9 C Sivaramamurti, op cit , p 10, fig 46

10 சம்பந்தர் தேவாரம், திருவேட்டகுடி, பா 3, திருக்கோளிலி, பா. 4, திருஆலவாய், பா 5, சுந்தரர் தேவாரம், திருப்புன்கூர், பா 3, திருக்கோளிலி, பா 4,

11 சம்பந்தர் தேவாரப் பதிகங்களில் ஒன்பதாவது பாடல்கள் அனைத்திலும் சமண, பௌத்த சமயத்தினரைப் பழித்துரைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

12. Avanti Sundari Kathasara, III 37-38

13, சம்பந்தர் தேவாரம், 324:10, 371:5, திருநாவுக்கரசர் தேவாரம், 88: 5:3, சுந்தரர் தேவாரம், 55: 3, 72: 9

14 சம்பந்தர் தேவாரம் திருவேட்டக்குடி, பா 3, திருக்கோளிலி, பா 4, திருச்சேய்ஞலூர், பா 7, திருவூறல், பா. 5: திருநாவுக்கரசர் தேவாரம், திருச்சேறை, பா 4, திருச்சாய்காடு, பா 6, திருக்குறுக்கை, பா 3, திருஆப்பாடி, பா 4, திருக்கோட்டையூர். பா 6

15 South Indian Inscription Vol. 12, p.39

16 T A. Gopinatha Rao, Elements of Hindu Iconography, Vol,II, P 2, pp, 11-12,

17 திருமந்திரம், பா 351

18 I K Sharma, Religion in Art and Historical Archaeology, pp 62-63.

19 சம்பந்தர் தேவாரம், சண்பை நகர், பா 10, திருநாவுக்கரசர், திருவானைக்கா, பா 6, திருவாரூர், பா 3

20 Kurma prana, 30:17-23, Vamana purana, 2:30-53, Linga purana, 29 8-13.

21 கலித்தொகை கடவுள் வாழ்த்து, 11-12.

22 சம்பந்தர் தேவாரம், 75:5: 39:2, 44:1

*23 சுந்தரர் தேவாரம், 7:5:6*

*"வாரிரும் குழல் வாள் நெடுங்கன் மலைமகள் மலர்விம்மும் கொன்றை தாரிருந் தடமார்பு நீங்காத் தையலாள் உலகுய்ய வைத்த காரிரும் பொழிற்கச்சி மூதூர் காமக்கோட்டமுண்டாக நீர்போய் ஊரிடும் பிச்சை கொள்வதென்னே ஓணகாந்தன் தளியுளீரே"*

*"பல்லையுக்க படுதலையில் பகலெல்லாம் பேய் பலிதிரிந்து கொல்லை வாழ்க்கை ஒழிய மாட்டீரோ ஓணகாந்தன் தளியுளிரே" சுந்தரர் 7:5:4*

# 56. புதுக்கோட்டை கல்வெட்டுக்களில் பண்பாட்டுப் பதிவுகள் - தேவரடியார் ஒரு சிறப்புப் பார்வை

(தி.நா. சுப்பிரமணியன் அறக்கட்டளை)

கரு. இராஜேந்திரன்,
மேலப்பனையூர்

தொன்றுதொட்டு நடந்து வந்த கலைகளில் ஒன்றான ஆடற்கலை தமிழக வரலாற்றின் மத்திய காலத்தில் தமிழகமெங்கும் கோவில்களில் மையம் கொண்டு வளரத் தொடங்கின புதுக்கோட்டைப் பகுதிக் கோவில்களும் இதற்குச் சான்று பகர்கின்றன இசை, நாட்டியம், கூத்து போன்ற கலைகளில் வல்ல நங்கையர்கள் தேவராடியார், தேவடிமை, தேவதாசிகள் என்றும் அழைக்கப்பட்டனர் கூத்தில் வல்ல நங்கையர்கள் கூத்திகள் என்றும் கூத்தில் வல்ல ஆடவர் கூத்தன் என்றும் பெயர் பெற்று தமிழகக் கோவில்களில் பணியாற்றி வந்தனர் அத்தகைய ஆடற்கலை மங்கையர்களான தேவரடியார் களைப் பற்றி புதுக்கோட்டை கல்வெட்டுக்களில் பல குறிப்புகள் உள்ளன

தேவரடியார்கள் நிலத்தினை விலைக்கு வாங்கி கோவில்களுக்கு தானமாக வழங்கியமை, கோவில்களில் தேவராடியார் பணிக்காக இறையிலி நிலங்கள் பெற்றமை, தேவரடியார்கள் கோவில்களில் தெய்வச் சிலைகளை நிறுவியமை, கோவில்களில் தேவரடியாரை நியமித்தமை, தேவரடியார்கள் தங்களுக்கு ஏற்பட்ட வறுமை கஷ்டங்களினால் தாங்களே கோவில்களில் அடிமைகளாகப் புகுந்தமை. தனி நபர்கள் தேவடிமைகளை கோவிலுக்கு வாங்கி விட்டமை, தாய்-மகள் என்ற வம்சா வழியில் ஒருவர்பின் ஒருவராக தேவரடியார்கள் கோவில்களில் பணிசெய்தமை, தேவரடியார் களின் பிற்காலத்திய நிலைமை முதலான தரவுகளை புதுக்கோட்டைப்பகுதிக் கல்வெட்டுக்கள் வழி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்

## சொல்லின் பொருளும், சிறப்பும்

தேவரடியார் என்ற சொல் தேவர் + அடியார் என்ற இருசொற்கள் சேர்ந்த கூட்டுச் சொல்லாகும் அதாவது இறைவனுக்கு அடியார் அல்லது இறைவனுக்கு அடிமை ஆனவர் என்று இச்சொல் பொருள்தரும்

தேவரடியார் என்ற சொல் கல்வெட்டுகளில் இயற்பெருக்கு முன், முன் ஒட்டாக காணப்படுகிறது [புக + புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் 97,152,223,360] தேவரடியார்கள் மாணிக்கம் அல்லது மாணிக்கத்தாள் என்று இயற்பெயருக்கு பின்பு வரும் பின் ஒட்டு [புக 162,710,814,867] தேவரடியார்களுக்கு உரிய சிறப்பு பட்டமாகும் தேவரடியார் என்ற சொல்லில் 'ர்' விகுதி முற்காலக் கல்வெட்டுகளில் பயன்படுத்தப் பெற்றும் [புக 42,162,366] பிற்காலப்பகுதியில் தேவரடியாள் என 'ள்' விகுதி கையாளப் பட்டுள்ளதையும் பார்க்கிறோம் [புக 319,513,702] தேவரடியாள், தேவடியாள் என்ற இரு சொற்களின் பொருள் ஒன்றேயானாலும், பிற்சொல் தேவரடியார்களின் பிற்காச் சமூகத்தில் அவர் பெற்ற தாழ்ந்த நிலையைக் காட்டுவதாக உள்ளது

## தேவரடியார்களின் காணி உரிமையும் நிலைப்பாடும்

புதுக்கோட்டைப் பகுதி தேவரடியார்களைப் பற்றிய செய்தியை நமக்கு முதன் முதலில் தருவது வாராப்பூர் சிவன் கோவிலுள்ள முதலாம் ராஜேந்திர சோழனின் கல்வெட்டாகும் மேற்படி கல்வெட்டு, திருக்குன்றாக்குடி என்ற குன்னாண்டார் கோவில் தேவரடியார் மருந்தி ஆண்டாள், மீபொழில் நாட்டு வேளான் தூணின்றான் என்ற பிள்ளான், ஆகியோர் நிலத்தை விலை கொண்டு வாராப்பூர் அகத்தீசுவரர் கோவிலுக்கு தேவதானமாக்கினர் [புக 97] குடுமியான்மலை சிவன் கோவிலுள்ள முதலாம் மாறவர்மன் சுந்தரப்பாண்டியனின் கல்வெட்டின்படி மேல்மணநல்லூர் ஊரவர் அவ்வூர் விக்கிரம சோழீசுவரர் கோவில் தானத்தார் ஆகிய இருவர்களும் சேர்ந்து திருநலக் குன்றத்து நாயனார் கோவில் தேவரடியாள் உமையாள்வி பெரிய நாச்சிக்கு அவ்வூர் குடிக்காட்டினை 20 பழங்காசுக்கு விற்றுக்கொடுக்கின்றனர் [புக 319] இதுபோன்று பல கல்வெட்டுக்களில் தேவரடியார் நிலத்தைக் கோயில் தானத்தாரி

நீங்காடமும் விலை கொடுத்துப் பெற்றதைப் பார்க்கலாம் சில கல்வெட்டுக்களில் இப்படிப் பெற்ற நிலங்கள் குடி தேவதானம் எனப்பட்டன அதாவது வாங்கிய தேவரடியார் அந்நிலத்தின் நிலையான உடைமையாளராக ஆகிறார்கள் [புக 366 குடுமியான்மலை; புக 442 பெருமாநாடு; புக 471 நான்குபட்டி புக 515 குளத்தூர்]

சேரனூர் குலோத்துங்க சோழீஸ்வரர் கோவிலுள்ள மாறவர்மன் குலசேரதேவரின் 2 வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்றில் சக்தி நம்பியான தம்பிரான் தோழன் உள்ளிட்டார், திருநங்கை ஆள்வானாதிச்சன் உள்ளிட்டார், மற்றும் குன்றன் பராந்தக தேவன் உள்ளிட்டார் ஆகியவர்களால் திருநலக்குன்றத்து தேவரடியார் திருவம்பலப் பிரியதாருக்கு கோனாடன் குளமும் வயலும் விலைக்கு விற்கப்பட்டது மேற்படி திருவம்பலப் பிரியதார் விலைக்கு வாங்கிய கோனாடன் குளத்தையும் வயலையும் திருநலக் குன்றமுடையார் கோவிலுக்கு கடமை இறுப்பதற்கு ஒப்புக் கொண்டு உரிமை மாற்றம் செய்து கொடுத்துள்ளார் [புக 553]

## தேவரடியார்களும் இறையிலிக் காணிகளும்

இறைப்பணி காரணமாக தேவரடியார்களாகக் கோவில் பணிசெய்த நங்கையர்கள் நிலக் காணிகளை விலைக் காணிகளாக பெற்றது போல் சில கோவில்களில் தேவரடியார்கள் இறையிலி நிலங்கள் பெற்றனர் ஆலத்தூர் திருவகத்தீஸ்வரமுடையார் கோவில் பாண்டியர் கல்வெட்டொன்றில் ஆலத்தூர் தேவரடியார் துக்கையார் மகள் அழகப்பெருமாள் ஊரார்களுக்கு பல்வேறு உதவிகளை செய்தமையை முன்னிட்டு அகத்தீஸ்சுவர் கோவிலின் பக்கல் நிலத்தினை கீழ் இறையிலாகத் அவ்வூரார் தந்ததுடன் குளத்தில் மீன் பாசியில் பாதியைப் பெற்றுக் கொண்டு குளத்தை வெட்ட வேண்டுமென்று நிச்சயித்து பிராமணம் செய்து கொடுத்தனர் [பு.க. 602]

செவலூர் பூமிசுவரர் கோவிலில் உள்ள சாகத்தம் 1412 [1550] ஆண்டுக் கல்வெட்டு செவலூர்க் கைக்கோளரில் குடியாண்ட புலமை தேசியையும் அவீயையும் ஊரார் செவலூர் ஈசுவரன்

கோவிலுக்கு தேவாரடிமையாக விட்டு தசத்து குளத்தையும் வயலையும் இறையிலி நிலமாக விட்டுக்கொடுத்தனர் [புக. 825]

கோவில் பணிகளில் ஈடுபட்ட இத்தேவரடியார்களில் பெரும்பான்மையினர் தங்கள் சொந்தப்பொருளைக் கொடுத்து நிலங்களை பெற்றனர் நிலங்களை விலைக்கு வாங்கினர் சிலர் இறையிலியாக நிலங்களை விலை கொடுத்து வாங்கியவர்கள் அவற்றை கோவில்களுக்கு குடிநீங்கா தேவதானமாகவும் திருநாமத்துக் காணியாகவும் மீண்டும் விட்டனர் தாம் பெற்ற இறையிலி நிலங்களுக்காக கோவில்களுக்கு நெல் அளக்கவும் சிலர் ஒப்புக் கொண்டனர் [புக 319] பொருள் கொடுத்து விலைக்கு பெற்ற காணிகளான நிலங்ள் தன்மாதான விக்கிரயங்களுக்கு உரிமை உடையனவாக இருந்தன [புக 367,442,593] அதாவது அந்நிலங்கள் மீது எல்லா உரிமைகளையும் அனுபவிக்கலாம் தேவரடியார்களுக்கு விடப்பட்ட காணிகள் தேவடிமைக் காணி என்ற பெயராலும் தேவடி வயல் என்ற பெயராலும் அழைக்கப்பட்டன. தேவரடியார்களுக்கு நிலக் காணிகளோடு கோவில் வளாகத்திலும் மடைவளாகத் தெருக்களிலும் குடியிருப்பதற்கு மனைகளும் விடப்பட்டன

## தேவரடியார்களும் திருப்பணிகளும்

கோவில்களில் இசை, நாட்டியம் முதலிய கலைகளை நடத்துவதற்காக வந்த தேவரடியார்கள் கோவில்களின் வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டு தெய்வங்களின் சிலைகளை பதிதாகச் செய்து வைத்தும், அமுதுபடி, சாத்துப்படி உள்ளிட்டவைகளுக்கு நிலக்கொடைகள் வழங்கியும் தொண்டுகள் பல செய்தனர்

திருமணஞ்சேரி சிவன் கோவிலில் 1198 இல் தில்லைவனமுடையாள் என்ற மதவள்ளி என்ற தேவரடியார் திருமணஞ்சேரி ஈஸ்வரன் கோவிலில் சேத்திர பால தேவர்களை புதிதாகச் செய்து வைத்து அமுதுபடிக்கு நாள்தோறும் இருநாழி அரிசி அளப்பதற்கும் விளக்கு எரிக்கவும் 500 காசுகளை கோவில் பண்டாரத்தார்களிடம் கொடுத்து இருப்பு வைத்து அதன் வருவாயைக் கொண்டு நாள்தோறும் அமுதுபடி தப்பாமல் செய்யவும் விளக்கு எரிக்கவும் ஏற்பாடு செய்தார் [பு.க. 152]

குடுமியான்மலை மேலைத்தளிமகாதேவர் கோயிலில் அக்கோவில் தேவரடியார் துக்கையாண்டார் மகள் நாச்சியார் தன்மமாக அக்கோவிலில் எழுந்தருளச் செய்த திருக்காமக் கோட்ட நாச்சியார் என்ற அறிவுடைய மலர் மங்கையரின் பூசைக்கும் திருப்பணிக்கும் மற்ற நிமந்தங்களுக்கும் உடலாக மேல்மண நல்லூரில் நிலக்கொடை வழங்கினார் [புக 366]

குன்னாண்டார்கோவில் குடபோகத்துக் கோவில் முன்மண்டபத்திலுள்ள விருப்பன உடையார் காலத்திய கல்வெட்டு ஒன்று குன்றாக்குடி உடைநாயனார் கோவிலில் ஒரு பகுதி சரிந்து விழுகையில் அக்கோவில் தேவரடியாரில் நல்ல பிள்ளை பெற்றாள் மகள் ஆதனமழகியார் தன்மமாக அதை செப்பனிட்டுக் கொடுத்துள்ளார் [புக 686] விராலிமலை சுவாமி கோவில் கல்வெட்டு ஒன்றில் விராலிமலை கோயில் தேவரடியாரில் முழுதுடையாள் என்பாள் மாணிக்கவாசகர் சிலையினை செய்து வைத்துள்ளார் [புக 899]

## தேவராடியார்கள் செய்யும் பணியும் முறையின் வகைப்பாடும்

குளத்தூர் சுந்தர சோழீஸ்வரமுடையார் கோவிலில் உள்ள மூன்றாம் குலோத்துங்கனின் 30-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்றில் அக்கோவிலில் தேவரடியார்கள் பலரை நியமனம் செய்து அவர்களது பணியினை முறைப்படுத்திய செய்தி கூறப்பட்டுள்ளது [புக 162] அக்கோயிலில் "தேவரடியார் திருப்பாட்டடைவும் திருவாலத்தி எடுக்கவும், மெய்க்காட்டடைவும்" என்று அவர்கள் செய்யக்கூடிய பணியினை கோவில் தானத்தாரும், ஊராரும் கூடி நிச்சயித்தனர் அடுத்து அவர்கள் செய்யும் பணியை 1,2,3 என முறைகளில் வரிசைப்படுத்தினர் முதற்குடி முறையில் வில்லவதாய் மாணிக்கம், சத்துருகால மாணிக்கம் மற்றும் ஒருவர் ஆகிய மூன்று பேர்களும், இரண்டாம் முறையில் அம்மையாள்வியான அற்புதக்கூத்த மாணிக்கம், நாச்சியாழ்வியான வில்வதாய் மாணிக்கம் என்ற இருவரும் மூன்றாவது முறையில் சுந்தர வளவதேவ மாணிக்கம் அவள் மகள் கணபதியான குலோத்துங்க சோழ மாணிக்கம், பொல்லாத பிள்ளையான திருஞான சம்பந்த மாணிக்கம் ஆகியவர்களும், நான்காம் முறையில் வல்லியான ராஜகெம்பீர மாணிக்கம், பொல்லாத பிள்ளையான சோழகோன் மாணிக்கம்

முதலானவர்களும் ஐந்தாம் முறையில் திருச்சிற்றம்பல மாணிக்கம் மற்றும் வேறு சிலரும் இருந்தனர் ஆறாம் முறையில் அம்மையாள்வியான திருவெண்ணாவல் மாணிக்கம் திருக்களிற்றுப்படி புரிந்த மாணிக்கம் ஆகியவர்களும் இப்படி ஏழு வரிசைகள் கூறி நியமிக்கப்பட்டனர் இக்கல்வெட்டின் கடைசிப்பகுதியில் "திருநாளில் திருவாலத்தி எடுக்க எனக்கண்டுள்ள வாசகம் கோவில் திருநாளின் போது இறைத் திருஉருவத்தின் முன் ஆலத்தி எடுக்கப்பட்டதைக் காட்டுகிறது ஆலத்தி சுண்ணாம்பு கலந்த மஞ்சள் நீரினை ஒரு தட்டில் வைத்து அதில் தீபம் ஏற்றிக் காட்டுதலாகும் கோவில் முறை வைப்பில் ஒவ்வொரு முறையிலும் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் பணியாற்றினர் தேவரடியார்களுக்கே உரிய இசை, நாட்டியம், ஆகிய பணிகளோடு ஆலத்தி எடுக்கும் பணியையும் தேவரடியார்கள் செய்தனர் பாட்டடைவு என்பது இசை சம்மந்தப்பட்டதாக இருக்கலாம்

## தேவரடியார்களும் அடைவுகளும்

தேவரடியார்களுக்கு கோவில்கள் தோறும் சில உரிமைகள் வரையறுத்துக் கொடுக்கப்பட்டன இவர்கள் பெற்ற உரிமைகளில் ஒன்று அடைவுகள் ஆகும் கீழைக்குறிச்சி சோமீஸ்வரர் கோவில் மல்லிகார்ச்சுனமகாராயர் கல்வெட்டு ஒன்றில் அக்கோவில் தேவகன்மிகள், மாடாபத்தியம் செய்பவர்கள், கோவில் கணக்கர்கள் ஊரார்கள் ஆகியவர்கள் முன்னிலையில் தோகை மலையில் இருக்கும் தலையாரி வயிச்சய நாயக்கர் கீழைக்குறிச்சி கோவிலுக்கு பெத்தாயி என்ற அடைக்கலங்காத்த மாணிக்கத்தாளை தேவடிமையாக விட்டு அவருக்கு தேவடிமைச் சுவந்திரம் நிர்ணயம் செய்து கோவிலில் முதலடைவும் மடைவளாகத்தெருவில் குடியிருப்பதற்கு மனைகளும் இக்கோவில் தேவதானத்து இரமாண்டார் வயலில் உள்ள உடையார் வயலில் சிறிது நிலமும் நிலவிழுக்காட்டுப்படி நீரும் விட்டுக்கொடுத்தனர்

திருமயம் வட்டம் பொன்னமராபதி சுந்தர ராஜப்பெருமாள் கோவிலில் 1446இல் என்ற மறையவனால் நியமிக்கப் பெற்ற சீரங்க நாயகி என்ற பெண்மணி பொன்னமராபதி கோவிலில் முதலடைவு பெற்று அரங்கேறி ஆடினாள், இவளுக்கு திருக்கை வழக்காக புதூர் வயலில் இறையிலியாக காணி விடப்பட்டது [புக 781]

மேற்படி கோவிலில் 1553இல் இக்கோவில் பண்டாரத்தாரிடமும் ஊராரிடமும் மல்லாயி அவள் மகள் உலகுடையநாச்சி ஆகியவர்களும் பொன்னன், வேங்கடம், மல்லாயின் மற்றொரு மகள் அழகப்பெருமாள் மற்றும் தாயுமான முதலானவர்களும், தங்களைக் காப்பார் யாரும் இல்லாது தாங்கள் இக்கோவிலுக்கு அடிமையாகப் புகுந்தோம் எங்களை ஆதரிக்க வேண்டுமென்று சொன்னதால் கோவில் பண்டாரத்தாரும் ஊரவரும் சேர்ந்து இவர்களைக் கோவில் அடிமைகளாக ஏற்றுக்கொண்டு இவர்களது குறைகளைத் தீர்த்து இவர்களுக்கு இலச்சினையும் [முத்திரை] சாத்தி ஊரவர் தன்மமாக உலகுடை நாச்சிக்கு கோவிலிலே இரண்டாம் அடைவும் திருக்கோவில் வளாகத்தில் இரண்டு மனைகளும் இவவூர் வயலில் இரண்டு மா நிலமும் இறையிலியாகக் கொடுத்து இவள் மகள் அழகப்பெருமாளுக்கு கோவிலில் மூன்றாம் அடைவும் இரண்டு மனையும் இக்கோவில் திருநாமத்துக் காணியான புதுவூர் வயலில் நிலமும் இறையிலியாகத் தந்து பொன்னக்கும் தாயுமானுக்கும் கோவிலில் வேளைக்காரப் பணியும் கொடுத்து அவர்களுக்கும் கோவிலில் மனையும் இறையிலி நிலமும் தந்து பிராமணம் பண்ணிக்கொடுத்தனர் [புக 793],

ராங்கியம் பூமீசுரர் கோவிலில் உள்ள 1489 ஆம் ஆண்டு கல்வெட்டு பூமீசுரமுடையார் கோவிலுக்கு தேவடிமை இல்லாததால் மேற்படிகோவில் பண்டாரத்தாரும் ஊராரும் உடையம்மையை தேவடிமை ஆகச் செய்து கோவிலல் முதலடைவு உரிமையும் தந்து திருவந்திக் காப்பும்செய்து நாலுதிக்கும் வென்ற மாணிக்கம் என்ற பட்டமும் மடைவளாகத் தெருவில் மனையும் பாண்டிநேரிவயல் மற்றும் ஏரநேரி வயல்களில் நிலமும் நிலத்திற்குரிய தண்ணீரும் கொடுத்தனர் [புக 814]

இக்கோவிலில் உள்ள 1517ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்றில் ராங்கியம் ஊரவரால் அவ்வூர் பூமீசுவரர் கோவிலுக்குத் தேவடிமைகளாக நியமிக்கப்பட்டிருந்த மேனி அவளது பிள்ளைகள் முதலானோர் யாருக்கும் சொல்லாமல் ஊரை விட்டுச்சென்றுவிட ஊரார் பல இடங்குளுக்கும் தேடிச்சென்று இறுதியில் அவர்களை வேலங்குடி கோவிலில் பார்தது தங்கள்

கோவில் தேவரடியார் இங்கு இருப்பதென்ன என முறையீடு செய்கின்றனர் மேலிடத்தார் அவள் ராங்கியம் கோவிலுக்கு, பாதியும் வேலங்குடி கோவிலுக்கு பாதியும் சேவிக்கட்டும் என்று சொல்ல, ராங்கியம் ஊரார் எங்கள் கோவில் தேவரடியார் வேலங்குடி கோவிலுக்கு பகுந்து கொடுப்பதென்ன என்று மறுத்துரைக்க மேலிடத்தார் அத்தேவரடியாரை நேரில் அழைத்துப் பேசியும் நாலு பெரியவர்களைக் கேட்டும் போட்டிருந்த சூலம் பார்த்தும் அந்த தேவரடியார் ராங்கியம் கோவிலுக்கே சேவிக்கட்டும் என்று முடிவுசெய்கின்றனர் [புக 841] அவ்வாறு முடிவு செய்வதாக கல்வெட்டு சொல்லுமிடத்து "போட்டிருந்த சூலமும் பாதச் சூலமும் கண்ட பிறகு" என்ற தேவரடியார்களுக்கு உடலில் சூலவடிவில் முத்திரை அடையாளம் இடப்பட்டிருந்ததைத் தெரிவிக்கிறது முத்திரையை உடம்பில் பச்சை குத்துதல் அல்லது பழுக்கக் காய்ச்சிய திரிசூல வடிவிலான உலோகத் தகடினை உடம்பில் குறிப்பிட்ட இடத்தில் வைத்து புண்ணை உருவாக்கி அப்புண்ணால் ஏற்படும் தழும்பை முத்தரையாகப் பயன்படுத்தி இருக்க வேண்டுமென்று கருதலாம் இதைக் குளத்தூர் சுந்தர சோழீஸ்வரர் கோவில் கல்வெட்டில் வரும் "திருசூலம்" என்ற சொல் [புக 162] பொன்னமராபதி அழகப்பெருமாள் கோவில் கல்வெட்டில் வரும் "முன்பே திரு இலச்சினையும் சாத்திவிடுகையில் [புக 793] என்ற கல்வெட்டுத் தொடர் ஆகியவற்றால் தேவரடியர்களுக்கு முத்திரை இடும் வழக்கம் இருந்ததை அறியலாம்

ராங்கியம் பூமீசுவரர் கோவிலுள்ள சித்தார்த்தி வருடம் எனத்தொடங்கும் மற்றொரு கல்வெட்டு மேற்படி பூமிசுவரமுடிடய நாயனார் கோவில் பரிகலைத்தாரில் தையலிக்கு பிள்ளை இல்லை. அவர் மலைச்சி, ஓய்யாள் என இரண்டு பெண்களை தத்தெடுத்து வளர்க்கிறார் தனக்கு உரிமையான ராங்கியம் கோயில் தேவடிமைப்பணியான இரண்டாம் அடைவுக்கு உண்டான நஞ்சை, புஞ்சை நிலங்களில் தையலின் தமையன் சிதம்பரநாதனுக்கு தனது காணியில் மூன்றில் ஒன்றைச் கொடுத்து விட்டு மீதிக்காணியை மலைச்சி, மலச்சியின் ஆண்பிள்ளைகளும் ஓய்யாள், ஓய்யாளின் ஆண்பிள்ளைகளும் அனுபவித்துக் கொள்வதற்கு உரிமையுடன் ஓர் அடைவுக்கு இரண்டு பெருங்கோவில் சேவகஞ்செய்துவர பிரமாணஞ்செய்து

கொடுக்கிறார். இதன் வழி அதாவது தேவரடியாராக பணிசெய்யும் ஒருவருக்கு பிள்ளை இல்லாதிருந்தால் அவர் வளர்ப்புப் பிள்ளைகளுக்கு அந்த உரிமையை மாற்றிக் கொடுப்பதற்கும் அவருக்கு பின் அவரது பணியை வளர்ப்பு மக்கள் ஆலயத்தில் பணி செய்வதற்கும் உரிமை இருந்தது [பு.க.963]. தேவரடியார் சொத்தில் அண்ணன் தம்பி முதலான குடும்ப உறுப்பினர்களுக்கு உரிமை இருந்தது. தேவடியார்களின் தேவடிமை சுதந்திரத்தில் அல்லது உரிமையில் ஒன்றாக குறிக்கப்படும் அடைவு இங்கு முறை என்ற பொருளில் கையாளப்பட்டிருப்பதாகக் கருதலாம். குளத்தூர் சுந்தர சோழீசுவரர் கோவில் கல்வெட்டில் முறை வகுக்கப்பட்டிருப்பதை நோக்கும் போது இது புலப்படும்.

## பரிகலத்தார், பரிகலம் ஆட்சி, வேளைக்காரர் சொல்லாட்சிகள்

தேவரடியார்களைப் பற்றிய கல்வெட்டுகளில் தேவரடியாரைக்குறிக்கின்ற இடங்களில் "கோவில் பரிகலத்தாரில்" என்றும் "ஐந்தாம் அடைவுக்கு பரிகலம் ஆட்சி செய்கையில்" என்றும் வரும் சொற்கள் தேவரடியார்களுக்கு பரிகலத்தார் என்ற பெயர் இருந்து வந்ததை உணர்த்தும் தமிழ்க் கல்வெட்டுச் சொல்லகராதியில் பரிகலம் என்பதற்கு கடவுளுக்கு முன்வைக்கும் உண்கலங்கள் என்றும், பரிகலத்தார் என்பதற்கு பரிவாரத்தர் என்றும் பொருள் கண்டுள்ளது. பரிகலத்தார் என்பதற்கு கல்வெட்டு அகராதியிலுள்ள முற்சொல் பொருளே சரியானதாகும். ஏனென்றால் தேவரடியார்கள் கோவில் பணியாளர்கள் அவர்கள் இறைவன் திருமுன் வைக்கப்படும் உண்கலத்தோடு ஏதோ ஒரு வகையில் தொடர்புடையவர்களாக இருந்து அதனால் இவர்களுக்கு பரிகலத்தார் என்ற பெயர் வந்திருக்க வேண்டும்.

தேவடியார்களைப் பரிகலத்தார் என்பதோடு வேளைக்காரர் என்றும் குறிப்பிடுவதை சில கல்வெட்டுகளில் காணலாம். பொன்னமராவதி பெருமாள் கோவில் கல்வெட்டில் அக்கோவில் தேவரடியாரின் மகனை குறிக்குமிடத்து "இரண்டு வேளைக்காரர் துரமும்" என்று குறிப்பிடுகிறது. தமிழ்ச்சொல் கல்வெட்டு அகராதியில் வேளைக்காரர் என்பதற்கு சோழர் படைப்பிரிவில்

ஒன்று என்றும் துரம் என்பதற்கு பணி எனவும் பொருள் கண்டுள்ளது. ஆனால் இங்கு வேளைக்காரர் என்பதற்கு சோழர்படை என்று கொள்ளுதல் பொருந்தாது. இங்கு வேளைக்காரர் கோவில் பணியில் ஈடுபட்டவர் ஆதலால் வேளைக்காரர் என்றால் வேளா வேலைக்கு கோவில் பணியில் ஈடுபவர் என்றும் துரம் என்பதற்கு பணி என அகராதியில் கண்டுள்ளதையும் வைத்து வேளைக்கார துரம் என்பதற்கு வேளைக்காரப்பணி எனக் கருதலாம்

## பெருமைச்சுவடும் சிறுமைச்செயலும்

புதுக்கோட்டைக் கல்வெட்டுகளில் காணப்படும் தேவரடியார்களைப் பற்றி ஆராய்ந்து பார்க்கும் போது முற்பகுதி தேவரடியார்கள் நல்ல பண்பாட்டுடனும் வளமான வாழ்க்கைத் தரத்துடனும் காணப்படுகிறார்கள். அவர்களோடு பிற்காலக் கல்வெட்டுகளில் காணப்படும் தேவரடியார்களை ஒப்பிடுகின்ற போது குறைபாடான வாழ்க்கைத்தரம் தாழ்நிலைப் பண்பாடு ஆகியவற்றோடு தான் பார்க்க முடிகிறது.

1616 ஆம் ஆண்டு வெட்டப்பட்ட கல்வெட்டு ஒன்று குடுமியான்மலை கோவிலில் இரண்டாம் அடைவில் கோவில் பணியாற்றிய தித்தியாண்டி சிலம்பன் அம்மச்சியார் என்பவர் குடுமியான்மலை அகிலாண்டீஸ்வரி அம்மன் கோவிலில் அம்மனுக்கு சாத்தியிருந்த பட்டைக்காரை என்ற அணிகலனைத் திருடி விற்ற களவினைக் கண்டு கோவிலார் அவரை கோவில் பண்டாரத்தில் காவல் பண்ணி அவனது ஒருகையையும் ஆக்கினை செய்ததோடு அந்தப்பட்டைக்காரையின் விலைக்குரிய பத்துப்பொன் பணத்தினை அவனைக் கொடுக்குமாறு சொல்கையில் அவன் தன்னால் அப்பணம் கொடுக்க வகையில்லையென்றும் தனக்கு காணியாட்சி தேவை இல்லை என்றும் சொல்லியதால் அக்கோவில் தேவரடியார் பல்லவராய மாணிக்கத்தாளுக்கு விற்பதற்கு இசைந்து கோவிலார் அவனது காணியாட்சியை எழுதிக்கொடுக்கும் நிலை ஏற்படுகிறது [பு.க. 867].

திருவாலந்துரை என்ற மலையடிப்பட்டி வாகீசர் கோவில் கல்வெட்டொன்று முற்பகுதி தேவரடியார்களின் பெருமைச்

சுவடுக்கு மாறான ஒரு சிறுமைச் செயலைக் கூறுகிறது பூச்சுகுடியில் இருந்த ஆவுடையாத்தேவன் என்பவன் திருநெடுங்களத்தில் இருந்த ஒரு தேவடியாருடன் நட்பும் தொடர்பும் வைத்திருந்தான் மேற்படி ஆவுடையாத்தேவன் திருநெடுங்களம் தேவரடியார் வீட்டிற்கு சென்றபோது ஏற்கனவே அங்கு அத்தேவரடியார் வீட்டில் ஒரு பிராமணன் இருப்பதைப் பார்த்து பொறுக்க மாட்டாது, அப்பிராமணனையும் அத்தேவரடியாரையும் வெட்டிப் போட்டு விட்டு அவன் மலையடிக்கு வந்த விடத்தில் தனக்குக் கண் தெரிந்தால் தனது நஞ்சை புஞ்சை நிலங்களை வாஹீசுவரர் சாமிக்கு எழுதி வைப்பதாக வேண்டிக்கொண்டான் உடனே அவனுக்கு கண்தெரிந்தது தான் சொன்னபடி தனது நிலங்களை கோவிலுக்கு எழுதி வைத்து சாசனமும் வெட்டிக்கொடுக்கிறான் இந்நிகழ்ச்சி பிற்காலத் தேவரயார்களின் வாழ்க்கைத் தரத்தில் ஏற்பட்ட கரும்புள்ளி என்றே சொல்ல வேண்டும்

**முடிவுரை**

புதுக்கோட்டைக் கல்வெட்டுகளில் தேவரடியார்களைப் பற்றிய கல்வெட்டுக்கள் 35 ஆகும். அவை கி.பி 11 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 17 ஆம் நூற்றாண்டு முடியவுள்ள காலக்கட்டத்தைச் சேர்ந்தவையாகும் இருப்பினும் சென்னை மாநில அரசால் தேவதாசி முறை ஒழிக்கப்படும் வரை இவர்கள் கோவில் பணியில் இருந்து வந்தனர் எனலாம் பொதுவாக இங்குள்ள தேவதாசிகளின் வாழ்க்கைத் தரத்தை சொல்லும் போது முற்பகுதியில் வாழ்ந்த தேவரடியார்கள் நிறைய பொருள் கொடுத்து நிலத்தை விலைக்க வாங்குமளவிற்கு செல்வச் செழிப்புடன் வாழ்ந்து வந்தனர் பிற்பகுதியில் வாழ்ந்த தேவவதாசிகள் வறுமையிலும் கடன் துன்பத்திலும் வாழ்ந்ததோடு தாங்களே கோவில் அடிமைகளாகப் புகுந்தனர் தனி மனிதர்களாலும் தேவடிமைகள் சில கோவில்களுக்கு விலைக்கு வாங்கி விடப்பட்டனர் கோவில் தேவகன்மிகள் சில கோவில்களுக்கு விலைக்கு வாங்கி விடப்பட்டனர் கோவில் தேவகன்மிகள், மாகேசுரக் கண்காணிகள் ஊரார்கள் கோவில்களில் தேவரடியார்களை நியமிக்கும் அதிகாரம் பெற்றிருந்தனர் தேவரடியார்கள் சிவன் கோவில்களில் மட்டுமல்லாது பெருமாள் கோவில்களிலும் பணியாற்றினர்.

தேவரடியார்கள் கோவில்களில் நாட்டியம், பாட்டு, திருவிழாக்களில் ஆலத்தி எடுத்தல், திருவாசல், நந்தவனம் மெழுகுதல் முதலிய பணிகளைச் செய்தனர். தேவரடியாரின் குடும்பத்து ஆண்கள் கோவில்களில் வைராகி, ஸ்ரீபாதம் [திருவுருவம்] தாங்குதல் போன்ற பணிகளைச் செய்தனர். மேற்கண்டவைகளின் மூலம் தேவரடியார்களின் பணியின் தன்மை, வாழ்க்கை நிலை, சமூக நிலை ஆகியவற்றை அறிந்து கொள்ள முடிகிறது.



# 57. செய்தித் திரட்டு - புதிய கண்டுபிடிப்புகள்

## 57:1

### புழுதியூர் நடுகற்கள்

திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் வட்டம் புழுதியூர் வேடியப்பன் மற்றும் இட வேடியப்பன் எனப்படும் இரண்டு நடுகற்கள் உள்ளன. ஒன்று வேடியப்பன் என்றும், மற்றொன்று இட வேடியப்பன் என்றும் அழைக்கப்படுகிறது இவ்விரண்டு நடுகற்களிலும் எழுத்து பொறிப்புகள் இல்லை இரண்டு நடுகற்களும் எதிர் எதிர் திசைகளில் அமைந்துள்ள இரண்டு ஏரிக்கரைகளின் அருகில் அமைந்துள்ளன இந்நடுகற்கள் வயல்வெளி நடுவில் வழிபடும் கல்லாக உள்ளது

வேடியப்பன் சாமி என்று அழைக்கப்படும் இந்நடுகல் வீரன் கையில் வில்லுடன் நாணேற்றுகின்றபடி செதுக்கப்பட்டுள்ளது. வீரன் தலையில் பெரிய கொண்டையும் கால்களில் வீரக் கழல்களும் காட்டப்பட்டுள்ளது வீரனின் முகம் நேராகப் பார்த்தபடியுள்ளது

இடவேடியப்பன் என்று அழைக்கப்படும் மற்றொரு நடுகல் பூமியில் புதைக்கப்பட்ட நிலையில் தரையில் இருந்து ஐந்தடி உயரமும் நாலரை அடி அகலமும் கொண்ட பெரிய நடுகல்லாக உள்ளது வீரனின் முகம் வலதுபுறம் திரும்பிய நிலையில் செதுக்கப்பட்டுள்ளது. வலதுபுறம் சென்று முகத்தைப் பார்த்தால் முகம் முழுவதும் தெரியும்படி வீரனின் பெரிய மீசையும் விரிந்த கண்களும் கம்பீரமாக செதுக்கப்பட்டுள்ளன.

**இளங்கோ,**
**த. செந்தில் குமார்**

## 57:2

### புதுச்சேரி – மங்கலம் வட்டாரத்தில் புதிய சிற்பங்கள்

புதுச்சேரியைச் சுற்றியுள்ள பகுதிகளில் மேற்பரப்பு கள ஆய்வு மேற்கொண்ட பொழுது பின்வரும் தொல்லியல் மற்றும்

பல்லவர் கால உருவ அமைதி கொண்ட ஜேஷ்டா சிற்பங்கள் இரண்டு, ஒன்றன் கீழ் ஒன்றாக அரங்கனூர் ஐயனார் கோயிலின் பின்புறம் பாகூர் ஏரியின் கலிங்கல் படிக்கற்களில் வழிபாடற்ற நிலையில் உள்ளன இவ்வூரின் மையக் குடியிருப்பு பகுதியில் உள்ள குளக்கரையில் மார்பளவு கொண்ட அம்மன் சிலையும், அதனருகே ஒரு எந்திரக் கல்லும் உள்ளன. இவ்வெந்திரக் கல்லின் முன்புறம் பல குறியீடுகளைக் கொண்ட மந்திர எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன எந்திர கல்லின் பின்பறும் 'சிவமயம்' என முதல் வரியிலும், 'கிருஷ்ணராயன்...' என இரண்டாம் வரியிலும் பொறிக்கப்பட்டுள்ளன. இவ்வாசகம் சிதைந்த நிலையில் உள்ளது

## பிள்ளையார்குப்பம்

புதுவைக்கு மேற்கே வில்லியனூரிலிருந்து சுமார் 7 கி.மீ தொலையில் இவ்வூருக்கு தெற்கே ஓடும் சங்கராபரணி ஆற்றங்கரையின் உள்ள ஆலமரத்தடியில் சப்தமாதர் உருவங்கள் ஒரே கற்பலகையில் புடைப்புச் சிற்பமாக காணப்படுகிறது இதேபோன்ற ஒரே கற்பலகையில் அமைந்த சப்தமாதர் சிலை இவ்வூர் கூத்தாண்டவர் கோயில் அருகேயுள்ளது மேலும் புதுவையின் இதர பகுதிகளான திருக்கனூர், சோம்பட்டு, புதுகுப்பம், பின்னாட்சிகுப்பம், பிச்சைவீரன்பேட்டை, மங்கலம், ஏம்பலம், காட்டோகுப்பம், காடடுப்பாளையம், மண்ணாடிபட்டு, லிங்காரெட்டிபாளையம், கலித்தீர்த்தால்குப்பம், உருலையன்பேட்டை, முத்தியால் பேட்டை, சோலைநகர் முதலிய இடங்களில் காணப்படுகின்றன.

## செல்லிப்பட்டு

புதுவைக்கு மேற்கே சுமார் 17 கி.மீ. உள்ள இவ்வூரின் நடுவே புதிதாக அமைக்கப்பட்ட சிமெண்ட் சாலையின் ஓரமாக சிற்றரசன் தனது மனையாளுடன் உள்ளது போன்ற கற்சிற்பம் ஒன்று உள்ளது. இச்சிலை சுமார் 15 அடி உயரமும், 1 அடி அகலமும் உள்ளது சிற்றரசனின் சிகையலங்கார அமைப்பு நாயக்கர் கலைப்பாணியை ஒத்ததாக உள்ளது. சிற்றரசரின் வலக்கையில் வில்லும், அவரின் வலப்பக்கம் துணைவியாரும், தம்பதியர் இருவரும் அஞ்சலி முத்திரையுடன் உள்ளவாறு அமைக்கப்பட்டுள்ளது

**கரிக்கலாம்பாக்கம்**

புதுவைக்குச் சுமார் 15 25 கி.மீ தொலைவில் தென்மேற்கே ஊரின் தெற்கேயுள்ள குளத்தின் கிழக்குக் கரையில் ஜேஷ்டா சிற்பம் உள்ளது புடைப்புச் சிற்பமாக மிகத்தெளிவாக உள்ளது. இதனை 'காளி' என வழிபடுகின்றனர்.

**ராம. எழில்ராமன்**
**புதுச்சேரி**

**57:3**

**கடலூர் மாவட்டத்தில் புதிய கற்சிற்பங்கள்**

**துர்கை**

கடலூர் மாவட்டம், சிதம்பரம் - கடலூர் தேசிய நெடுஞ்சாலையில் உள்ள ஆலப்பாக்கம் ஊரிலிருந்து மேற்கே 4 கி.மீ தொலைவில் உள்ள பள்ளிநீர் ஓடை கிராமத்தில் கோபாலகிருஷ்ணன் என்பவர் தமது நிலத்தைச் சீர்செய்யும் பொழுது இச்சிலை வெளிப்பட்டது. கிரீடமகுடம், காதில் கனத்த குண்டலம், அலங்கரிக்கப்பட்ட ஆரம், சரபளி, சிம்மகேயூரம், எளியகுசபந்தம், தொடைவரை உள்ள சிறிய கீழாடையானது இடையின் இருபுறமும் தொங்கிய நிலையில் உள்ளது நான்கு கரங்களையுடைய இச்சிற்பத்தின் மேலிரு கரங்களில் சங்கும், சக்கரமும், கீழ் வலது கரம் உடைந்துள்ளது இடக்கரம் கடிகஸ்த நிலையில் தொடை மீது வைக்கப்பட்டுள்ளது இக்கைகளில் கனத்த காப்புகள் உள்ளன சமபாதஸ்தான நிலையில் உள்ள இச்சிலை செவ்வக வடிவ கற்பலகையில் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது இச்சிலை நான்கடி உயரம் இரண்டடி அகலமும் உடையதாகும். சதுர வடிவ முகம், குறுகிய இடை, சிலையின் கைவிரல், கால் விரல்களும் உடல்கூறு அமைப்பைவிட சற்றுப் பெரியதாக காட்டப்பட்டுள்ளது வட்டாரக் கலையின் தாக்கம் காணப்படுகிறது. இத்துர்கை கி.பி 10-11ஆம் நூற்றாண்டின் இடைக்காலத்தைச் சார்ந்ததாகும்.

## ஐயனார் சிலை

கடலூர் மாவட்டம், சிதம்பரம் வட்டம், பெரியப்பட்டு கிராமத்தில் பள்ளிக் கட்டடம் கட்டுவதற்காகத் தோண்டப்பட்ட பள்ளத்தில் ஐயனார் சிலை கிடைத்தது

இச்சிலை 70 செமீ உயரம், 40 செமீ. அகலமும் உடையது உட்குடியாசனம், ஜடாபார அமைப்பு, காதில் பத்தரகுண்டலம் வலது கையில் செண்டு, இடதுகை தண்டகஸ்தம் நிலையிலும் ஆரம், சரபளி, முத்துமாலை, பூணூல், பட்டையான கேயூரம், கைகளில் பட்டையான காப்பு, அழகிய மடிப்புகளுடன் கூடிய கீழாடை, காலில் சலங்கைகள் போன்றவை உள்ளன சதுர வடிவ முகம், எடுப்பான நாசி, கீழ் நோக்கிய பார்வையுடன் இச்சிலை வடிக்கப்பட்டுள்ளது இதன் காலம் கிபி. 15-16ஆம் நூற்றாண்டாகும்

## நடுகற்கள்

கடலூர் மாவட்டம், சிதம்பரம் வட்டம் சிலம்பிமங்கலம் ஊரின் பின்புறம் உள்ள வதியால் மணல்மேட்டில் பெரியபட்டை சார்ந்த கண்ணன் என்பவர் மணல் எடுக்கும்பொழுது இரண்டு நடுகல் சிலைகளை எடுத்து தற்பொழுது பெரியப்பட்டு முருகன் கோயில் முன்புறமாக வைத்துள்ளனர்

## முதல் நடுகல்

போர் புரியும் நிலையில் வலது கையில் வாள், இடது கையில் கேடயம், இடைக் கச்சில் குறுவாள், அலங்கரிக்கப்பட்ட பதக்கத்துடன் கூடிய கழுத்தணி, கேயூரம், மெல்லிய மடிப்புகளுடன்கூடிய கணுக்கால் வரையிலான கீழாடை, கனத்த காதணி, பக்கவாட்டில் கொண்டை, இடது தோல் பகுதியில் பெரிய காப்பு போன்ற ஆபரணம் காணப்படுகிறது முறுக்கிய மீசையுடன் மூன்று அடி உயரம், மூன்றடி அகலம் உடைய சதுர வடிவ கல்லில் புடைப்புச் சிற்பமாக செதுக்கப்பட்டுள்ளது

## இரண்டாவது நடுகல்

மூன்றடி உயரம் மூன்றடி அகலம் உடைய சதுர வடிவ கருங்கல்லில் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது முறுக்கிய மீசை போர் செய்யும் நிலையில் கையில் வாள், கேடயம்

இடையில் குறுவாள், அலங்கரிக்கப்பட்ட பதக்கம், கேயூரம், கழுத்தணிகள், மெல்லிய மடிப்புகளுடன் கூடிய கீழாடை பக்கவாட்டில் கொண்டை அகன்ற நாசியுடன் இச்சிற்பம் உள்ளது. இவ்விரு நடுகற்களும் நாயக்கர் காலத்திற்குப் பிந்திய காலகட்டத்தைச் சார்ந்த கலைப் பண்புகளை பிரதிபலிப்பதால் இவற்றின் காலம் கிபி 17-18ஆம் நூற்றாண்டாகும்

**ஜெ.ஆர். சிவராமகிருஷ்ணன், பி. கலைச்செல்வன்,**
**எஸ். கண்ணன், அண்ணாமலை நகர்**

**57:4**

## அழகியபாண்டியபுரம் வீரமாசதிக்கல்

இடம் :திருநெல்வேலி மாவட்டம், திருநெல்வேலி வட்டம் அழகியபாண்டியபுரம் தேவர்குளம் வீரமாசதிக்கல் சிற்பம் காணப்படுகின்றது சதிக்கல்லில் சதிபத்தினியின் உருவமானது, கணவன் [அ] உயிர் நீத்த வீரனின் அருகில் அமர்ந்த நிலையில் செதுக்கப் பெற்றுள்ளது காலம் 16-17ஆம் நூற்றாண்டாகலாம்

**இல. கணபதி முருகன்,**
**அண்ணாமலை நகர்**

**57:5**

## விருதுநகர் மாவட்டத்தில் ஜேஷ்டாதேவி சிற்பங்கள்

விருதுநகர் மாவட்டத்தில் புல்வாய்கரை திருப்புவனம் சாலையில் உள்ள எஸ் நாங்கூரிலும், அருப்புக்கோட்டை - சாயல்குடி சாலையில் உள்ள பரளச்சியிலும் ஜேஷ்டாதேவி சிற்பங்கள் உள்ளன இரண்டிலும் ஜேஷ்டாதேவி மாந்தன், மாந்தியுடன் இரு கால்களையும் அகல விரித்த நிலையில் உள்ளது இடக்கை பீடத்தின் மீது உள்ளது தலையில் உச்சிக் கொண்டையும் காதுகளில் பத்ரகுண்டலமும் தோளில் கேயூரமும் முன் கைகளில் வளையல்களும் அணி செய்கின்றன.

கழுத்தில் பதக்கத்தோடு கூடிய ஆரம் உள்ளது. வழக்கம்போல் பருத்த வயிறுடனும் பெரிய மார்பகங்களுடனும் தேவி காட்சியளிக்கிறாள். இடையில் இருந்து கணுக்கால் வரை மடிப்புடன் கூடிய ஆடைக்கட்டு உள்ளது வலது இடது பக்கம் முறையே திருவலகும், காக்கைக் கொடியும் உள்ளன.

**வே. திருநங்கை, மதுரை**

## 57:6

## பல்லவர் காலத்து முருகன்

பல்லவர் காலத்து முருகன். காரைக்கால் பகுதியைச் சேர்ந்த மேல்காசாக்குடி முருகன். நாற்கரமுடையவராய் நின்ற கோலத்தில் கோயிலின் இடப்பக்கத்தில் காட்சியளிக்கிறார். மேல் வலக்கையில் வச்சிரமும், மேல் இடக்கையில் ஜெபமாலையும் பெற்றுள்ளார் மற்றொரு வலக்கை அபயம் அளிக்கின்றது. வேறொரு கை இடையில் ஊன்றியிருக்கிறது.

**ந. வெங்கடேசன்,**
**வில்லியனூர்**

## 57:7

## கிளியனூர் அய்யனார்

கிளியனூர் அய்யனார் கோயிலில் பல்லவர் காலத்தைச் சார்ந்த இச்சிற்பம் புடைப்புச் சிற்பம். வழிபாட்டில் உள்ளது உட்குடியாசனத்தில் செண்டு ஏந்திய நிலையில் வலக்கையும், தொங்கிய இடக்கையும் கொண்டு உள்ளது.

அய்யனாரின் நெற்றியில் கண்ணிமாலையும், தலையலங்காரம் மூன்றடுக்கு கொண்ட கொண்டையாகவும் உள்ளது. காதுகளில் ஓலைச் சுருள்கள் அணி செய்கின்றன. கழுத்தை [அகன்ற] தடித்த அணிகலனும், மார்பில் முப்புரிநூல் வலக் மேற்கையின் மீது செல்வது போன்று கருக்கப்பட்டுள்ளது. வயிற்றில் வயிற்றுக்கட்டும் காணலாம். மேற்கையில் வாகுவளையங்களும், மணிக்கட்டில் காப்பும் அணியச் செய்து அய்யனுக்கு மேலும் அழகு சேர்க்கின்றன. இடக்கால் முட்டிக்கு கீழ் யோகப்பட்டமும்

பார்க்க முடிகின்றது. இடக்காலருகே அமர்ந்த நிலையில் ஒரு பெண் உருவமும், வலக்காலருகே குதிரையின் தலை உருவத்தையும் காணலாம்.

**வீரராகவன்,**
**விழுப்புரம்.**



**57:8**

**சமணச் சிற்பங்கள்**

## 1. திருபழனம் மகாவீரர்

தஞ்சாவூர் மாவட்டம், திருவையாறு வட்டம் திருபழனம் அங்காளப் பரமேஸ்வரி கோயில் வளாகத்தில் கிராம தெய் சிற்பங்களுடன் ஒரு சிறிய மகாவீரர் சிற்பம் காணப்படுகிறது. இச் சிற்பம் 14 செ.மீ. உயரமும், 11 செ.மீ. அகலமும் தலையில் முக்குடையும் உடைந்துள்ளது. இருபுறங்களிலும் யக்ஷர்களின்

உருவத்துடன் அமைந்துள்ளது. சிற்பத்தின் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு.

## 2. புளியக்குடி பார்சுவநாதர்

நாகப்பட்டினம் மாவட்டத்தில மயிலாடுதுறை வட்டம் புளியக்குடி கிராமத்தில் பிள்ளையார்கோயில் வளாகத்தில் 139 செ.மீ. உயரமும் 29 செ.மீ. அகலமுடைய இச்சிற்பம் பீடத்தின் மீது காயோத்சர்க்கம் எனப்படும் நின்ற நிலையில் உள்ளது. தலையின் மேல் பகுதியில் ஐந்து தலை அரவம் குடை பிடித்த நிலையிலுள்ளது. மகாவீரர், மகாவிஷ்ணு, மூதேவி மற்றும் கருடன் ஆகியவற்றின் சிற்பங்கள் உள்ளன.



## 3. மகாவீரர்

சிம்மாசனத்தில் அமர்ந்த கோலத்தில் மகாவீரர் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. சிற்பத்தின் இரண்டு பக்கங்களிலும் யக்ஷர்கள் நின்ற நிலையில் காணப்படுகின்றார்கள். இச்சிற்பம் கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சோந்ததாகும்.

## காமதேவ மங்கலம்

தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவையாறு வட்டத்தில் காமதேவ மங்கலத்தில் ஆற்றின் தென் கரையில் காணும் சிற்பத் தொகுதிகளில் விஷ்ணு, தேவி, கருடன் போன்ற சிற்பங்கள் கவனிப்பாரற்று காணப்படுகிறது. இவை முத்தரையர், சோழர் காலத்தினைச் சேர்ந்தவையாகலாம்.

**கோ. தில்லைகோவிந்தராஜன்**

**57:9**

## கடையாத்துப் பட்டி – குதிரைச் சிற்பம்

புதுக்கோட்டை மாவட்டம் அறந்தாங்கி வட்டம், அறந்தாங்கியில் இருந்து புதுக்கோட்டை செல்லும் சாலையில் 9 கிலோ மீட்டர் தொலைவில் கடையாத்துப்பட்டி அமைந்துள்ளது. இவ்வூரில் இருந்து மெய்ப்பன் கோவிலுக்கு செல்லும் சாலையில் ஒரு கற்பலகையில் குதிரைச் சிற்பம் காணப்படுகிது.



கற்பலகையின் உயரம் 60 செ.மீ., அகலம் 55 செ.மீ. ஆகும். குதிரைக்கு முன்பு ஸ்ரீ வஸ்தம் போன்ற ஒரு மங்கலச் சின்னம் செதுக்கப்பட்டுள்ளது. கல்லின் கீழ் பகுதி புதைந்து

காணப்படுகிறது. இதனை உள்ளூர் மக்கள் "குதிரை மச்சம்" எனக் குறிப்பிடுகின்றனர். வணிகர்களோடு தொடர்புடையதாகவும் இருக்கலாம். இவ்வூரின் தென்மேற்கு திசையில் கட்ட காஞ்சார என்ற இடத்தில் முதுமக்கள் தாழிகள் சிதைந்து காணப்படுகின்றன. இப்பகுதியிலிருந்து கருப்பு, சிவப்பு, மட்பாண்ட ஓடுகள் சேகரிக்கப்பட்டுள்ளன. இவ்விடத்தை உள்ளூர் மக்கள் கட்டகாஞ்சார கண்மாய் எனக் குறிப்பிடுகின்றனர். இப்பகுதி இரும்புக்காலம் தொட்டு மக்களின் வாழ்விடமாக இருந்துள்ளதை அறிய முடிகிறது.

**வெ. யோகேஸ்வரன்,**
**புதுக்கோட்டை**

**57:10**

**சிங்கவரம் நடுகல்**

விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம், சிங்கவரம் கிராமத்தில் மலைக்கோயில் போகும் வழி முன்னதாக உள்ள



மண்டபத்தினை ஒட்டிய பலகைக் கல்லில் காணப்படும் நடுகல். சுமார் 4 அடி உயரம், 2 அடி அகலம் கொண்ட இந்நடுகல்லில் எழுத்துப் பொறிப்பின்றி வில்லேந்திய வீரனின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது.

**முத்து எத்திராசன்,**
**சென்னை**

**57:11**

## சோழவரம் துர்க்கை

வேலூர் மாவட்டம் கணியம்பாடிக்கு மேற்கில் உள்ள ஊருக்கு அருகில் உள்ள சோழவரம் துத்திக்காடு சிற்றூர். இவ்வூருக்கு கிழக்கில் உள்ள சருக்கு மலை குரங்கு ஒட்டி கொட்டாய் என்ற இடத்தில் உள்ள துர்க்கைச் சிலை வலது கைகளில் சக்கரம், வாள், அம்பு, வலது தொடை மீது இருப்பினும் காணப்படுகிறது.

**ம. காந்தி,**
**வேலூர்**



**57:12**

## தாய்லாந்தில் கிடைத்த பொற்பதக்கப் பொறிப்பு

அன்மையில் தாய்லாந்தில் நடந்த கருத்தரங்கு ஒன்றில் கலந்து கொள்ளச் சென்றபொழுது அப்பகுதியால் கிடைத்த பல

அரும்பொருள்களைப் பார்வையிடும் வாய்ப்பு கிடைத்தது. அரும் பொருள்களில் வட்ட வடிவல் அமைந்த பொற்பதக்கம் ஒன்று குறிப்பிடத்தக்கது. இப்பதக்கத்தின் ஓர விளிம்புப் பகுதியைச் சுற்றி பிராமி எழுத்துப் பொறிப்புக் காணப்படுகிறது. இதன் வாசகம். "நாவிகஸ பிரகஸ்பதி ஷர்மஸ" என்பதாகும். தொல்லெழுத்தியில் அடிப்படையில் இபபொறிப்பின் காலம் கி.பி. 3 ஆம் நூற்றாண்டாகும். இப்பதக்கம் பாங்க் குலாய் (Bang Klvay)



**து. தயாளன்,**

**சென்னை**

**57:13**

### தொண்டாமுத்தூர் பரமேஸ்வரன் பாளையங் கோயில் சிற்பங்கள்

கோவைத் தொண்டாமுத்தூர் அருகில் பரமேஸ்வர பாளையம் ஊரில் ஸ்ரீ வெங்கடேச பெருமாள் கோயில் உள்ளது. இக் கோவிலில் விஜய நகரப் பேரரசு கால சிற்பங்கள் சில உள்ளன. இவற்றுள் ஸ்ரீதேவி, ஸ்ரீ வெங்கடேசப் பெருமாள் ஸ்ரீ பூதேவி சிற்பங்களும் கோயிலின் அருகில் குதிரை மீதமர்ந்த நிலையில் உள்ள வீரனின் சிற்பமும் குறிப்பிடத்தக்கன. இச்சிற்பங்கள் விஜய நகரக் காலத்துக் கலை வளர்ச்சிக்கு எடுத்துக் காட்டுகளாக அறங்குகின்றன.

**கே. மேகலா செந்தில்குமார்**

**தேவராயபுரம்**

## 57:14

## காஞ்சிபுரம் உயில் சாசனக் கல்வெட்டு

*காஞ்சிபுரம் இராயர்குட்டைத் தெருவில் அமனாட்சி அம்மன கோவில் வாசல் தெற்குச் சுவரில் கல்வெட்டுக் கருங்கல்பலகை ஒன்று பதிக்கப்பட்டுள்ளது இக் கல்வெட்டில் 1923 ஆம் வருஷம் ஜனவரி மாதம் 22 ந்தேதி திருவள்ளூர் இராமப்பிள்ளை என்பவரின் மகன் விஜயப்பிள்ளை 1922 ஆம் தேதி ஆகஸ்ட் மாதம் 22ந்தேதி உயில் எழுதி வைத்ததை கல்வெட்டு வாசகமாக வெட்டியுள்ளார் அதன்படி மதாாஸ் செங்கற்பட்டின் சென்னை பெத்த நாயக்கன் பேட்டை முருகப்பன் தெருவில் உள்ள வீட்டு மனையின் குடக்கூலி அவ்வீட்டின் ரிப்பேர் செலவுகள் போக திருப்பதி திருவேங்கடமுடையான் திருக்குடை விழாவின் பொழுது செலவிற்காகக் கொடுக்கப்பட்டதைக் குறிப்படுகிறது*

## 57:15

## நடுகல்

*நடுகல் - மேல் ஒலக்கூர் விழுப்புரம் மாவட்டம் செஞ்சி வட்டம் மேல்ஓலக்கூர் கிராமத்தில் பச்சை மலைக்குச் செல்லும் சாலையில் வடக்குப் புறமாக சேட்டாதேவி சிலைக்கு எதிரில் மூன்று வீரர்களின் உருவங்கள் கத்தியும் கேடயமும் கொண்டு விளங்குகின்றன இவற்றை அவ்வூரார் இடைச்சிக்கல் என்கின்றனர் உருவம் பொறிக்கப்பட்ட பலகைக் கல்லின் உயரம் 1 1/2 அடி, அகலம் 3 அடி இந் நடுகள் எழுத்துப் பொறிப்பின்றி காணப்படுகிறது*

**முத்து எத்திராஜன்**
**சென்னை**

## 57:16

## ஐயனார் சிற்பம்

*புதுச்சேரிக்கு தென்மேற்கே சுமார் 13 5 கி மீ தொலைவில் மங்கலம் கிராமத்தில் சங்கராபரணி ஆற்றின் தென்கரையில்*

உள்ள புளியந்தோப்பில் பழங்கால ஐயனார் சிற்பம் உள்ளது இந்த ஐயனார் சிற்பம் உட்குடிகாசனத்தில் அமர்ந்தவாறு வலதுகையில் செண்டும், இடது கை- இடது காலில் வைத்தபடியும், காலில் யோகபட்டையும் உள்ளது சிற்பத்தின் இருபுறமும் தேவியர் சுகாசனத்தில் அமர்ந்துள்ளனர் இருவரின் வலது கையிலும் பத்ம மொட்டுக்கள் உள்ளன

## சப்த மாதர்கள் சிற்பம்

ஐயனார் சிலைக்கு தென்புறத்தில், சப்த மாதர்கள் சிற்பம் புடைப்புச்சிற்பமாக ஒரே கற்பலகையில் சுகாசன நிலையில் அமர்ந்தவாறு உள்ளது இதில் இடமிருந்து வலமாக மூன்று மற்றும் ஐந்தாம் இடத்தில் உள்ள உருவங்களின் தலைமுடி பக்கவாட்டிலும், ஏனைய சிற்பங்கள் தலையில் மகுடத்துடனும் உள்ளன இவற்றில் முதல் நான்கு சிற்பங்களின் வலது கை கடகமுத்திரையுடனும், இடது கையில் கத்திபந்தமும், எஞ்சிய மூன்று சிற்பங்கள், எதிர் அமர்ந்த நிலையில், வலது கையில் கத்திபந்தமும், இடது கை கடகமுத்திரையுடனும் அமைந்துள்ளன

## திருமால் சிற்பம்

இச்சிற்பம், ஊரின் நடுவே, மாரியம்மன் கோயில் பின்புறமுள்ள மேற்கு தெரு முச்சந்தியில், ராஜமாணிக்கம் என்பவரின் வீட்டின் வடகிழக்கு மூலையில் உள்ளது இதன் உயரம் சுமார் 15 அடி உள்ளது திருமாலின் வலது கைகள் சக்கரம் மற்றும் அபய முத்திரையுடனும், இடது கைகள் சங்கு மற்றும் வரத முத்திரையுடனும் உள்ளன தலையில் நெடிய மகுடத்துடன் சாந்த நிலையில் உருவம் அமைக்கப்பட்டுள்ளது திருமாலின் வலப்புறத்தில் தோலின் கீழ் அவரின் துணைவியார் உருவம் சுமார் 1 அடி உயரத்தில், வலது கை கீழ் பார்த்தவாறும், இடது கை அபய முத்திரையுடனும் உள்ளது மக்கள் இதனை காமன் [ரதி-மன்மதன்] சிலையென வழிபட்டு வருகின்றனர் மேற்கூறிய ஐயனார், சப்தமாதர் மற்றும் திருமால் சிற்பங்கள் சுமார் 10-11 ம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம்

## மேல்சாத்த மங்கலம் – திருமால் சிற்பம்

புதுச்சேரிக்கு தென்மேற்கே சுமார் 16 5 கி மீ தொலைவில் மேல்சாத்தமங்கலம் கிராமம் உள்ளது இவ்வூரில் மேற்கில் உள்ள

ஏரிக்கரையின் கிழக்குக்கரையில் உள்ள பூவரச மரத்தடியில் [தற்போது ஒரு கீற்று கொட்டகையின் கீழ்] சுமார் 5 அடி உயரமுள்ள திருமால் சிற்பம், பாதங்கள் புதையுண்ட, நிலையில் காணப்படுகிறது திருமாலின் வலது கைகள் சக்கரம் சக்கரம் மற்றும் அபய முத்திரையுடனும், இடது கைகள் சங்கு மற்றும் வரத முத்திரையுடனும் உள்ளன தலையில் நெடிய மகுடத்துடன், முக அமைப்பு வட்டவடிவில் உள்ளது இச்சிற்பம் வழவழப்பான பளிங்கு கல்லில் செய்யப்பட்டுள்ளது

**ராம. எழில்ராமன்,**
**புதுச்சேரி**

## 57:17

## இலங்கையில் கிடைத்த நானாதேசி வணிகக் குழுவின் முத்திரை

இலங்கையில் தெற்குக் கடற்கரை சார்ந்த ஊர் ஒன்றில் ஒரு வெண்கல முத்திரை அறியப்பட்டுள்ளது இது 4.5 செமீ உயரமுடையது வட்ட வடிவிலான விரல்களிடையே பிடித்துக் கொள்ள வசதியாகக் குமிழ் போன்றும் அடிப்பகுதி தட்டையாக முத்திரை வைக்க ஏதுவாகவும் வடிவம் உடையது மேல் குமிழ் பகுதி 1.5 செமீ விட்டமும் தட்டையான அடிப்பகுதி 4.5 செமீ விட்டமும் உடையவை தட்டையான முத்திரைப் பகுதியில் வணிகக் குழுவினர் பரமேஸ்வரி, லோகமாத எனக் கல்வெட்டுகளில் குறித்திடும் காளியின் உருவம் புடைப்பாக உள்ளது காளி இடதுகாலை முன்வைத்து வலது காலால் அசுரனை மிதித்து உதைக்கும் கோலத்தில் உள்ளாள் பரந்துவிரிந்த சுடர் முடியாய் தலை அலங்காரம் உள்ளது தலைக்கு மேலாக வெண்கொற்றக்குடையும், பசும்பை, சாமரம் போன்ற உருவங்கள் காணப்படுகின்றன நான்கு கரங்களில் பின் வலது கரம்மேல் நோக்கிய சூலம் பற்றியுள்ளது பக்கத்திற்கு ஒருவராக இருபுறமும் இரு பணிப்பெண்கள் உள்ளனர் இவ்வுருவங்கள் நேர்த்தியில்லாது கிராமிய முறையில் வடிக்கப்பட்டுள்ளன இவ்வுருவமே முத்திரையாகப் பயன்படுத்தும்போது பதிவாகக் கூடியவை

முத்திரையின் தட்டையான அடிப்பகுதிக்கு மேலாக எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன இவ்வெழுத்துகள் முத்திரையிடும்போது பதிவாகக் கூடியவை அல்ல இம்முத்திரை யாருடையது என்று தெரிவிக்கும் வகையில் மேல்விளிம்பில் எழுத்துகள் உள்ளன

அதன் வாசகம் வருமாறு:

'ஸ்ரீநானாதேசிகன் லேகை'

இவ்வெழுத்துகள் நேர்த்தியானவை அல்ல 'கள்' என்ற எழுத்துகள் ஊகமாகவே படிக்க வேண்டியுள்ளன இவ்விரு எழுத்துகளும் சேர்த்து எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது 'ள்' என்ற எழுத்து 'ர்' என்று இருக்கவும் வாய்ப்புள்ளது எழுத்தமைதியைக் கொண்டு இதன் காலம் கி பி 11ஆம் நூற்றாண்டு எனக் கருதலாம்

**சு. இராஜகோபால்,**
**சென்னை**

**57:18**

## வரலாற்றுத் தொடக்கால மற்றும் இடைக்கால இடங்கள்

இராமநாதபுர வட்டாரத்தில் கள ஆய்வுகள் மேற்கொண்டதில் வரலாற்று காலத்தைச் சார்ந்த கருப்பு - சிவப்பு நிற பானை ஓடுகள் மற்றும் சிவப்பு நிறப் பானையோடுகள் சொர சொரப்புடைய பானையோடுகள் இரும்புக் கழிவுகள் ஆகியவை பெருஞ்சையூர், அனுமநேரி, தெய்வேந்திர நல்லூர் போன்ற ஊர்களில் பரவலாக காணப்படுகின்றன இவை வரலாற்று ஆரம்பகால வாழ்விடங்களாகும்

இவற்றைத் தவிர இவ்வட்டாரத்தில் இடைக்கால வாழ்விட பகுதிகள் இருந்தமைக்கான தடயங்கள் கண்டறியப்பட்டுள்ளன இவ்விடங்கள் கற்காகுடி, அம்மன் கோவில், உத்தரவை பள்ளச்சேரி, கிருஷ்ணபுரம், வண்ணாங்குண்டு, வழுதூர், பொக்கனாரேந்தல், ஆணைக்குடி, களரி, சுமைதாங்கி மேலமடை

, பழஞ்சிறை, முதுநாள், வன்னிவயல், வயலூர் , அம்மன், அம்மன் பனையூர், அரசனூர், வன்னிக்குடி, வித்தனூர், கன்ணங்குடி, மட்டியாரேந்தல், எட்டிவயல், வீரவனூர், முத்துச்செல்லாபுரம், பிரபுக்களூர், ஆகிய ஊர்களில் இடைக்கால வாழ்விடங்கள் கண்டறியப்பட்டுள்ளன இவ்விடைக்கால வாழ்விடப்பகுதிகளை பெரும்பாலும் இங்குள்ள மக்கள் “திடல்” என்று அழைக்கின்றனர் கண்டறியப்பட்டுள்ள வாழ்விடங்கள் அனைத்தும் திடல் என்று சொல்லக்கூடிய இடங்களில் கண்டறியப் பட்டவையாகும், எனினும் ஒரு சில இடங்களில் அதாவது வீரவானூர் முத்துச்செல்லாபுரம், பிரபுக்களூர் ஆகிய ஊர்களில் சீன நாட்டுப் பானையோடுகளும் கண்டறியப்பட்டுள்ளன எனவே இம்மூன்று இடைக்கால வாழ்விடப்பகுதிகளில் சீனப்பாணையோடுகள் கிடைப்பது குறிபிபிடத்தக்கதாகும்

**ஆ. ராஜா,**
**தஞ்சாவூர்**

# 58. கொடுமணலில் ஒரு தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்பு பற்றி

எ. சுப்பராயலு,
புதுச்சேரி

கொடுமணலிலும் வேறு சில பழைய தொல்லியல் நிலைகளிலும் அகழாய்வில் தமிழ்பிராமி எழுத்துகள் கொண்ட பல மட்கலங்கள் கிடைத்தன என்பது பரவலாக அறிந்த செய்தி இப்பொறிப்புகளில் பெரும்பாலும் ஒன்று அல்லது இரண்டு கூறுகளுடைய ஆட்பெயர்களே உள்ளன ஒரு சிலவற்றில் மட்டும் கூடவே அகல், பதி, தடா என்ற சொற்களும் பொறிப்புகளின் இறுதியில் வந்துள்ளன அகலும் தடாவும் மண்கலங்களைக் குறிக்கும் தமிழ்ச் சொற்களாகும் பதி [அல்லது பாத்தி] அதே பொருளில் வரும் பிராகிருத சொல்லாகும் உறையூரில் ஒரு பெரிய எழுத்துப் பொறிப்பில் கொஞ்சம் சந்தேகமாகப் படிக்கப்பட்ட உமண என்ற சொல் உமணெ என்று தானுள்ளது அதுவும் ஒரு மண்கலத்தைத் தான் குறிக்கும் [தமிழ் அகராதி உமணைச்சட்டி என்ற ஒன்றைக் குறிப்பிடுவதை இங்கு நினைவுபடுத்தலாம்] தடா என்ற பெயர் கொடுமணலில் மட்டும் ஒரு பொறிப்பில் வந்துள்ளது.

ய் தண் வெண் நிர் அழி இ ய் தடா

இப்பொறிப்பில் தொடக்கத்தில் ஒரு சொல்லின் இறுதியாக 'ய்' உள்ளதைப் பார்க்கலாம், மற்ற பொறிப்புகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த முதல் சொல் ஒரு ஆள் பெயருக்குரியது எனலாம் இப்பொறிப்பு பற்றி நான் ஏற்கெனவே செம்மொழி மையத்துக்கு தமிழ்நாட்டு மண்கல எழுத்துப் பொறிப்புகள் என்ற தலைப்பில் கொடுத்த ஆய்வேட்டில் கொடுத்துள்ள விளக்கக் குறிப்பை இங்கு மீண்டும் வற்புறுத்த விரும்புகிறேன் அது வருமாறு:

நிர் என்பதை நீர் என்று படிக்கலாம். தண் வெண் நீர் என்பதை நேரடியாகப் பொருள் கொண்டால் குளிர்ந்த வெள்ளையான நீர் என்று பொருள் தரும். இத்தொடர் அக்காலத்தில் மிக விரும்பிப் போற்றப்பட்ட கள்ளை இடக்கரடக்கல் முறையில் சுட்டுகிறது என்றால் தவறாகாது. அடுத்து வரும் அழிஇய் என்ற சொல்லை, அழிஇய அல்லது அழிய என்ற வினைச்சொல்லாகக் கொண்டு 'தடா'வைக் கொண்டு முடியும் பெயரெச்சமாகக் கொள்ளலாம். அழி என்பதற்கு தமிழ் அகராதி செலவிடல், அழித்தல் என்று பொருள்களோடு பெருகுதல், நிறைதல் என்ற பொருள்களையும் குறிப்பிட்டுள்ளது. இந்த இடத்தில் நிறைதல் என்ற பொருள் பொருத்தமாகப்படுகிறது. அதாவது, [இன்னாருடைய] குளிர்ந்த வெள்ளிய நீரால் நிரம்பிய தடா அல்லது பாத்திரம் என்று இப்பொறிப்பின் முழுப் பொருளாகும்.



திரு ஐராவதம் மகாதேவன் அவர்கள் இப்பொறிப்பைப் பற்றி வேறுவிதமாக விளக்கியுள்ளார் அவர் வெண் என்பதை வென் என்று திருத்தி தண்ணீரும் வெந்நீரும் புகும் தாழி என்று பொருள் கொண்டு இது சாயப்பட்டறை தொடர்பான ஒரு பாத்திரம் என்று கொண்டுள்ளார் வெண் என்பதை வென் என்று திருத்தியது சரியாகப்படவில்லை இங்கு தடாவைத் தாழி என்று கொள்வதும் தவறு இது ஒரு வாயகன்ற மண்டை [bowl] என்பதைப் படத்திலிருந்து ஊகிக்கலாம் இறுதியாக, கள் இதுபோன்ற வாயகன்ற மண்கலங்களிலும் நிரப்பப்பட்டு வழங்கப்பட்டன என்பதற்கு பகுவாய் நிறைய நுங்கின் கள் என்ற அகநானூறு 256 பாட்டின் அடியைக் குறிப்பிடலாம்

## ஆனைக்கோட்டை முத்திரை எழுத்துப் பொறிப்பு – ஒரு மீள்பார்வை

இலங்கையில் யாழ்ப்பாணத்தில் ஆனைக்கோட்டை என்ற இடத்தில் செய்த அகழாய்வில் ஒரு பெருங்கற்படைக் கல்லறையில் ஒரு சிறிய சதுர வடிவ முத்திரை கிடைத்தது அதில் ஒரு பக்கத்தில் படத்தில் உள்ளவாறு மேல் வரியில் குறியீடுகளும் கீழ் வரியில் பிராமி எழுத்துகளும் இருந்தன இந்த முத்திரைப் பொறிப்பைப் பற்றி பேராசிரியர் இந்திரபாலா இந்து நாளிதழில் [26 4 1981] ஒரு கட்டுரை வெளியிட்டார் கீழ் வரியில் உள்ளதை [முத்திரை யாதலால் இடமிருந்து வலமாக --2ல் உள்ளபடி] கோவேம்த அல்லது கோவேதன் என்று படித்து அச்சொல்லுக்கும் மேல்வரியில் உள்ள சிந்துவெளி எழுத்துகள் போன்ற குறியீடுகளுக்கும் ஏதோ தொடர்பு இருக்க வேண்டும் என்று கருத்து வெளியிட்டார் இக்கருத்து அதற்குப் பின்னால் தொடர்ந்து மீண்டும் மீண்டும் பலரால் சுட்டப்பட்டு வருகிறது ஐராவதம் மகாதேவன் மட்டும் இந்த வாசிப்பும் கருத்தும் சரியாகப்படவில்லை என்று கருதினார் ஆனால் மாற்று வாசிப்பு தரவில்லை[5] அண்மையில் வெளியான தம் நூலில் இந்திரபாலா இரு திருத்தங்கள் கொடுத்துள்ளார். ஒன்று இந்த முத்திரை முதலில் உலோகத்தில் ஆனது என்று அறிவித்தது தவறு அது உண்மையில் மாவுக்கல்லால் [steatite] செய்யப்பட்டது இரண்டு, கோவேத என்பதே சரியான பாடம். வேத என்ற சொல்லை வேது அ என்று பிரித்து அ-வை ஆறாம் வேற்றுமை உருபாகக் கொள்ளலாம்

1] முத்திரையில் உள்ளபடி





படம் 2-க் கூர்ந்து பார்த்தால் முதல் எழுத்து கோ என்று கொள்ளுவது பொருத்தமாக இல்லை. கோ-வின் உருவம் [படம் 3ல் உள்ளபடி] சிலுவை போன்று எழுதப்பட்டு மேல் பகுதியில் இடம் ஒன்றும் வலம் ஒன்றுமாக இரு கோடுகள் இழுக்கப்பட்டிருக்கும். இந்த முத்திரை எழுத்தில் அப்படியில்லை. இது ஒரு நெளியுள்ள நிற்கும் கோடும் தலையில் இடப்பக்கம் சிறிது நீட்டிய படுக்கைக் கோடும் கொண்டுள்ளது. நெளியுள்ள



கேசாடு ர-வுக்குத் தான் உண்டு தமிழ் பிராமியிலும் இலங்கை பிராமியிலும் வரும் ர-வில் இரண்டு அல்லது மூன்று நெளிகள் காணப்படுவது இயல்பு ஆகவே இதை ரே எனப் படிப்பதே சரி அதாவது இது ரேவேத என்ற ஒரு பிராகிருதச்சார்புடைய ஆள் பெயராகும். [தமிழ்ப் பெயர்கள் 'த' என்று உயிர்மெய்யெழுத்தில் முடியாது] இதை யொத்த ரேவத என்ற பெயர் இலங்கை பிராமிக் கல்வெட்டுகளில் உண்டு தமிழ் பிராமியில் எழுதிய பாறைக் கல்வெட்டுகளிலும் மண்கலப் பொறிப்புகளிலும் பல பிராகிருதப் பெயர்கள் வந்துள்ளன என்பது தெரிந்தே.

# 59. புதிய வெளியீடுகள்

**59:1**

**செ. திவான், இந்திய சுதந்திரப் பெரும்போரில் இஸ்லாமியர் [முதல் கட்டம் 1859 வரை] சுகைனா பதிப்பகம், 2010, திருநெல்வேலி.**

*இந்நூல் 1857, 1858, 1859 இவ்வாண்டுகளில் இந்தியா முழுவதும் நடைபெற்ற சிப்பாய்களின் எழுச்சி, புரட்சி குறித்தும் இந்திய சுதந்திரப் பெரும்போர் குறித்தும் அதில் பங்கேற்ற முஸ்லீம் மௌலிகள், மன்னர்கள், அரசிகள், இளவரசர்கள் படைத்தளபதிகள், சிப்பாய்கள், பொதுமக்கள் இன்னபிறர் ஆகியோரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளை முழுவதுமாகவும் முறையாகவும் தொகுக்கும் முயற்சியை மேற்கொண்டுள்ளது*

*இந்திய திருநாட்டின் முதல் சுதந்திரப்போரான 1857 புரட்சியில் இந்தியா, தமிழகம் ஆற்றிய பங்கினையும், அதில் இஸ்லாமிய தீரர்களின் முக்கியப் பங்களிப்பும் பற்றியும் அழகுற விளக்குகிறது*

*ஆங்கிலேயர்கள் 1857 புரட்சி சென்னை, பம்பாய் பகுதிகளில் சிறிது கூட நடைபெறவில்லை எனக் கூறியுள்ளதையும் சுதந்திரம் பெற்றப் பிறகு இந்திய ஆசிரியர்களால் எழுதப்பெற்ற பல நூல்களிலும் கூட தென்னகத்தின் புரட்சி பற்றிய செய்திகள் மறைக்கப்பட்டுள்ளதை கட்டிக்காட்டியதுடன் தென்னகத்தில் குறிப்பாகத் தமிழகத்தில் புரட்சி வெடித்திருப்பதை தக்கச் சான்றுகளுடன் விவரிக்கும் பங்குச் சிறப்பானது சுதந்திர போராட்டத்தில் தமிழரின் பங்கு குறிப்பாக இஸ்லாமியரின் பங்கு புறக்கணிக்கப்பெற்றுள்ளது என்ற கருத்தை ஆசிரியர் ஆணித்தரமாக முன்நிறுத்தியுள்ளார் இக்கருத்தை வலியுறுத்தும் முயற்சியில் ஆசிரியர் வெற்றிப்பெற்றுள்ளார்*

*1072 பக்கங்களில் 1026 புரட்சி வரலாற்றை காலவாரியாகக் செய்திகளைக்கூறும் இந்நூலில் 40 பக்கங்களுக்கு மேல் பின்னிணைப்புகளில் விக்டோரியா, பிரோஸ்ஸா போன்ற ஆட்சியாளர்களின் பிரகடனம் இணைக்கபெற்றுள்ளது*

சுட்டத்தக்கது 681 - 700 பக்கங்கள் வரை போராட்ட நிகழ்வுகளையும் போராளிகளையும் விளக்கும் தெளிவான ஒளிப்படங்கள் என்ற தலைப்பில் இந்திய நாட்டிற்காக உயிர் தியாகம் செய்த 500க்கும் மேற்பட்ட இஸ்லாமிய உத்தமர்களின் பட்டியலைத் தொகுத்தளித்திருப்பது பாரட்டத்தக்கது செம்மையான தமிழ் நடையில் நூல் எழுதப்பெற்றுள்ளது உண்மை வரலாறானது எவ்விதம் மறுக்கப்படுகிறது வரலாறானது ஒரு சார்பில்லாமல் எழுதப்பெறவேண்டிய முறையையும் மாணவர்களும் வரலாற்றறிஞர்களும் அறியும் வண்ணம் நூல் உள்ளது நூலின் அட்டைப் படம் உள்பட நூல் வடிவமைப்பு சிறப்பாக உள்ளது

தரவுகள் ஓரளவு முழுவதுமாக சேகரிக்கபெற்றுள்ள போதிலும் செய்திகளை முடிந்த முடிவாகக் கூறாமல் "நூலில் இன்னம் இடம்பெறவேண்டிய பெருமக்களைப் பற்றிய விவரங்களை யாராவது அளித்தால் அடுத்துவரும் பதிப்புகளில் அவற்றை நன்றியுடன் பயன்படுத்திக்கொள்வேன்" என ஆசிரியர் கூறுவது ஆசிரியரின் சிறந்த ஆய்வு நோக்கினை வெளிப்படுத்து வதாகவுள்ளது.

பக்கம் 11 இல் 1857 என்பதற்கு பதிலாக 1957 புரட்சியையே குடியரசுத் தலைவர் முதல் விடுதலைப்போர் என்று போற்றினார் எனப் பிழையாக அச்சிடப்பெற்றுள்ளது பெரும்பாலும் அச்சுப் பிழைகள் இல்லை பெரும்பாலான அடிக்குறிப்புகளில் நூற் சான்றுகளே வழங்கப்பெற்றுள்ளன முதன்மைச்சான்றுகள் வழங்கபெறவில்லை நூலில் நூற்பட்டியலும் முதன்மைச் சான்றுகளும் இடம்பெற்றிருப்பின் அது ஆய்வாளர்களும் மாணவர்களும் கருத்துச் செறிவு பெறவும், ஏதேனும் விடுபட்டிருப்பின் அவற்றை வெளிக்கொணரவும் வழிவகுக்கும்

**மா. பவானி,**

**தஞ்சாவூர்**

## த. பார்த்திபன், சங்ககாலத் தமிழகமும் அதியர் மரபினரும், ஸ்ரீ விவேகானந்தர் கொடை மற்றும் அறக்கட்டளை, தருமபுரி

தமிழர் இனக்கோட்பாட்டாய்வும் நிலவரலாற்றுச் சார்புடைய பண்பாட்டுத் தேடல்களும் மானிடவியல், இனவரைவியல் துறைசார்ந்த ஆய்வுகளுக்குத் துணைநிற்கும் என்ற எண்ணத்தில் தகடூர் அதியன் மரபு பற்றிய வரலாற்றுச் சான்றுகளைத் தொகுத்து அணுகும் ஒரு ஆய்வு நூலை த பார்த்திபன் அவர்கள் படைத்துள்ளார்

தமிழகத்தில் தகடூர் அதியர் மரபினரின் முழு வரலாற்றைத் தேடும் ஆய்வுக் களமாக இந் நூலின் போக்கு மிகவும் ஆழ்ந்த வரலாற்றுப் பார்வையுடன் கருத்தாய்வுகள் விவாதிக்கப்பட்டுள்ள இறை பாராட்டதலுக்குரியது அதியர் மரபினரை மையப்படுத்தி தமிழக எல்லை குறித்த விவாதம் ஆர்வத்தைத் தூண்டும் தேடல் ஒன்பது ஆய்வாளர்களால் இதுவரை அளித்துள்ள அதியமான் பெயர் குறித்த தொகுப்பும், கங்க இலக்கியத்தில் சொல்லப்பட்ட பதினேழு அதியர்களின் பெயர்களைத் தொகுத்துச் செய்துள்ள ஒப்பீட்டாய்வு ஆசிரியரின் துறைசார்ந்த ஆய்வுத் திறனைக் காட்டுகின்றது தொண்டைமான்களின் வரலாறு காஞ்சித் தொடர்புடன் இணைத்துப் பார்த்த ஆசிரியர், தொண்டைமான்கள் அதியருக்குப் பின் வந்தவர்கள் என்னும் கருத்தினை முன் வைக்கின்றார் இவரது பார்வையில் சங்க காலத்துக்கு முன்னரே அதியர்கள் "பெரும்வேந்தர் மரபு" சார்ந்தவர்கள் என்றும் சங்க கால அதியர்கள் பேரரசு நிலையிலிருந்து வீழ்ந்து பட்ட மரபினர் என்ற கருத்தையும் முன்னிலைப்படுத்துகின்றார் மலையக அதியர்களை மாறுபட்டக் குழுவினராகக் கருதவும் இவரால் முடிகின்றது கிழக்கிந்தியத் தீவிலிருந்து கரும்பை தமிழகத்திற்கு கொண்டு வந்தவர்கள் இந்த அதியர்கள் என்றுரைக்கின்றார் அதியன் பெயராய்வு வாயிலாக திருவள்ளுவரையும் அதன் கோட்டினையும், வஞ்சியையும் இணைத்து ஒட்டுமொத்த பண்டைத் தமிழகம் முழுவதும் அதியர் மரபினர் வாழ்ந்தும் ஆட்சிசெய்தும் வந்துள்ளனர் என்னும் விவாதத்தை வைத்துள்ளார் தகடூரின் ஒரு பகுதியாகக் கொங்கு நாடு இருந்தது

*என்பது ஆசிரியரின் பார்வை குதிரைமலை, பொதிகைமலை விவாதத்தின் வாயிலாக மலையும் மலை சார்ந்த குறுஞ்சி நிலப் பகுதிக்கு அதியனையும், முல்லையை ஆயர் இனக்குழுவிற்கும், மருதத்தினை திதியன் ஆளுமையிலும் இருந்ததாகப் புதிய பார்வையில் இவரது அனுகுமுறையுள்ளது இந்நூலாசிரியரின் ஆய்வுப் போக்கு அதியர்கள் பேரரசுக்குரியவர்களாகக் கண்டறிதல் என்னும் அணுகுமுறையில் அமைந்துள்ளது. "புனவை புனைவு என்று அடையாளம் காண்பதும் தரவுகளை மறுபரிசீலனை செய்யும் ஆய்வு மனமும்தான் இப்போது வேண்டியவை" [பக் 26] என்று தன்னை அறிமுகப்படுத்தும் ஆசிரியர், "தமிழக வரலாற்றை தமிழ் நிலத்திலிருந்தே முழுமையாகவும் சரியாகவும் வெளிக் கொண்டுவர முடியாதிருக்கிறது. [பக் 27] என்று கவலைப்படும் ஆசிரியர் என்னும் நிலையிலும் தனது இயல்பான எண்ணங்களை வெளிப்படுத்தியுள்ளார் அதியர் பற்றிய ஒரு முழுமையாக நூலாக்கமாகவும் ஆழமான ஆய்வு அணுகுமுறையில் பல விவாதங்களை முன்வைத்து ஆராய்ந்திருக்கும் ஆசிரியன் முயற்சி பாராட்டத்தக்கவண்ணம் ஒவ்வொரு பக்கங்களிலும் காணப்படுகின்றன தமிழர் இனக் குழு ஆய்வு குறித்த அரிய நூலாக வெளிவந்துள்ளது என்பதால் ஆசிரியரின் ஆய்வு முயற்சிக்கு பாராட்டுகள்!*

**இரா. பவுன்துரை,**
**தஞ்சாவூர்**



**ஆவணம் 21, 2010**

# தமிழகத் தொல்லியல் கழக 19ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் - செயலர் அறிக்கை

*தமிழகத் தொல்லியல் கழகத்தின் 19ஆவது மாநாட்டுக் கருத்தரங்கம் மற்றும் ஆவணம் 20ஆவது இதழ் வெளியீட்டு விழாவினைத் தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கல்வெட்டில் மற்றும் தொல்லியல் துறை சூலை 18, 19 [சனி, ஞாயிறு] ஆகிய இரு நாட்கள் பல்கலைக் கழகப் பேரவைக் கூட்டத்தில் நடத்தியது இதன் தொடக்க விழா 18.7.2009 அன்று காலை நடைபெற்றது தமிழகத் தொல்லியல் கழகச் செயலரும் கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறையின் தலைவருமான முனைவர் பா ஜெயக்குமார் வரவேற்புரை நல்கினார் வரவேற்புரையில் 1991ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட தொல்லியல் கழகம் 20ஆவது ஆண்டில் அடியெடுத்து வைப்பதோடு ஆவணம் ஆய்விதழைத் தொய்வின்றி வெளியிட்டு வருவதையும் நினைவுகூர்ந்தார். முன்னிலை வகித்த தமிழகசத் தொல்லியில் கழகத்தின் தலைவர் பேரா. ப. சண்முகம் அவர்கள் தமது உரையில் இக்கழகத்தின் சிறப்பான செயல்பாடுகளை எடுத்துரைத்தார்*

*தலைமை வகித்த தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் ம இராசேந்திரன் அவர்களின் உரையில் தொல்லியல் வரலாற்றில் முன்னோடி அறிஞர்களின் சிறப்பை நினைவு கூர்ந்ததோடு குறிப்பாக மெக்கன்சி அவர்கள் நமக்குத் திரட்டித் தந்த வரலாற்றுத் தரவுகளையும் அவற்றின் முக்கியத்துவத்தையும் எடுத்துரைத்தார் அப்பெருமக்களை இக்காலத் தொல்லியல் ஆய்வாளர்கள் மனதில் நிறுத்தி ஆய்வுகளை எடுத்துச் செல்ல வேண்டும் எனக் குறிப்பிட்டார்*

*ஆவணம் 20ஆவது இதழை தமிழக அரசின் மாண்புமிகு பள்ளிக் கல்வித்துறை [ம] தொல்லியல் துறை அமைச்சர் திரு. தங்கம் தென்னரசு அவர்கள் வெளியிட்டுச் சிறப்புரை ஆற்றினார். சிறப்புரையில் தமிழகத் தொல்லியல் கழகத்தின் சீரியப் பணிகளை பெருமிதத்துடன் குறிப்பிட்டதோடு தொல்லியல் சின்னங்களை அழிவிலிருந்து காப்பதற்கு அரசு சார்ந்த தொல்லியல் நிறுவனங்கள், பல்கலைக் கழகங்களின் தொல்லியல் துறைகள்,*

ஆர்வாலர்கள், மாணவர்கள், பொதுமக்கள் என யாவரும் இணைந்து இயக்கமாகச் செயல்பட்டால் வருங்காலங்களில் தொல்லியல் சின்னங்களை அழிவிலிருந்து காக்கலாம் எனக் குறிப்பிட்டார்.

திரு ஐராவதம் மகாதேவன் அவர்கள் ஆவணம் இதழின் முதல் படியினைப் பெற்றுக் கொண்டு உரை நிகழ்த்தினார். மேலும், நடுவண் அரசின் 2009ஆம் ஆண்டிற்கான பத்மஸ்ரீ விருது பெற்றமைக்காக திரு ஐராவதம் மகாதேவன் அவர்களைத் தமிழகத் தொல்லியல் கழகம் பாராட்டிச் சிறப்புச் செய்தது மாண்புமிகு அமைச்சர் அவர்கள் பொன்னாடை அணிவித்தார் பேரா செ இராசு அவர்கள் நினைவுப் பரிசினை வழங்கி வாழ்த்துரை நல்கினார்

'தமிழக மண் உருவங்கள்' [ஆசிரியர் : ப சண்முகம், வெளியீடு : சேகர் பதிப்பகம், சென்னை] என்ற நூலை மாண்பமை துணைவேந்தர் அவர்கள் வெளியிட்ட புதுச்சேரி பிரெஞ்ச ஆய்வு நிறுவனத்தின் இந்தியவியல் ஆய்வுத் துறையின் தலைவர் பேரா எ சுப்பராயலு அவர்கள் பெற்றுக் கொண்டு வாழ்த்துரை வழங்கினார் சேகர் பதிப்பக உரிமையாளர் திரு. வெள்ளையாம் பட்டு சுந்தரம் அவர்கள் சிறப்பிக்கப்பட்டார்கள்

விழாவில் அண்மைக்காலத் தொல்லியல் அகழாய்வுகளை மேற்கொண்ட தொல்லியல் அறிஞர்களுக்குத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் சார்பாக மாண்பமை துணைவேந்தர் அவர்கள் பொன்னாடை அணிவித்துச் சிறப்புச் செய்தார்கள் அகழாய்வு மேற்கொள்ளப்பட்ட இடங்களும், அகழாய்வு மேற் கொண்டவர்களின் பெயர்களும் வருமாறு:

பேரா.கா ராஜன் - பொருந்தல், முனைவர் பதெ பாலாஜி - மேல்சித்தாமூர், திரு- சி. செல்வராஜ் - கங்கை கொண்ட சோழபுரம், முனைவர் வீ செல்வகுமார் - பிள்ளையார்பட்டி, முனைவர் பா ஜெயக்குமார் - நாகப்பட்டினம். கழக இணைச் செயலளர் பேரா இல தியாகராஜன் அவர்கள் நன்றியுரை நல்கினார்.

தொடர்ந்து திரு. கரு இராசேந்திரன் அவர்கள், தி.நா

சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவினையும், பேரா ஏ ஏகாம்பரநாதன் அவர்கள் கோவிலூர் ஆதீன அறக்கட்டளைச் சொற்பொழிவினையும் நிகழ்த்தினர்

மாணவர்களுக்கான கட்டுரைப் போட்டி அமர்விற்கு முனைவர் வெ வேதாசலம் அவர்கள் தலைமை வகித்தார் இப்போட்டி அமர்வில் பங்கேற்றோர் விவரம் பின்வருமாறு:-

| வ.எண் | பெயர் | கட்டுரைத் தலைப்பு |
|---|---|---|
| 1. | இரா. ரமேஷ் | பெண்ணையாற்றங்கரையில் இரும்புகாலப் பண்பாட்டின் வளர்ச்சி நிலை |
| 2. | ஆ. ராஜா | திருமயம் வட்டாரத்தில் புதிய தொல்லியல் ஆய்வுகள் |
| 3. | பெ. சுதாகர் | கல்வராயன் மலையின் புதிய கற்காலப் பண்பாட்டுக் கூறுகள் |
| 4. | எம்.எஸ். இராம்ஜி | வெள்ளாறு – கொள்ளிடம் ஆற்றுப் பள்ளத்தாக்குப் பகுதி கல்வெட்டுகள் காட்டும் நீர்ஆதாரங்களும், நிர்வகிப்புகளும் |
| 5. | க. வெங்கடேசன் | கிள்ளியூர் மலையமான் கல்வெட்டு காட்டும் இராணுவ ஒப்பந்தம் |
| 6. | ஜெ. ரஞ்சித் | கோயில் விமானங்களின் உயரளவு முறைகள் |
| 7. | அரங்க. மாயகிருஷ்ணன் | ஒல்லியம்பாளையம் தொல்லியல் சின்னங்கள் |

இப்போட்டி அமர்வில் தமிழகத் தொல்லியல் கழகப் பரிசினை இரா ரமேஷ் அவர்களும், சி வீரராகவன் அவர்களின் ப சின்னக்கண்ணு நினைவுப் பரிசினை பெ சுதாகர் அவர்களும் பெற்றார்கள்

பொது அமர்வுகளில் அளிக்கப் பெற்ற கட்டுரைகள் மற்றும் கட்டுரையாளர்களின் விவரம் பின்வருமாறு:

## அமர்வு I நாள் : 18.7.2009

**தலைமை : முனைவர் சு. இராசவேலு**

- ★ செ. கோவிந்தராஜ் - சிந்துவெளி எழுத்துகள் இரண்டின் ஒலிகள்
- ★ கா ராஜன் - பொருந்தல் அகழாய்வு
- ★ அய்யம்பேட்டை செல்வராஜ் - மாமன்னர் இராஜராஜன் பள்ளிப் படை
- ★ மணி - செஞ்சிப் பகுதியில் சமணப் படுக்கை
- ★ காயத்ரி - புதுக்கோட்டை சமஸ்தான சத்திரங்கள்
- ★ அருள்மொழி - அருவிமலை கல்வெட்டுகளில் மக்கட்பெயர்கள்
- ★ ஸ்ரீதர் - விடேல்விடுகு எடைக்கல்
- ★ பா சுப்பிரமணியன் - திருத்தங்கல் நின்ற நாராயணப் பெருமாள் கோயில் கல்வெட்டுகள்
- ★ த. கண்ணன் - வடரெங்கத்தில் இடைக்காலத் தொல்லியல் தடயங்கள்

## அமர்வு II நாள் : 19.7.2009

ச. கிருஷ்ணமூர்த்தி - சிதம்பரம் வண்ணார் செப்பேடுகள்

செ. இராசு - சித்திரைச் சதயமும் ஐப்பசிச் சதயமும்

| | | |
|---|---|---|
| செந்தீ நடராஜன் | - | வடசேரிக் கல்வெட்டுகள் |
| செ சௌந்திரராஜன் | - | சிறுகுன்றம் கல்வெட்டு |
| உ. தனலெட்சுமி | - | குளத்தூர் வட்டத்தில் சமணச் சான்றுகள் |
| P. Ramanathan | - | Importance of Present and Futrue works on Prehistoric Archaeology of Tamil Nadu |
| எ சுப்பராயலு | - | மலம்பட்டி வணிகக் குழு கல்வெட்டு - ஓர் பார்வை |
| மு. பிரபாகரன் | - | பாளையம் செக்குக் கல்வெட்டு |
| எஸ்.எம். ரெத்தினவேலு | - | பண்டைய பாசனத்தொழில் நுட்பம் |
| எஸ்.பி சரவணன் | - | திருவேள்விக்குடி கல்வெட்டில் வணிகச் செய்திகள் |
| கா. பன்னீர்செல்வம் | - | சோழர்காலக் கல்வெட்டுகளில் அடிமை முறை |
| கே. ராஜேந்திரன் | - | கல்வெட்டில் ஆசாரிகள் [நகர்க் கல்வெட்டு] |
| S. Saroja | - | Arthiviraraman and his contribution to Tamil Nadu |
| T. santhi | - | A comparative study of Ancient weights and Measures from Tamil Epigraphy |
| S. Kayarkanni | - | Revenue Technical phrases in inscriptions |

| | | |
|---|---|---|
| வி. ரமாமணி | - | மானியங்களை ஏற்படுத்துகையில் அமைக்கப்பட்ட கல்வெட்டுகளில் வானவியல் முக்கியத்துவம் |
| N. Pankaja | - | Kovilur · An Epigraphical Study |
| ச. இரவி | - | சங்கமேசுவரர் கோயில் கல்வெட்டுகள் |
| சி. வீரராகவன் | - | கோப்பெருஞ்சிங்கன் காலத்தில் இரும்பு தொழில்பேட்டைக் கண்டுபிடிப்பு |
| எஸ் புவனேஸ்வரி | - | புதுக்கோட்டை தொண்டைமான் மன்னர்களின் நீதிமன்றம் |

18.7.2009 அன்று இரவு 7.30 மணிக்கு செயற்குழு நடைபெற்றது இதில் புதிய நிர்வாகிகள் தேர்வு செய்யப்பட்டனர்

19.7.2009 அன்று இரவு 7 மணிக்கு பொதுக்குழு நடைபெற்றது. செயற்குழுவின் தீர்மானங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டதுடன் குறிப்பாக புதிய நிர்வாகிகள் பொறுப்பேற்றுக் கொண்ட பின்பு கழகத்தின் புதிய செயலர் முனைவர் இல. தியாகராசன் நன்றி நவில மாநாடு இனிதே நிறைவடைந்தது.

அன்புடன்,

**பா. ஜெயக்குமார்**

செயலர்

# கட்டுரையாளர்கள் முகவரி

திரு ஆறுமுக சீதாராமன்
12, ராஜராஜன் நகர்
மனோஜிப்பட்டி (தெற்கு)
மருத்துவக்கல்லூரி (அஞ்சல்)
தஞ்சாவூர் 613 004

திரு எம்.இம்மானுவேல்
வரலாற்றாய்வு மற்றும் வெளியீடு
137, எச்.4, பெத்தேல் நகர்
நாகர்கோயில் –629 004

முனைவர் சு.இராசகோபால்
''இராஜாஜி இல்லம்''
7, முதல் தெரு
வெங்கடேஸ்வரா நகர், அடையாறு
சென்னை 600 020

முனைவர் சு.இராசவேலு
42, நாலடியார் தெரு
ஸ்ரீசக்தி நகர்
ஆவடி கார்ஷெட் காம்ளக்ஸ்
சென்னை – 600 109.

முனைவர் செ.இராசு
''புலவர் பூங்குடில்''
58/2,திரு.வீ.கா. நகர் சாலை
பாலக்காட்டுத் தோட்டம்
ஈரோடு– 638 011.

திரு கரு.இராசேந்திரன்
மேலப்பனையூர் (அஞ்சல்)
விராச்சிலை (வழி)
புதுக்கோட்டை 622 420

திரு எம்.எஸ்.இராம்ஜி
கீழக்கொளத்தூர்
அரியலூர் வட்டம்
பெரம்பலூர் மாவட்டம் –621 715

முனைவர் சி. இளங்கோ
அலைகள் வெளியீட்டகம்
4/9, 4வது முதன்மைச் சாலை
யூ.டி.ஐ. காலனி, கோடம்பாக்கம்
சென்னை – 600 024

திரு கோ.உத்திராடம்
நடுத்தெரு, பாங்குளத்தூர்(அஞ்சல்)
அன்னம்பாக்கம்,
திண்டிவனம் வட்டம் 604 101

முனைவர் ஏ.ஏகாம்பரநாதன்
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

முனைவர். எஸ்.கண்ணன்
பிளாட் எண்.172, கற்பகம் நகர்
கே.புதூர்,
மதுரை 625 007

இல. கணபதி முருகன்
92, திருவேங்கடம் சாலை
சங்கரன் கோவில் – 627 756
செல்: 9626035745

திரு. ப. கலைச்செல்வன்
விரிவுரையாளர்,
வரலாற்றுத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர் – 608 002.

திரு மா.கலைவாணன்
ஆ,285, தமிழ்நாடு வீட்டுவசதி
வாரியம் –பிரிவு
ஆற்காடு (அஞ்சல்)
வேலூர் மாவட்டம் 632 503.

திரு ம.காந்தி
875, பேஸ் 2,
7வது குறுக்குத்தெரு,
சத்துவாச்சாரி
வேலூர் 632 009

செல்வி.எம். காயத்திரி தேவி
39, பெரிய தெரு
திருக்கோகர்ணம் (அஞ்சல்)
புதுக்கோட்டை – 622 002.

திரு.ரா. கார்த்திக்ராஜ்
த/பெ. எ. ராமசாமி
9எ, நத்தமேடு தெரு
மாவு ரெட்டி ,
பரமத்தி (அஞ்சல்)
பரமத்தி வேலூர் (தாலுக்கா)
நாமக்கல் மாவட்டம் – 637 207.

திரு கி.குமார்
இ.103,பொதுப்பணித்துறை
குடியிருப்பு,
தாடண்டர் நகர்,
சைதாப்பேட்டை,
சென்னை 600 015

திரு செ.கோவிந்தராஜ்
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
திருக்கோகர்ணம்
புதுக்கோட்டை 2

திரு.செ. கௌரிசங்கர்
முனைவர் பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை,
மிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 010

செல்வி.கோ. சசிகலா
த/பெ. எம். கோபாலகிருஷ்ணன்
258, பாரதியார் மெயின்
ரோடு கடைசி
ஐயப்பன் கோவில் அருகில்
ஜெய்ஹிந்புரம்,
மதுரை – 625 011

முனைவர் சொ.சாந்தலிங்கம்
மாவட்ட தொல்பொருள்
அலுவலர் (ஓய்வு)
32, பிரீதம் தெரு
துரைசாமி நகர்
மதுரை 625 010.

திரு.ஜெ.ஆர். சிவராமகிருஷ்ணன்
விரிவுரையாளர்,
வரலாற்றுத்துறை
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
சிதம்பரம் – 608 002.

திரு. பெ. சுதாகர்
த\பெ. பெருமாள்
பொய்யூர், மேலக்கருப்பூர் (அ)
அரியலூர் 621 707.

முனைவர் எ.சுப்பராயலு
புதிய எண் – 7
இராமலிங்கம் நகர்
முதல் குறுக்குத்தெரு
கே.கே.புதூர், கோவை – 38.

திரு இரா. செந்தில்
த/பெ. ராமதாஸ்
வடக்குத் தெரு,
கன்னியாக்குடி
திருப்பன்கூர் (அஞ்சல்)
சீர்காழி (தாலுக்கா), 609 112.

திரு ஜி. செந்தில்குமார்
தமிழ் விரிவுரையாளர்
230/4, அம்பேத்கர் தெரு
பசுமாத்தூர் கிராமம் (அஞ்சல்)
காட்பாடி தாலுக்கா,
வேலூர் மாவட்டம் – 635 803

திரு செந்தீ நடராஜன்
36/122, கல்படித்தெரு
நாகராஜகோவில் அருகில்
நாகர்கோயில் –629 001

திரு சி.செல்வகுமார்
முனைவர் பட்ட ஆய்வாளர்
வரலாற்றுத்துறை
பாண்டிச்சேரி பல்கலைக்கழகம்
பாண்டிச்சேரி – 605 014.

முனைவர் வீ. செல்வகுமார்
விரிவுரையாளர்
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613 010.

திரு.த. தங்கதுரை
த/பெ. ப. தங்கையா
பாத்தம்பட்டி (தெற்கு) (அஞ்சல்)
ஆலங்குடி (தாலுக்கா),
புதுக்கோட்டை மாவட்டம்.

Dr.D Dayalan
Superintending Archaeologist
Archaeological Survey of India
Temple Survey Chennai Circle
Fort St George, Chennai - 600 009.

திரு த.த.தவசிமுத்து
36, பூவரசுர் மெயின் ரோடு
ஆறுமுகனேரி 628 202
தூத்துக்குடி மாவட்டம்

முனைவர் இல.தியாகராசன்
தலைவர், வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி
அரியலூர் 621 713.

செல்வி வே.திருநங்கை
த/பெ. வே.வேதாசலம்
51/12, இ.ரத்தினசாமி நாடார் ரோடு
பி.பி.குளம்
மதுரை – 625 002.

திரு கோ.திருமூர்த்தி
25, ரேகா நகர்
மாதவரம், எம்.எம்.சி (அஞ்சல்)
சென்னை 600 051

திரு கோ.தில்லைகோவிந்தராஜன்
70/115, சக்தி இல்லம்
பழைய அல்லா கோயில் சந்து
வடக்கு வீதி, தஞ்சாவூர் –613 009

முனைவர் மா. பவானி
விரிவுரையாளர்
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை,
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 010

முனைவர் இராசு.பவுன்துரை
பேராசிரியர் மற்றும் தலைவர்
கட்டடக்கலைத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் 613 010

Dr.K Panneerselvam
O/o, Director of Epigraphy
Archaeological Survey of India
Old University Office Building
Mysore-570 005

திருமதி எஸ். பார்வதி
உதவிப் பேராசிரியர்
தமிழ்த் துறை
ஸ்ரீ பராசக்தி பெண்கள் கல்லூரி
குற்றாலம்

முனைவர் ப.தெ.பாலாஜி
விரிவுரையாளர் மற்றும் தலைவர்
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

திரு ப.பூபாலன்
9, பாட்டை தெரு
நவல்பூர் (அஞ்சல்),
இராணிப்பேட்டை 632 402

முனைவர் ப.பெருமாள்
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர் 600 009.

திருமதி ஸமங்கையர்க்கரசி ராகவன்
கே.ஜி.எம்.பள்ளி
66, முத்துவேல் லே—அவுட்
கே.கே.சாலை, விழுப்புரம் 605 602

திரு முத்து எத்திராசன்
128, காமராசர் குடியிருப்பு
தெற்கு உசுமான் சாலை
தியாகராய நகர்,
சென்னை 600 017.

திரு வீ. முத்துகுமார்
117, மாயாண்டி சாமி நகர்
திருவப்பூர்,
புதுக்கோட்டை – 3.

திரு வெ.யோகேஸ்வரன்
சரளைப்பள்ளம்
குப்பக்குடி (அஞ்சல்)
ஆலங்குடி (தாலுக்கா)
புதுக்கோட்டை மாவட்டம்

திரு. இரா. ரமேஷ்
த\பெ. கே. இராமசாமி
காளயனூர், கருங்கல்லூர் (அஞ்சல்)
மேட்டூர் (வட்டம்),
சேலம் (மாவட்டம்)

திரு ஆ. ராஜா
த/பெ. சி.ஆரோக்கியசாமி
நெப்பியப்பட்டி
வடவாளம் (அஞ்சல்)
புதுக்கோட்டை தாலுக்கா
& மாவட்டம் – 622 004.

முனைவர் ஜெ.ராஜா முகமது
1/107 டி. ஜீவா நகர்
1ஆம் வீதி, புதுக்கோட்டை 622 001

முனைவர் கோ.விஜயவேணுகோபால்
15, 4வது குறுக்குத் தெரு
ஜெயா நகர்,
ரெட்டியார் பாளையம்
பாண்டிச்சேரி 605 010

திரு.வீரராகவன்
கே.ஜி.எம்.பள்ளி
66, முத்துவேல் லே—அவுட்
கே.கே.சாலை,
விழுப்புரம் 605 602

திரு ப.வெங்கடேசன்
3/178, கம்பன் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜாப் பேட்டை 632 513

திரு ந.வேங்கடேசன்
40, கிழக்கு சந்நிதி வீதி
வில்லியனூர்
புதுச்சேரி 605 110

# அஞ்சலி

## கரூர் பி.ஆர். குப்புசாமி

### தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர்

*கரூர் 15: காவிரி நதிநீர் பிரச்னையில் தொடர்ச்சியாகக் குரல் கொடுத்து வந்த 'காவிரி காப்புக் குழுவின் அமைப்பாளர் வழக்குரைஞர் பி ஆர் குப்புசாமி [77] கரூரிலுள்ள அவரது இல்லத்தில் திங்கள் கிழமை அதிகாலை காலமானார் இவருக்கு ஒரு மகன், இரு மகள்கள் உள்ளனர்*

*கரூர் வழக்குரைஞர் சங்கச் செயலர், சமூக வரலாற்றுச் சங்கத் தலைவர் , நொய்யல் கால்வாய் விவசாயிகள் சங்க அமைப்பாளர் போன்ற பல்வேறு பொறுப்புகளை வகித்தவர்*

*கல் குவாரிகளில் இருந்து சித்தன்னவாசல் குகைக்கோயில் சிற்பங்களைப் பாதுகாத்தவர் ஒரத்துப்பாளையம் அணையில் சேர்ந்த திருப்பூர் சாயப்பட்டறைக் கழிவால் பாதிக்கப் பட்டோருக்கு நஷ்ட ஈடு பெற்றுத் தர பாடுபட்டவர்*

*நூற்றுக்கணக்கான சாதி மறுப்புத் திருமணங்களை நடத்தியவர், பெரியார் ஜீவா போன்ற தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு வைத்திருந்தவர்*

*இறுதிச் சடங்குக்குப் பிறகு நடைபெற்ற இரங்கல் கூட்டத்தில், தமிழ்த் தேசியப் பொதுவுடைமைக் கட்சியின் பொதுச் செயலர் பெ மணியரசன், ஈரோடு கண், குறிஞ்சி, எழுத்தாளர் கோவை ஞானி கரூர் தொகுதி அதிமுக சட்டப்பேரவை உறுப்பினர் எஸ் செந்தில்பாலாஜி, இலக்கிய விமர்சகர் வீ க சோமசுந்தரம் உள்ளிட்டோர் பேசினர்*

# தணிக்கையறிக்கை

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR

## RECEIPTS AND PAYMENT ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2010

| | | | |
|---|---|---|---|
| To Cash in hand | 6,185 50 | By Printing & Stationery | 63,134 00 |
| To Indian Bank | 3,114 00 | | |
| To State bank of India | 1,543 62 | By Xerox | 839 00 |
| To Book Sales | 8,780 | By Salary | 3,500 00 |
| To Donation | 9,000 00 | By Auditor Fees | 1,200 00 |
| To Membership Fees | 68 300 | By Honararium | 6,000 00 |
| To Interest | 32,387 00 | By Postage & Courier | 8,417 00 |
| To ICHR Grant | 22,500 00 | By Freight | 2,680 00 |
| To Fixed Deposit | 305,000 00 | By Bank Commission | 110 00 |
| | | By Travelling | 10 409 00 |
| | | By Telephone | 1,220 00 |
| | | By Meeting Expenses | 3,700 00 |
| | | By Fixed Deposit | 330,000 00 |
| | | By State Bank of India | 1,100 62 |
| | | By Indian Bank | 3,774 00 |
| | | By Cash in hand | 20,726 50 |
| | 456,810 12 | | 456,810 12 |

# TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR

## INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2010

| | | | |
|---|---|---|---|
| To Printing & | | By Sale of Book | 8,780 00 |
| Stationery | 63,134 00 | By Membership Fess | 68,300 00 |
| To Auditor Fees | 1,200 00 | By Donation | 9,000 00 |
| To Honararium | 6,000 00 | By Interest | 32,387 00 |
| To Postage & Courier | 8,417.00 | By ICHR Grant | 22,500 00 |
| To Freight | 2,680 00 | | |
| To Bank Commission | 110 00 | | |
| To Travelling | 10,409 00 | | |
| To Telephone | 1,220 00 | | |
| To Meeting Expenses | 3,700 00 | | |
| To Excess of Income over Expenditure | 39,758 00 | | |
| | 140,967 00 | | 140,967 00 |

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR

## BALANCE SHEET AS ON 31.03.2010

| LIABILITES | | ASSEST | |
|---|---|---|---|
| Fund Account | 374,301 12 | Fixed Deposits | 330,000 00 |
| | | Furniture | 11,000 00 |
| | | Steel Cup Board | 7,700.00 |
| | | Cash at bank | |
| | | *State Bank of India* | 1,100 62 |
| | | Indian Bank | 3.774 00 |
| | | Cash in hand | 20,726 50 |
| | 374,301.12 | | 374,301 12 |

## FUND ACCOUNT

| | | |
|---|---|---|
| 01.04 2009 | By Opening Balance | 334,543 12 |
| 31 03 2010 | By Excess of Income over Expenditure | 39,758 00 |
| 01.04 2010 | By Opening Balance | 374,301 12 |

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் இல்லங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

| | |
|---|---|
| ஆவணம் 1 - 13 | - இருப்பு இல்லை |
| ஆவணம் 14 | - ரூ. 100/- (இதழ் ஒன்றுக்கு) |
| ஆவணம் 15 - 19 | - ரூ. 150/- (இதழ் ஒன்றுக்கு) |
| நொபொரு கராஷிமா, வரலாற்றுப் போக்கில் தென்னகச் சமூகம் | - ரூ. 100/- |
| காவேரி (Kaveri) | - ரூ. 450/- |
| Ancient and Medieval Commercial Activities in the Indian Ocean (Testimony of Inscriptions and Ceramic sherds (நொபொரு கராஷிமா) | - ரூ. 300/- |

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெறவிழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

| | |
|---|---|
| கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் | - ரூ. 2000/- |
| நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் | - ரூ. 4000/- |

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ.50/- செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால், கூடவே வங்கிக் கட்டணம் ரூ. 100/- ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழ் நேரில் பெற்றுக் கொள்ளலாம். அல்லது அஞ்சலில் பெற ரூ. 50/- பணவிடை அனுப்பவும்.

முகவரி :
செயலர்/பொருளாளர்
தமிழகத் தொல்லியல் கழகம்
(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 010

Contact :
Secretary / Treasurer, Tamil Nadu Archaeological Society
C/o Department of Epigraphy and Archaeology
Tamil Univerisity, Thanjavur – 613 010


ISSN 0975-1831
9 770975 183100 3